உ

சிவமயம

திருச்சிற்றம்பலம்.

வேதாந்தசித்தாந்தவீரசைவசமயாசாரியராகிய

துறைமங்கலம்

# சிவப்பிரகாசசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# பிரபுலிங்கலீலை.

இதை

திருத்தணிகை

மஹாவித்வான்

சரவணப்பெருமாளையரவர்களாலும்,

புதுவை

நயநப்பமுதலியாரவர்களாலும்,

ஈசூர் கணக்கு

சச்சிதானந்தபிள்ளையவர்களாலும்

பதிப்பித்தபிரதிகளுக்கிணங்க

நாகை

சாம்பசிவபிள்ளையவர்களால்

பார்வையிடப்பட்டு,



...ச. ...லிங்க முதலியாரால்

தமது

...ணிவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை.

௧௯௦௬.

...விலை அணா-அ.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# கதியினட்டவணை.



ஆக உரு-கதி-ககரு திருவிருத்தங்கள்-ககருக.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# * பிரபுலிங்கலீலை.



## கணபதிகாப்பு.

சுரகு லாதிபன் றாய்மலர் நந்தனம்
பெருக வார்கடல் பெய்த வயிற்றினோன்
கரக நீரைக் கவிழ்த்த மதகரி
சரண நாளுந் தலைக்கணி யாக்குவாம். (க)

முதலாவது

## துதிகதி.



### சிவபெருமான்.

பூவாய்நெடுங்கோட்டுறுபசுந்தேன் கைகான்முடங்குபொறியிலித
னுவாயொழுகிற்றெனவுலக மளந்தமாலுநான்முகனுங்
காவாவெனநின்றேத்தெடுப்பத் † தானேயுவந்தெங்கரதலத்தின்
மேவாவமர்ந்தமாமணியைத்தொழுதுவினைக்குவிடைகொடுப்பாம். ()

---

* பிரபு—எல்லாமாய் அல்லவுமாய் இருக்குந்தன்மை.
லிங்கம்:—ஆன்மா. லீலை:—திருவிளையாடல்.
† தானேவந்தெங்கரதலத்தில் எனவும் பாடம்.

முள்ளமோரும்மெய்யடியா ராகவுள்ளத் துள்ளுமருள்
வள்ளலாரும்வசவேசன்மலர்த் தாடலையால்வணங்குவாம். (௬)

## சென்னவசவேசர்.

பங்கவளற்றவழிமாற்றி யொருநல்வழியைப்பகர்வார்போற்
றங்கண்மதியிற்பலபிதற்றுஞ் சமயருரைகடமைநீக்கி
யங்கதிலையிற்றிலிங்கதிலை யிற்றென்றருளும்வீரசைவ
சிங்கதிலைத்தவருட்சென்ன வசவன்றிருத்தாள்சிரத்தணிவாம். (௭)

## மடிவாலமாச்சையர்.

வார்க்குங்குமமென்முலைபாக னடியா * ரறுவைமாசடித்துத்
தீர்க்குஞ்செயல்போல்விச்சலமன்னவன்றன்சேனைசெய்பிழையைத்
தாக்குங்காராள்கொடுசின்ன பின்னமாகத்தடிந்திட்டுப்
போக்குங்கருணைமடிவால மாச்சன்பொன்னங்கழல்போற்றி. (௮)

## சைவசமயாசாரியர்.

பெண்ணிற்கரசதானுக வென்புபெருநீற்றறைபிச்ச
வெண்ணக்கமலமலர்ப்பொய்கை யாக வரங்கன்மாதையாய்
நண்ணச்சிறியசிறுகண்முடங்கு குலாயப்பரியாய்நகர்புகுதப்
பண்ணற்குரியவமுதூறத்தமிழ்த் தந்நால்வரையும்பணிகுவாம். (௯)

## சிவனடியார்.

பாவைகேள்வன்றிருத்தொண்டர் தொகையு † ளடியார்பத்திமையெலா
முருவமாகுநஞ்சோமனாதன்றழியுளுறு ‡ சரண
ராவணியானடியார்கண் மற்றையவர்களனைவருந்தாம்
விரவிநாளுமிருப்பவிடங் கொடுக்குமுள்ளம்விரிந்தன்றே. (௰)

# சிறப்புப்பாயிரம்.

## வேறு.

தண்ணிலவுபுனைசடிலத் திறைபுகழல்லமதேவன் சரிதத்தீம் பாற், புண்ணியருஞ்செவியாயிற்றமிழ்ச சங்கத்தான்முகந்துபுகட்டினானே, லெண்ணரியபுகழ்மலயத்திருந்தவனோர் வடிவெடுத்தானென்றகூறப், பண்ணியமுத்தமிழ்க்கவிதைச சிவப்பிரகாசப் பெரும் பேர்படைத்துளானே. (௧௧)

---

* அறுவை - ஆடை. † அடியார் - சைவசமயத்திலொழுகுபவர்.
‡ சரணர் - வீர சைவசமயத்திலொழுகுபவர்.

## அவையடக்கம்.

### வேறு.

அடலுறுமல்லம னரியசீரொடு
படுதலினயந்துபா ராட்டும்பன்முறை
மடனிகுமுலகமென் மொழியையவந்துவர்க்
கடலிலுமூழ்குவர் காலமொன்றினே. (கஉ)

### படலத்தொகை.

* நாற்கதிதருமிடர் கடந்துநச்சுநர்
பார்க்கதிமுதலிரு பத்தைந்தாங்கதி
மேற்கதிபெறவருள் விளங்குமல்லமன்
சீர்க்கதியிருபதோ டைந்துஞ்செப்புவாம். (கங)

### சம்பந்தம்.

கன்றியவைரிகள் காதுங்காதையும்
வன்றுயர்மதனநோய் வளர்க்குமாற்றமும்
புன்மொழிலினர்வறும் பொழுதுபோக்கலு
மன்றருளல்லம னமலலீலையே. (கச)

### அதிகாரிகள்.

புறங்கறையொழுகுசெம் புண்ணிலீயென
வறுங்கதைபுல்லியர் கொள்வர் ௦ மாமல
ருறுங்களிவண்டினல் லமனெண்காதையைப்
பிறந்துளபயன்பெறு பெரியர்கொள்வரே (கரு)

### பிரயோசனம்.

மயலளற்றூன்றுகோன் மல்குமன்பெனு
மியலெழுத்தெழுதுகோ லங்கலிங்கமாம்
வியனிலத்தளறுகோன் மதிவிளக்கினை
யயர்வறத்தூண்டுகோ லமலலீலையே. (கசு)

### விடயம்.

நன்றிகொளடிகளுஞன் குறநடந்துபோ
யென்றனிநாவினின் றெழுமிச்செய்யுளான்

---

* நாற்கதியாவன:—தேவகதி, மனிதகதி, விலங்குகதி, நரககதி.
௦ மா - திரு.

வென்றிகொளல்லமன் சீர்த்திமென்பயன்
கன்றலிலன்பராங் கன்றையூட்டுமால். (௧௭)

## உற்பத்தி.

### வேறு.

பரசிவம்பிரமமென்னப் பட்டொருகிரிவுமின்றி
யுரைமனமிறந்துநின்ற வொருசிவலிங்கந்தன்னின்
வருமுயர்சதாசிவன்றான் மற்றவன்றனைப்பொருந்து
மருமைகொண்ஞானசத்தி யவர்களாற்சிவனுதிப்பன். (௧அ)

சாற்றுமச்சிவனுக்கிச்சா சத்தியவ்விருவரானுந்
தோற்றுவனுருத்திரன்றான் சொல்லியவிவற்குச்சத்தி
மாற்றருங்கிரியையென்பர் மற்றிவரிருவர்பாலும்
போற்றுறுமரியுதிப்பன் * பொறியவன்சத்தியாமால். (௧௯)

அத்திருமாலுமாவு மளிப்பவந்துதிப்பன்வண்டு
மொய்த்திசைமுரலுஞ்செங்கேழ் முளரிவானவனவற்குச்
சத்திவெண்கமலையன்றோர் தரவருமுலகத்தோற்ற
நித்தனங்குருகுகேச னினைவுமாத்திரையினுமால். (௨0)

## அல்லமதேவன் சிறப்பு.

ஆக்குறுஞ்செயலதொன்றே யயன்றனக்காக்கலோடு
காக்குறுஞ்செயலிரண்டுங் கண்ணனுக்காக்கல்காத்தல்
போக்குதலென்றிம்மூன்றும் புராந்தகற்கமைத்தவர்க்கு
நீக்கருமிறைமைநல்கி நிறுவினன்குருகுகேசன். (௨௧)

முதலாவது

துதிகதி

முற்றிற்று.

---

கதி - க - ஆ - திருவிருத்தம்-௨௨.

---

* பொறி - இலக்குமி.

## இரண்டாவது

# கைலாசகதி.

வெள்ளிமால் வரையினுச்சி யிற்றிருந் தருளுமுக்கண்
வள்ளலா ரொடுசூளுற்று மதாரிநெடுங் கட்செவாய்ப்
பிள்ளைவாண் மதியுதற்றம் பிராட்டியல் லமனைக்காண்பான்
கள்ளமாயையை ஞாலத்து விடுத்தகக் கதியுரைப்பாம். (௧)

## கைலைச்சிறப்பு.

இயங்குவசிற்பவான யாவையுங்கலைமாதோடு
முயங்குபுமுன்னமீன்ற முளரிவானவன்வகுத்து
வியன்புவியண்டந்தன்னுள் விதித்தனன்றகுமிடங்கள்
வயங்கெழுமசுரர்நாகர் வானவர்முதலியோர்க்கும். (௨)

நான்முகவண்டந்தன்னு ணனிசிறந்தொப்பிகந்த
தூண்முகவிழிகளாற்கண் டும்பர்களுவகைபூப்பத்
தான்மிகுமருளான்மேனி சாற்றியபேராநந்தக்
கூன்முகமதியணிந்த கொற்றவன்கைலைக்குன்றம். (௩)

கொள்ளைவண்டிழிந்துதாது குடைந்துழக்குழுவடைந்த
கள்ளழிந்தொழுகுசெம்பொற் கடுக்கைமேய்ந்திலகுமேனி
வள்ளல்வண்புகழ்திரண்ட வளங்கெழுகைலைக்குன்றில்
வெள்ளிவத் * தத்தியாச மாகமேவிளைந்ததம்மா. (௪)

கண்பிசைந்தொருசேயின்னுங் கலுழினுந்தனைக்கொடுப்பன்
மண்பிசைந்துண்டமாயன் மறந்திடவியனல்ல
னண்பிசைந்திறைவனுக்கே நாடுறுமென்று
பண்பிசைந்தலைதிரண்ட பரிசினின்றிமைக்குன்றம். (௫)

ஒழுகுறுமருவியீட்ட மொலியினைகுவெண்டிங்கள்
பழகுறுமுடற்களங்காற் பாகசாதனன்கூர்ங்கோட்டு
மழகளிறுமிழ்மதத்தான் மலர்மிசைக்கடவுளூர்தி
யழகுறுநடையாலன்றி யறிதரப்படாவக்குன்றில். (௬)

---

* அத்தியாசம்-இப்பியை வெள்ளியென வறிதல்போல் ஒன்றை மற்றொன்றாக வறிவது.

விளங்கொளிதுளும்புமந்த வெள்ளியங்கிரியினுச்சி
துளங்கொளிவிரிக்குஞ்செம்பொற் சுடர்மணிச்†செய்குன்றொன்று
களங்கறுபராரைத்துய்ய கருப்புரக்குவாலின்மீது
வளங்கெழுசுடரொன்றுற்று வயங்குதல்போலுமன்றே. (எ)

அரசாட்சிமண்டபச் சிறப்பு.

இனையதிக்கைலைவெற்பி லிறையாசிருக்கையொன்றண்
டனையதையணியமாட்டா தப்புறம்போயினனென்
றெனையிகழ்பவர்களில்லை யிலங்குமம்மண்டபத்தின்
றனிவளமனந்தனாலுஞ் சாற்றிடற்கரிதுமாதோ. (அ)

ஆதனத்திருத்தற் சிறப்பு.

வேறு.

அன்னமண்டபத் ‡தங்கணனேர்பகன்
மின்னுசெம்மணி வேதிகையொன்றன்மேன்
மன்னுசெங்கதிர் மண்டலத்துற்றனை
யென்னவந்தங் கிருந்தனனென்பவே. (கூ)

கடவுட் சிறப்பு.

¶ தழுவியாயுடற் கூனிறைந்தந்தோர்
விழவுவாண்மதி வேணியின்மேலுறக்
கிழவியாகிக் *கிரிக்கோன்மகப்பெறு
மழகுநீர்மக ளாயிடைவாழ்வுற. (க0)

அங்கியென்னற் கடுப்பமேனோக்கிய
செங்கணொன்று திருநுதல்சேர்தரத்

---

† செய்குன்று - கிரீடாசைலம்.

‡ அங்கணன் - அழகியகண்ணன். கண்ணிற்கு அழகு அருள்

¶ இதுமுதல் ஆறுபாட்டுகளும் குளகம். "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்றாகலின்.

* மலையரசனுக்கு கங்கையும் பார்வதியும் புதல்விகளென்பது சில புராணங்களிலிருத்தலின், கிரிக்கோன் மகப்பெறு மென்ற தற்கு இங்ஙனம் பொருள் கூறப்பட்டது. அன்றி பார்வதி கரத்திற் பிறந்தமைபற்றிச சொல்லப்பட்டதெனின், கிரிக்கோனது மகவாகிய உமை பெற்றவென்றும் பொருளமையும்.

திங்களென்றுந் தினகரனென்றும்வா
ழுங்கண்மல்கு மருண்மடைபோன்றுற. (௧௧)

எண்ணுமன்ப ரிதயமென்புட்பு
கண்ணிபோன்றுவார் காதிடைத்தோடுற
நண்ணுமாதுமை நன்னுதற்பொட்டென
வண்ணநீல மணியிடற்றென்றுற. (௧௨)

நகந்தருங்கொடி கண்களைநாணியே
முகந்திரும்பு முறையிற்றிரும்புமான்
மகிழ்ந்திடங்கதிர் வீரமழுவலந்
தகுந்தகுந்தகு மென்றுதயங்குற. (௧௩)

சொற்றெறிந்த சுடர்மணிகங்கண
முற்றிலங்க ஒவொருகருங்கேழலின்
பற்றிருந்த மதாணியிற்பட்டெனப்
புற்றருங்கலை யுற்றரைபொற்புற. (௧௪)

புரத்தைவென்ற நகைக்குமென்போதினேன்
சிரத்தைவென்றசெங் கைக்குஞ்சிலைமத
னெரித்தகண்ணிற்கு மின்றெனக்கூற்றறுநேத்
தரித்தயீரக் கழலொடுதாளுற. (௧௫)

## கடவுளிடத்து உமையிருந்தமை.

இருந்தவாதி யிடத்திலிருந்தனள்
பரந்தவானும் படியுமுயிர்களு
மொருங்குதோன்ற வுதவிக்கருப்பி
வருந்திலாத மணிவயிற்றன்னையே. (௧௬)

## உமாதேவி சிறப்பு.

இறைவனங்க ணெனுமுசசுடர்களு
முறவுகொண்ட விருளெனுமோதிமே
லறவனென்றவவ் வண்ணல்புனைந்தரு
ணறவுமிழ்ந்த நறுமலர்தாழ்ந்திட. (௧௭)

---

¶ கண்ணி - பறவைகளைப் பிடித்தற்கு வைக்கப்பட்டதோர் கயிற்றுமுடி. † நகம் - மலை.

* ஒரு கருங்கேழல் - இரணியாக்ஷனைக்கொன்ற வராகம்.

‡ முச்சுடர் - சோமசூரியாக்கினி.

ஏற்றுவார்கொடி யெந்தைசடைப்பிறை
யாற்றுள்வீழ்வுற் றிறப்பதற்கெண்ணுறத்
தோற்றமேவு சுடர்த்திருநெற்றியின்
ஞாற்றுமோர்மணிச் சுட்டிநலந்தர. (கஅ)

ஈசனார்முக மென்னுமுளரியி
லாசைகூரு மளிவிழிக்காரருள்
வாசமாமலர் வாக்கிளவெண்ணகை
தேசுலாமணி யாகச்சிறந்துற. (க௯)

மாணப்பூண்புனை மற்றையுருப்பெனப்
பூணுட்பட்டிடா தோலையின்பூவென்ன
யாணர்சசெம்பொ னிலங்கொளியோலைமேற்
காணக்காதெனும் வள்ளைகவின்செய. (உ0)

ஓங்குவாயுடை யும்பனயனரி
தாங்குமாவி தணந்தொழிநாளினும்
வாங்குருவெழின் மங்கலநாணொளி
தேங்குபூணர சென்னசசிறந்திட. (உக)

அரவுலாஞ்சடை யண்ணலைப் † பிள்ளைதான்
பருவமூன்றினிற் பாடவின்பாறரும்
பொருவில்கொங்கைப் புகழெனப்பொங்கொளி
மருவுமார மணிவடந்தாழ்ந்துற. (உஉ)

பறந்திடாமணி வண்டுபடு ‡ மலர்
சிறந்தநீல மலரொடுசேர்பெற
மறந்திடாது மறைமுடியின்பொரு
ளறைந்துபைங்கிளி முன்கையமர்ந்திட. (உ௩)

தோலுடைப்பரன் றன்மனையாட்டிதன்
பாலடுத்ததெவ் வாறெனும்பட்டரை
மேலுடுத்து விளங்கவொண்மேகலை
நூலிடைக்குறு நோய்புரியாதுற. (உ௪)

---

† பிள்ளை என்பது - திருஞானசம்பந்தரை.

‡ மலர் - தலைமைப்பற்றித் தாமரைமலருக்கு ஆக்கப்பட்டது.

புத்தனிச்சம் படினும்பொருமையை
யெய்த்துமற்றை யிருமணந்தம்பியி
லத்தன்வைத்த வடிக்கமலங்களின்
முத்தரிசசெஞ் சிலம்புமுழங்குற. (உரு)

## மகாசபை கூடுதற்சிறப்பு.

இருந்தவாரரு ளம்பெருமாட்டிபாற்
குரும்பைநாணுமென் கொங்கைப்பொறையினல்
வருந்துநூற்பக வன்னமருங்குலா
ரரம்பைமாத ரளப்பிலரெய்தினர். (உசு)

## வேறு.

முல்லையந்தொடை யருந்ததிமுதலெழுமுனிவ
ரில்லறம்புரி துணைவியரெழுவரும்போய்
மெல்லரும்பெனக் குவிமுலைப்பணியலைமகளைச்
சொல்லருந்துதிசெய்து போய்த்தொடுத்தனர்தொழுது. (உஎ)

அன்னமொன்றறியா முடிக்கங்கையையறிந்து
துன்னவந்தலமருமெல் லணைகளின்றொகுதி
யென்னவம்புயத் தொருசதகோடியர்திலைகண்
முன்னடைந்துவெண் கவரிகளாட்டினர்முறையால். (உஅ)

அரவுகௌவிய கதிரெனப்பட்டசாந்தார்ந்த
பரவையல்குல்வெண் முத்தவாணகைக்கொலைபயில்விற்
புருவமென்மலர்க் குழற்*சசிம்காடிகள்புகன்று
மருவியம்பிகை மருங்குநின்றசைத்தனர்மன்றே. (உகூ)

எடுத்துவீணைக ளோர்நரம்பிது பிடறிதவென்
றடுத்தகேள்வராம் பிரமருமறிவரிதாகப்
படத்தபாம்பணி பரன்புடைமாதுசீர்பாட்டிற்
றொடுத்துவாலிய கலைமடைந்தையர்பலர்துதித்தார். (கூ0)

செப்பமைந்ததண் ணுமையிசைதாளமென்சிறுதாட்
டுப்பமைந்த¶வொண் சதிதழீஇச்சுவையபல்காய
முப்பமைந்தவின் கறியெனநடித்தனருழையோ
டொப்பமைந்தகண் ணுருத்திரகணிகையருவந்து. (கூக)

---

* சசி-இந்திராணி. ¶ ஒண் சதி-அழகிய மிதிப்பு.

எந்தைபாலுமை ‡ முக்குணங்களுமுருவெடுத்து
வந்தமாதர்களருகு நின்றனர்பணியகிலூஉ
வந்தமாதருட் டமோகுணமாதுமையருளாற்
சந்தமாயையென் பெயர்கொடுருக்கின்றனளே. (௩௨)

தெள்ளுவார்திரைக் கங்கையுங்கங்கையுஞ்சிறிய
பிள்ளையாகிய மதியமுமதியமும்பெரிது
துள்ளுமோரிள நவ்வியுநவ்வியுந்தொடர்பு
கொள்ளுமாறவ னொருங்கினைருத்திரருமாங்கள். (௩௩)

சங்கமொன்றுட னொன்றதாகுறவொளிர்தழைக்குங்
துங்கநேரிய மன்னவாயுறவலைசுருட்டும்
பொங்குவேலைவந் தெனவரிக்கணங்களற்புதத்த
வெங்கணாயகன் பேரவையிடத்துவந்திறுத்த. (௩௪)

முகங்கணான்கிலு நான்மறைவிதிமுறைமுழங்க
வுகந்துகையிரு நான்குநான்குசசியிற்குவியச்
சகந்தருஞ்செயற் பிரமர்களளப்பிலர்தையல்
பகுந்தமேனிய னவையிடைப்புகுந்தனர்பரவி. (௩௫)

அயனுமாயனு மெனிலுயர்ந்தவரென்பதன்றிக்
கயிலைநாயக னமர்திருவோலக்கங்காண்பா
னயனமாயிர மிலாமையினதிகனுமென்று
வயிரவான்படை யிந்திரரெண்ணிலர்வந்தார். (௩௬)

உரகர்சித்தர்கள் வித்தியாதரர்சுரருயர்கிம்
புருடர்மெய்க்கதிர் முதலியகோடிசைபுரப்போர்
கிருதர்மற்றுளார் விழிபிதுங்கிடவுடனெருங்க
வரதனத்திரு வோலக்கங்காணியவந்தார். (௩௭)

அழிவுமாக்கமு முறையினுற்செயும்வலியடைந்தார்
மொழியும்யாக்கையு மனமுநல்லறநகரின்முயன்று
சழியுமாறமுக் காலமுமுணர்தலைகழன்றார்
பழியிலாவதிட் டாதியாமுனிவரர்பரந்தார். (௩௮)

குழவிபால்குடிப் பதுகடல்குடிப்பதுகுழவி
பழகுமாறணன் மண்ணெடுத்துண்பதுபடைப்பு

---

‡ முக்குணம் - சத்துவம், இராசசு, தமசு.

முழுதுமோர்தளர் நடைமகச்செயலெனுமுரண்கொள்
வழுவிலாவருட் கணங்களெண்ணிகந்தனவந்த. (௩௯)

செருக்கொடுஞ்சிவ நிந்தைசெய்வாய்க்கிலைதீர்வு
விரிக்கினென்றுமுன் சிறுவிதிதலையறவெட்டி
யெரிக்குநல்கிகிந் தனைசெயாமறிமுகமியைத்துத்
தருக்கிநின்றவவ் வீரன்வந்தொருபுடைசார்ந்தான். (௪௦)

காதியாயிரமால்களைப் பிழிந்துமாங்கனிபோற்
கோதுவீசினுங் கடல்கவிழ்த்தனையசெங்குருதி
பாதியாயினு நிரம்புறக்கபாலபாணியனாய்
மாதுபாதிய னவையிடைப்புகுந்தனன்வடுகன். (௪௧)

வீரமாதருக் கில்லையென்றுரைப்பதென்விளங்க
வீரமாதென வறிகிலீரோவெனவிளம்பி
வீரயோகினி வெள்ளமோடமர்பொரவிரும்பும்
வீரகாளியும் புகுந்தனளவையிடைவிரைந்து. (௪௨)

ஊன்றுஞானமோ டுயர்வயிராகநல்லொழுக்க
மூன்றுகாலெனக் கொண்டரன்முகத்திளமுறுவ
றோன்றுமாறுநின் றாடினன்சுடரவனிருளைப்
போன்றுமாயையைத் தொலைத்திடுபிருங்கியென்புனிதன். ()

படிகொண்மாமுடிக் கங்கணத்திறைபதம்படுமொண்
முடிகள்யாவையும் படுகழனந்தியெம்முதல்வ
னடிகளேந்துகை யுறவடித்தொதுக்கியவ்வவையைக்
கடிகொண்மாலையம் பிரம்பொடுதிரிந்தனன்களித்து. (௪௪)

பெய்யுமாமழை முகிலெனப்பெரியவாய்முழவந்
துய்யமாமதி யனையவெண்சுரிமுகசங்க
மைய * வாணனும் † பானுகம்பப்பெயரவனுங்
கையும்வாயுமொத் ததிர்த்தனர்செவிகரங்கவிழ்ப்ப. (௪௫)

துதிப்பரோர்சிலர் பாடுவரோர்சிலர்துள்ளிக்
குதிப்பரோர்சிலர் கைகளாற்றோளிணைகொட்டி

---

* வாணாசுரனுக்கு ஆயிரங்கைகள் - கைலாயத்தில் முழவவாத்தியஞ் செய்பவன்.

† பானுகம்பனுக்கு ஆயிரம் வாய்கள் - கைலாயத்தில் சங்கவாத்தியம் செய்பவன்.

யதிர்ப்பரோர்சிலர் நெக்குநெக்குருகிநெஞ்சகமெய்
விதிர்ப்பரோர்சில ராயினரவையிடையிடைந்தோர். (௪௬)

படைக்கலங்களினொளி யிமையவரொளிபரித்த
தொடைக்கலங்களி னொளியரம்பையர்பணைத்தோளி
னிடைக்கலங்களி னொளியெலாமிருளிறைமிடற்றி
னடைக்கலம்புக நிறைந்தனபரந்தபேரவையில். (௪௭)

## கடவுளுக்குந் தேவிக்குஞ் சம்வாதம்.

### வேறு.

இன்னணமவையிடை யிருந்தவெம்பிரான்
றன்னொடுவினவுமோர் தகைமையுன்னுபு
கன்னலுமமுதமுங் கைப்பவெம்முடை
யன்னைதன்வாய்திறந் தறைதன்மேயினாள். (௪௮)

தலைவநின்னவையிடைச் சார்ந்தவிப்பெரு
நலனுடையரெலா நணுகிவெம்பவத்
தலைகிலார்கியின் படைவரோவலா
னிலையிலரோவிது நிகழ்த்துவாயென்றாள். (௪௯)

விளங்கிழைநன்றுநின் வினாவென்றெந்தைமண்
ணளந்தவனயன்முத லாயினோருமின்
புளங்கொளுநாமரு பத்தொடொன்றுறத்
தளைந்துளகிரியையாற் சார்கிலாரென்றான். (௫௦)

### வேறு.

அனையதேனுமரூபக் கிரியைகளனைத்தும்வல்ல
நினைவுறுசூட்சியொன்று நீயெனக்குரைத்தியென்னாப்
பனிமலைதவஞ்செய்தீன்ற பவளவாய்மடந்தைகூற்
நனையவிழ்கொன்றைவேணி * நம்பன்மற்றிதனைச்சொல்வான். ()

போகபூமியினிற்போக தனுவினாற்பொருந்தலாகா
தேகமாமின்பசித்தி யியம்புறிற்கருமபூமி
யாகமானதுகொண்டன்றி யாதலான்ஞாலத்தெய்தி
யோகமாநெறியினின்றோ ருண்மைசாதித்துக்கொள்வர். (௫௨)

---

* நம்பன் - கடவுள்.

என்றிதுகொழுநன்கூற விளங்கொடியனையதாயி
னொன்றொருபக்கணுறாலத் துவமையின் ஞானசித்தி
னன்றறவுணர்த்தவல்ல குரவன்யார்நவிறியென்னக
குன்றணிமதியமொப்பக் குனித்தவன்கூறலுற்றான். (ருங)

தொல்லையிலுயர் *சுஞ்ஞானி தாய் †நிராங்காரனென்போ
னெல்லையிறந்தகள்செய்ய வெமதுமெய் ‡ வடிவத்தானே
யல்லமனாமமைந்த னுயிரமலையானறன்னை
வில்லுறழுநுதலாயகாண்டன் கணக்கரியதென்றான் (ருச)

என்றலுமுமையவல்லி பெனக்கரிதொன்பதென்பகொ
லுன்றனியல்லமன்ற னுண்மையையறியவேண்டி
னின்றவர்தமகளெலாமுமெ யொன்றுநிகழ்ந்துரைப்ப
வன்றினாபுரமெரித்த வண்ணலையாமென்சொல்வான் (ருரு)

முனிவுறெல்லறியவுன்றன் மொழிபளவல்லமாதே
வினைதபுமன்பரன்பால் வேண்டியபடியவறி
யனையவர்விழியிற்றோன்றி யருளுவனலமதேவனை
றணிதியல்பியாவராலுஞ் சாற்றிடற்கரியதென்றான். (ருசு)

மெய்ம்மையிம்மாற்றமாதும் வேறுளார்க்கியான்செய்மாயை
பொய்ம்மலிசெயலிற்றப்பிப் போமெனிற்காண்பலென்று
வமமலைமகடருகி யறைதலுநின்றனற்றன்
மைம்மலிகுழலாய்காண்கு வெனறிதுவள்ளல்கூறும். (ருஎ)

இன்னணஞ்சூளியம்பி யினிப்பிறிதிருத்தியாயிற்
பொன்னவிர்சுணங்குபூத்த புணர்முலைமடவாய்சொல்வி
னின்னிடைவருமென்றண்ண னிகழ்த்தலுமிமையவல்லி
யென்னுரைதவறுதென்று நெடுமொழியிசைத்துப்பின்னர். (ருஅ)

## மாயையைப் பூமிமேல் விடுதல்.

ஆயிடையருகுநின்ற தமோகுணவடிவமாகு
மாயையைவிளித்துநீபோய் மண்ணிடையல்லமப்பேர்

---

* சுஞ்ஞானி - பொருளைப் பொருளாகக்கொள்ளும் ஞான முடையவன்.

† நிராங்காரன் - அல்லதை யானெனக்கோடல் தவிர்வோன்.

‡ வடிவந்தானே என்பதும் பாடம்.

நாயகன்றனையறிந்து நணுகுதியென்றுகூறி
யேயினளவள்வணங்கி யினையதொன்றியம்பலுற்றாள். (௫௯)

மாயை சூளுறவு.

அல்லமணியல்பறிந்தங் கணைகுவனழுவுமாயின்
வல்லிதின்வலிந்துபற்றி யீர்த்திவண்வருவலென்று
சொல்லினளொருசூள்வேலை சுவறவுண்டிடுவலென்று
புல்லியவெறும்பொன்றாற்றல் புகல்வதுபோலவன்றே. (௬௦)

மாயை பூமியடைவு.

தன்னளவறியாண்மாழ்கித் தண்மதிதவழும்வேணி
முன்னவனவையுணின்று மொழிந்தவாதுண்முடிப்பான்
பன்னகமுடிபரித்த பார்மிசைசசெலவைநேர்ந்தாட்
துன்னினளெய்திஞாலவெல்லிமிசைமாயைமாதோ. (௬௧)

இரண்டாவது

கைலாசகதி

முற்றிற்று.

---

கதி - ௨ - றி - திருவிருத்தம் - ௬௧.

மூன்றாவது

# மாயையினுற்பத்திகதி.

பூதலத்தைப்பொருந்துபுமாயையென்
றோதலுற்றவொருபிடிநுண்ணிடை
மாதவத்தர்மனங்கள்கலங்குறச
சாதமுற்றுவளர்ந்தமைசாற்றுவாம். (க)

## நாட்டுச்சிறப்பு.

களவகவெண்மதிநெஞ்சங்கவற்றுமோர்
துளங்குசங்குடைத்தோன்றன்மணத்தணி
வளங்கொண்மண்மகண்மார்பின்மதாணிபோல்
விளங்குமென்பவிளவலதேயமே. (௨)

வாவியாவுமதன்பெருந்தூணிசெய்
யாவுமாரனெடுக்குஞ்சிலையிட
காவெலாமவன்காகளசாலைகள்
பூவைமார்மனைபோர்க்களமென்பவே. (௩)

பொறைக்கயிற்றிற் புகழையின்சொல்லெனும்
விறற்கயிற்றின் விருந்தைக்குரவர்சொன்
மறைக்கயிற்றின் மனத்தைத்திருவைநல்
லறக்கயிற்றி னசைப்பவரெங்குமே. (௪)

வறியனுவன் வடதிசைமன்னவ
னறிவிலாள னனந்தனுமாவனோர்
சிறியனுவன் சிலைமதன்பூம்பொழில்
வெறியுலாவும் விளவலத்தெய்தினே. (௫)

## நகரச்சிறப்பு.

இணையிலாதவினையவளம்பல
நணுகிவாழும்விளவலநாட்டிலவ்
வணியினுப்பணமூத்தும்விலையிலா
மணியின்மேவும்வனவசைமாநகர். (௬)

படிக்குளீரப்பலாப்பழுத்தொண்புவி
வெடித்தவாயினனந்தன் மணிவெயி
லடுத்துவானத் * தமர்மதியைத்தொடாக்
கடுத்தவேள்குடைக்காம்பெனத்தோன்றுமால். (எ)

நறவவிழ்ந்தநறுமலர்சோறும்வண்
டுறவருந்தி † யிருலுற்றுடுங்குமா
லறவர்தங்களகந்தொறுமையமுண்
டுறவர்தங்குகைதுன்னுதல்போலவே. (அ)

வாவிச்செங்கமலங்களில்வல்லிருண்
மேவித்துஞ்சிவிடிதருகாலையிற்
காவிற்சென்றுகளிவண்டினங்குயில்
கூவத்தண்மதுக்கொள்ளைகொண்டுண்ணுமால். (கூ)

பெடையொடுற்றுப்பிரிவில்லைபைங்கிள்ளைகள்
குடியிருக்குங்குளிர்பொழில்வாய்மலர்ப்
பொடியுதிர்க்கிலவேலவிபோய்வயன்
மடையுடைக்குமதுப்பெருவெள்ளமே. (க0)

‡ சேலுலாவித்திரியுநதிப்புனன்
மாலியானைமறையக்கதிர்த்தலைச
சாலிநீடித்தழைத்துவிளைவயல்
காலினேடிக்கடிதுவிழுமரோ. (கக)

வரிக்கயல்செங்கமலம்வரிவளை
யிருக்கையான்மலரம்பினையேந்தலால்
விரிக்குமஞ்சிறைமென்னடைப்புள்வயல்
செருக்குவின்மதன்சேனைநிகர்க்குமால். (கஉ)

நபிர்கடற்றுயினாரணன்றன்னுருக்
கொளவளிப்பவர்கையிற்கொடுத்திடும்
வளைபிறக்குமிடமெனவண்புனற்
குளமனைத்துங்குடவளைமொய்க்குமால். (கங)

---

* அவிர்மதி என்றும் பாடம். † இருல் - கூடு.
‡ ஆற்றுக்காற்பாய்ச்சற் சிறப்பு.

### வேறு.

தாழ்ந்தோருயர்வரென்றுமிக வுயர்ந்தோர்தாழ்வரென்றுமறந்
சூழ்ந்தோருரைக்குமுறைகண்டா மதில்சூழ்கிடந்ததொல்லகழி
தாழ்ந்தோரனந்தன்மணிமுடிமே னின்றன்றுயர்ந்துதடவரையைச
சூழ்ந்தோர்வரையினுதிப்பவன்றுட் கீழ்நின்றதுபோய்ச்சூழெயிலே.

சொற்போர்புரிவர்நான்மறையா றங்கமுணர்ந்ததொழுகுலத்தோர்
விற்போர்புரிவர்நெடியபிலை யிராமனனையவிறல்வேந்தர்
பொற்போர்புரிவர்பிறர்பொருளுந் தம்போற்பேணிப்புரிவணிகர்
நெற்போர்புரிவரந்நகரில் வேளாண்குலத்துநெறியினரே. (க௫)

உடுப்போர்க்குடுக்குந்துகில்களா லுண்போர்க்குண்ணும்பொருள்களாற், றொடுப்போர்க்கெடுக்குமலர்களா லணிவோர்க்கணியுஞ்சுடரிழையா, லடுப்போர்க்கடுக்குமனைகளாற் குறைபாடுடையதன்றது தான், கொடுப்போர்க்கிரப்பாரில்லாத குறையொன்றுளதுகூறுங் கால். (க௬)

ஈசனளித்தவொருகோட்டி யானைக்கியாங்களிணையாயின்
வாசவனைத்தாங்கிருகோட் டியானையெம்மைமானுமெனும்
பாசவுற்றகால்யானையொடு பாண்டிலிழுக்கும்பகடெயிற்
றேசினிரதப்பரிசிறந்த வென்னும்பரிகடெருவகலா. (க௭)

மறையுங்கலைகள்பற்பலவு முழங்குமொலியுமங்கலஞ்செய்
பறையுங்குழலும்யாழுமியம் பொலியுநகரியும்பரிமாவு
நிறையுந்தெருவிலோடுமணித் தேரினொலியுநிறைகடலி
னறையுந்திரையிற்சென்றுவிசும் பமரர்செவியினடைந்திடுமால். ( )

வேலைபருகுமென்சுடர்த்தொடியதோண்மாநுமையைவிடைகொண்டு
பேயுமகன்றவரற்கரிய கைலைமலையைப்பிரிந்தெய்தித்
தூயமனமுங்கலங்கவருந் தவர்வேள்குலத்தோர்வீங்க
மாயைபிறந்தவனவசமா நகரின்வளத்தையார்சொல்வார் (க௯)

### அங்கரரசன் சிறப்பு.

### வேறு.

இம்மாநகரிற்கரசாகியிருந்துவாழ்வோ
னம்மால்புணருஞ்செயன்மாதரையாகம்வைத்தல்
சும்மாபுகழன்றெனவிந்தையைத்தோளில்வைத்தோன்
கைம்மாறுவேண்டாமழைபோன்மமகாரனென்பான். (௨0)

திறைதானளக்குந்திறல்வேந்தர்க்கரியசீரான்
குறைதானிரக்குமவர்க்கோடிக்குறைகளிற்பா
னிறைதானமெற்புமணிநாகமுநின்றுதாங்கும்
பொறைதானெடுக்குதிருமாற்றல்பொருந்துதோளான். (௨௧)

இரப்பார்வரினோடிஞாலமெலியதன்றிக்
கரப்பார்கரக்கும்பொருளன்றெனவீகைகற்றே
யுரைப்பாருரைக்குமுரையாயும்புகழில்வைத்தோன்
றரைப்பாலுவமையிலையாகத்தருக்கியாழ்வோன். (௨௨)

### அவன்மனைவி சிறப்பு.

அன்னான்மனைவி யணர்வார்குழலையவேற்கண்
மின்னார்மருங்குறளர்க்கொல்கிமெலியவிம்மிப்
பொன்னார்சுணங்குவிரிபூண்முலைப்பூங்கொம்பன்ன
வின்னாமுதமொழிமோகினியென்னும்பேரார். (௨௩)

ஒன்றானசம்பன்மருங்காயிழையுய்த்தமாயை
குன்றாதபோற்றன்முனிவோருளாற்குன்றமாறு
பொன்றாதபொற்பிடகியள் * பூநகருப்போர்த்துபெற்று
றென்றாலியவரேகிணையாவினியாவசசொல்லாம். (௨௪)

### அவ்விருவரும் மகவுக்காக நோற்றமை.

வேறு

இம ∪ மமகாரனு † மோகினியென்று
மையமல்மென்குழல் பார்விழிமாது
மம்மகவின்மையி னோருநெய்தி
மெய்ம்மலி நோன்புவிளைத்தனரன்றே (௨௫)

### மோகினி கருப்பமடைதல்.

முன்னரியநோன்புசெய் மோகினிமாதினை
றன்னுதரந்தருமை தண்ணருளாலே

---

* பூநகரும்பொன்றுபெற்றாள் எனப் பிரதிபேதமுமுண்டு.

∪ மமகாரம் - எனதல்லதை எனதாகக் கோடல்.

† மோகம்-பிரியமல்லாததைப் பிரியமாகக் கோடல். இவ்விரண்டையும் ஆண்பெண்ணாகக் கற்பித்தது, இதிகாசமாக்கவேண்டி.

மன்னியன்மாரன் வலப்புயமாடக்
கன்னிகை † மாயை கருப்பமடைந்தாள். (உசு)

## கருப்பகாலக்குறி.

முத்தணிகொங்கை முகங்கள்கறுத்தாண்
மெய்த்திருமேனி விளர்த்துநரம்பு
பைத்தனமீது பரப்பவிருந்தாள்
பொய்த்துயில்கொண்டு புரிக்குமுவந்தாள். (உஎ)

## கருவுயிர்த்தமை.

இன்னணமையிரு திங்களிருந்து
பின்னரு ‡ மோகினி பெண்மகவீன்று
டன்னிகர்கின்ற * சலஞ்சலமொன்றிய
கின்னெனிமுத்தினை யீன்றதையொத்தே. (உஅ)

## பிறந்துழிவிழாவெடுத்தமை.

சங்கொடுதண்ணுமை சசசரிதாளம்
பங்கியம்வெந்துடி யார்முரசங்கண்
மங்கலமங்கை மகப்பெறுநாளி
லங்கசன்வெம்முர சென்னவதிர்ந்த. (உகூ)

தூண்டொடிபோன்மக டோன்றவுவப்புற்
றுண்டகைமன்னவ னந்தணர்கொள்ளப்
பூண்டிகின்மாமணி பொன்னிலமற்றும்
வேண்டினயாவும் வெறுப்பவளித்தான் (௩0)

## அப்போது மன்மதன் செயல்.

### வேறு.

இங்கொருமாயையென்னு மெழின்முளைதோன்றலோடும்
பொங்குறுமுவகைநெஞ்சம் பொறுக்கலனாகியெய்யும்
வெங்கணைமழையுந்தூவு மென்மலர்மழையுமொன்று
வெகுகணுமதனவேணின் றிடையறச்சொரிந்தானம்மா. (௩க)

---

† மாயை - பொருளல்லதை பொருளாகக்கொள்ளும் பிராந்தி.

‡ இவ்விருவர்பாலு மாயை யுதித்ததெனல் மமகாரமு மோகமும் மேலிட்ட அவசரத்தில் உதிப்பது பிராந்தியெனக் குறிப்பிக்க மோகினி பெண்மக வீன்றுளெனுர்.

* சலஞ்சலம் - வலம்புரிச்சங்கு.

## அப்போது தவஞ்செய்வோர்க்கு நேரிட்ட இடையூறு.

கண்ணகனிலத்தகங்கைக் கரையிலுமுழையிடத்தும்
† புண்ணியவனத்துமெய்திப் புற்றுமாய்மரமாயுற்றுந்
தண்ணியபுனலிற்றீயிற் சார்ந்துமூண்டுயிறுறந்து
பண்ணியதவத்தோர்நெஞ்சும் பதைத்தனமயலின்மூழ்கி. (௩௨)

## அவர் அதற்குக் காரணமாராய்ந்திருந்தமை.

ஐம்பெரும்பூதமெல்லா மடுக்கழிந்தொழியும்போதுங்
கம்பமினமதுநெஞ்சங் கலங்கியதென்னைகொல்லோ
வம்புறு * செயலீதிங்கு வந்தவாறேதுவாறென்றுஞ்
செம்பொருளுணர்ந்தசீர்சால் செய்தவரிருந்தகாலை. (௩௩)

## தூர்வாசர் வருகை.

தளர்ந்துழியுதவுங்கல்வி தானெனத்துருவாசப்பேர்
கொளுந்தனிமுனிவர்க்கோமான் குறுகலுமுனிவரெல்லா
முளங்கனிவாநின்றேத்தி யுயர்தவிசிடையிருத்தி
வளங்கெழுமலர்கடூவி வந்தனைசெய்துசொல்வார். (௩௪)

## முனிவர்கள் வினா.

என்றுமெம்முள்ளமெல்லா மெழுநியவிளக்குப்போல
நின்றிடுமின்றென்கொல்லோ நிலைதடுமாறுகின்ற
தென்றன்முனிருந்தசெய்ய சிறுசுடர்போலவைய
நன்றிதையுணருமாறு நவின்றருள்செய்திடுயென்றார். (௩௫)

## தூர்வாசர் விடை.

சயகரியொருகூளாற்றன் றமோகுணவடிவமாயை
மங்கையைவிடுப்பவன்னாள் வனவசைநகரிற்பிள்ளைத்
திங்களினுதித்தாளின்று செய்தவக்கிழமைபூண்டீ
ருங்கணெஞ்சதனாலாற்ற லுடைந்ததென்றவனுரைத்தான். (௩௬)

## அதனை அங்கீகரித்தமை.

அருந்தவமுனிவீர்கூறிற் றுண்மையேயன்றியெங்கள்
பெருந்தவமுயலுநெஞ்சம் பிறழ்தாற்கேதுவில்லை

---

† புண்ணியவனம் - நைமிசமுதலியன.
* செயலிஃதிங்கு எனப் பிரதிபேதம்.

யிருந்துளம்வருந்தியாய்ந்த வெம்பிடையையெல்லாம்
பரிந்தனவருளானீயெம் பால்வருகையினாலென்று. (௩௭)

## அதனை விரித்துரை யென்றமை.

முனிவரர்துருவாசப்பேர் முனிவர்கோன்றனைவழுத்திப்
பனிமலைவல்லியேவப் பட்டெழின்மாயையென்னும்
வனிதையிவ்வுலகில்வந்த வாறுநீவிரித்தியாங்க
ளினிதுணர்வுறுமாறோது கென்றலுமவனுரைப்பான். (௩௮)

## அவ்வாறு விரித்துரைத்தமை.

கயிலையோலக்கத்துற்ற கண்ணுதலல்லமன்ற
னியல்பினையறிதறேற்று மென்றமையுடனுரைப்ப
மயிலியலறிவலென்று மாயையைவிளக்கைக்காண்பான்
பயிலிருளினைவிடுத்த பரிசெனவிடுத்தாளன்றே. (௩௯)

## அவ்விடையூறு நீக்குமாறு கூறினமை.

காரணமீதுவேயெங்கோன் கைலையைவிடுத்துமாயை
தாரணிதனில்வரற்குத் தக்கவம்மாயையென்னு
மாரணவிடங்கலந்த மயக்கமல்லமனென்றிட்ட
பேரணிகலுமுன்றன்னை நினைந்திடிற்பெயருமன்றே. (௪௦)

பிணிதபவேண்டில்வாழ்நாட் பெரிதுறவேண்டிற்செல்வ
மணிதரவேண்டிற்கல்வி யறிதறவேண்டில்ஞானம்
பணிதரவேண்டின்முத்திப் பயன்பெறவேண்டிலென்று
மிணையறுமல்லமப்பே ரெந்தையைநினைப்பரென்று. (௪௧)

புகன்றவருளத்திற்றுன்பம் போக்குபுதுருவாசன்று
னகன்றுதன்னிடத்தடைந்தா னன்றுதொட்டருந்தவத்தோர்
மகிழ்ந்தருளல்லமன்றன் மலரடிமனத்திற்றாங்கி
யுகந்தவன்புகழாய்வந்த வாறெலாமுரைக்கலுற்றார். (௪௨)

## முனிவர் துன்பம் நீங்கியிருந்தமை.

நெஞ்செனுமகலிலன்பா நெய்நிறைத்துள்ளமென்னும்
பஞ்சுருதிரியினுச்சி பற்றிடவல்லமப்பே
ரஞ்சுடரிலகவேற்றி யருந்தவர்மாயையென்னுந்
துஞ்சிருளகன்றிருந்தார் தொல்லைமாதவங்கள்செய்து. (௪௩)

மந்தரகிரிப்பேர்பெற்ற மத்தெறிகடல்போலயர்
சிந்தனைகலங்கிமெல்லத் தெளிந்தமைதெரிந்துரைத்தாம்
வந்துமண்பிறந்தவன்றே மாதவர்மனங்கலக்கும்
வெந்திறன்மமகாரன்றன் மகடிறம்விளம்பலுற்றும். (சசு)

## தந்தை நாமகரணமுதலியசெய்தமை.

கார்ந்தம்வலியுமிரும்புபோற் கண்கடன்றோற்றப்பிணித்து
நேர்ந்தமனமோகனுமென்ன னியாயமன்றென்றம்மனத்திற்
போர்ந்தவாசைப்பெருங்கடலைப் புகட்டுமகவைக்கண்டுவேர்து
வேந்தன்மாயையெனுநாமம்விளம்பிச்சிறப்புப்பலசெய்தான். (சரு)

## மோகினி மகவைவளர்த்தமை.

மாயைப்பெயர்கொண்மகவைநறு மஞ்சணீர்ந்துகவைக்காலி
னேயக்கிடத்திநீராட்டி யிணைக்கணுந்திநீருதி
நேயத்துகிலின்மெய்துடைத்து நெகிழ்மென்முலையோடுறத்தழுவி
வாயிற்றிவலைகொடுதேய்த்து மண்பொட்டணிந்துநீறிட்டு. (சசு)

கண்ணிற்கமையமைமெயழுதிக் காற்குச்சதங்கைபொற்றண்டை
நண்ணப்புனைந்துபொன்னரைஞாணுவிற்பூட்டிப்புலியுகிர்சேர்
வண்ணப்பசும்பொனணிமார்பில்வனைந்துசிறுமென்முடிசேர்த்திப்
பெண்ணிற்கரசிதிருநுதற்பொற் பிறைமேற்சுட்டியொன்றணிந்து ()

போக்கும்பொருளாற்கண் ச்சில் போக்கியன்பான்முலையூட்டித்
தூக்கும்பவளக்காற்பசும்பொற் றொட்டின்மலியக்கிடத்தியே
பார்க்குஞ்சுவையானமுதமே பார்வேந்தணியேயென்றுயரந்
தீர்க்குங்கரும்பேகண்மணியே திருவேயென்றுசீராட்டி. (சஅ)

படியமெருசெய்யாளனசசெய் விளையக்காக்குஞ்செயல்போலப்
படியில்கல்விவிரும்பினோன் பாடம்போற்றமதுபோல
வொடிவில்செங்கோன்மனுவேந்த னுலகம்புரக்குமுறைபோலக்
கொடியகோன்புசெய்தீன்ற கொடியைவளர்த்தாண்மோகினியே. ()

## மாயை வளர்தற் சிறப்பு.

கள்ளமாயைதன்னெழில்போற் கண்டதில்லையென்னமிக
வுள்ளம்வியந்துதலையசைப்ப தொப்பவசையுஞ்சுடர்பார்த்து
மெள்ளவிரலொன்றினைச்சுவைத்துக் கிர்பூஞ்சதங்கைத்தாளுதைத்து
விள்ளுமலர்வாய்குவித்தழுது மீளநகைத்துங்கிடக்குமால். (ருo)

மாயைகவிழமுகங்கவிழ்ந்த மதனனிருந்தானவளிருப்பப்
போயசிலையொன்றெடுத்தெழுந்தான் பொன்னுலியன்றபாவையெழ
மேயவனங்கவேணடந்தான் வேந்தன்பயந்தமகணடப்பத்
தூயதவஞ்செய்தைந்தவித்த துறவினோர்பாலோடினன். (௫க)

குழலும்யாழுமினியவெனக் கூறுவண்ணமென்கனிவாய்
மழலைமொழிந்துமுடற்கின்ப மருவவோடிமேல்விழுந்தும்
விழையுமமிழ்தின்மிகவினிமை விளையநகருஞ்சுவையடிசில்
செழியசிறுகையாலளைந்துஞ் செய்தாண்மோகமீன்றோரை. (௫உ)

பரவுபெருஞ்சீரல்லமனைப் பற்றவந்தமதியாற்றன்
னுருவநிழலைப்பற்றநினைந் தோடியோடிக்கலுழ்ந்திடுவாள்
பொருவின்மதியமேன்முனிந்து பொங்குமழலைவீசாமன்
மருவியுறவுகொள்வாள்போல் வாவாவென்னவழைத்திடுவாள்.(௫௩)

## மாயை பெதும்பைப் பருவமடைந்தமை.

மாதிப்பரிசுதந்தைதாய் மகிழவளர்வுற்றரசிருந்த
நீதிக்கிழவனிறப்பவவ னெறிசேரிளஞ்சேயவன்றவிசின்
மீதுற்றதுபோன்முன்முளைத்த வெண்பல்விழவேறெயிறுதிப்பப்
* பேதைப்பருவங்கடந்துமேற் † பெதும்பைப்பருவநண்ணினள். ()

## அப்பருவச்சிறப்பு.

செய்யவல்லகம்பியன்செய் சிஙகஞ்சுமந்தமணியணைமேற்
பையவந்துமணிமௌலிப் பார்வேந்திருக்கும்பரிசுபோல்
வெய்யகுதம்பைவளர்த்தகலவிழுநீர் வள்ளைக்காதினிடைத்
துய்யபசும்பொன்மணிகுயின்ற துணைத்தோடமையத்தோன்றினள்,

## பருவத்தின் வளர்ச்சி.

மட்டுக்கணைவேளரணுக வளர்த்தருழற்காடலர்விரவிக்
கட்டுற்றதுநம்பரன்களத்திக் கடுவும்விழிகள்சிறிதுற்ற
முட்டித்துறவாம்பறவைமயன் முடியிற்படுதன்மெல்லமறைந்
தெட்டிப்பார்ப்பவெனமுகங்கொண் டெழுந்தமார்பினிளமுலைகள்.()

அன்னநடையுமன்னமிலா வையர்நடையுந்தளர்வெய்தக்
கன்னிநடக்குநடைகற்ருள் கரும்புகசக்குமொழிபெற்ருண்

* பேதை - ஏழாண்டளவிற்று.
† பெதும்பை புன்னிரண்டாண்டளவிற்று,

மன்னுமலர்வீழ்சுரும்பனைய மைந்தர்பார்வைக்குறிப்புணர்ந்தாள்
தன்னையரியவொளவழிந்து தானேமனத்திற்றருக்குற்றாள். (௩௭)

இந்தக் * கன்னிமதிமுழுநோக் கெய்திசசெவ்வாய்வலியடைந்து
சந்தச்சிங்கந்தனையடுத்த தக்கவரவின்வலிசார்ந்து
முந்தைக்கொடிமீனத்தலைவன் முனிவராகும்பகைவெல்லக்
கந்தப்பகழிபலவேழக் கருப்புரசிலையிற்றொடுத்தனனால். (௩௮)

## மங்கைப்பருவமடைந்தமை.

பாகமாகப்பொங்கியெழும் பதமேபோலப்பொலிவுமெழின்
மோகமாயைதன்பருவ முன்னிமுடிவேந்தயனுமா
லாகுமாடமொன்றுபுரிந் ததன்கட்கல்விபற்பலவும்
போகுமாதர்பலர்சூழப் போற்றியிருப்பச்செய்தனனால். (௩௯)

## அவள் பொழுதுபோக்குரைத்தமை.

### வேறு.

வாய்த்துளவம்மணி மாடநண்ணுபு
பாத்தொடைபற்பல பயின்றந்தந்திரி
நாத்தனியாழ்மா னுக்கனென்றதான்
பேர்த்துளர்வி ல்களாற் பேசுவித்துமே. (௪௦)

அங்கொருமடவர லதிர்ப்பத்தண்ணுமை
மங்கையாசிலரிசை மரபிற்பாடுறக்
கொங்கவிழ்மலரளி குழுறத்தென்றலாற்
பைங்கொடியசைதல்போற் பாடியாடியும். (௪௧)

வருமுலையிறைக்கிணை யாகவந்துறக்
கரமெனுமேவலன் புடைக்குமகாட்சிபோல்
விரைமலரோதிமேன் மிகுதிநிரைந்தெழப்
பருமணிகுயின்றமென் பந்தடித்துமே. (௪௨)

பூந்தொடைவார்குழல் புனைந்துநல்விரைச்
சாந்தமுநானமுந் தயங்கப்பூசியு

---

* கன்னியிலிருக்கிற சந்திரனது முழுப்பார்வையும், அங்காரக பலமும், சிங்கத்திலேயிருக்கிற ராகுவலியுமாகிய கோசாரபலன் பார்த்துப் போர்க்குச்செல்லுகிற அரசரதுசெய்திதோன்ற; மன்மதனும் முனிவராகும் பகைவரைவெல்ல நாள்பார்த்து மலரம்புகளை கருப்புச்சிலையில் தொடுத்ததாக உருவகப்படுத்தினார்.

மேந்திழைபலவுறுப் பிசையத்தாங்கியு
மாந்துறுசுவைபல வகையமாந்தியும். (௬௩)

தீங்கனிபாலொடு செம்பொற்பஞ்சரந்
தாங்குறுபைங்கிளி யூட்டித்தன்மொழி
யாங்கதுபயில்வுற வளித்துங்கற்பகப்
பூங்கொடியனையவள் பொழுதுபோக்குநாள். (௬௪)

## மணத்தலைவனைத்தேர்தல்.

தென்னவன்செம்பியன் சேரன்கொங்கண
மன்னவன்மாளுவன் மகதநாட்டிறை
யென்னுமிங்கிவர்தமுள் யாவர்கண்ணரோ
கன்னிதன்மணவினைக் கடனென்றன்னியே. (௬௫)

ஆய்ந்திருந்தனன்மம காரனயிடைப்
போந்தனனவன்குரு வாகப்போற்றறுஞ்
சாந்தவாங்காரனுந் தகுதிப்பேரினோன்
வேந்தனுமெதிர்கொளீஇ விதியிற்றாழ்ந்தனன். (௬௬)

மன்னவன்வந்தன மாபிற்கொண்டவன்
கன்னிதனெழினலங் காணப்போயினு
னன்னவளெதிர்வடந் தாரியன்றனை
சென்னியின்வணங்குபு சிறப்புசெய்தனள். (௬௭)

மாந்தளிராலிலை வயாக்குகோங்கரும்
பேந்தெழின்மனைமல ரெய்தியற்புதப்
பூந்துணர்வல்லிநேர் பொன்னைக்கண்டவ
னோர்ந்தனன்காரண மாதென்றுன்னியே. (௬௮)

மாதுருவுறுகுறி மதித்தறிந்தவ
ளுதரவொடுமுடி யரசைநோக்கிநின்
கோதையையார்கொலோ தோளிற்கொள்பவ
ரோதுகவென்றலு முரைத்தன்மேயினன். (௬௯)

உணர்ந்திலனடியனே னொருநயகோதைதன்
மணந்தனக்குரியவர் மனிதர்வானவர்
கணங்களுளொருவரைக் கருத்திற்றேர்ந்துநீ
யிணங்குறவெனக்கிவ ணியம்புகென்றனன். (௭௦)

கொங்கவிழ்தொடையினாய் கூன்கொக்கன்றுவான்
கங்கையையடைவது கடவுளன்னமே
மங்கையையணைபவர் மனிதரல்லர்நஞ்
சங்கரனேயிவ டலைவனென்றனன். (எக)

மாலுநான்முகனுநா டரியவள்ளலிவ்
வேலவார்குழலினாட் கெளியனோவென
வாலமார்மிடற்றினா னன்பர்வேண்டிய
கோலமாய்நணுகுமீ துண்மைக்கூற்றென்றான். (எஉ)

## மாயைக்கு உபதேசஞ்செய்தமை.

இன்னணமாசனோ டியம்பிமாயையாங்
கன்னியைவிளித்தவள் கருத்திணங்குற
செந்நிலைதனையுப தேசித்தேகினான்
றன்னிகர்குருபரன் றனதிடத்தரோ. (எங)

குருவருண்மொழிநெறி கொண்டுமாயைதான்
வாவணவனைநகர் மதுகைநாதனைப்
பரவினளருச்சனை பயின்றபூசனைக்
கருவிகண்முழுவதுங் கடைப்பிடித்தரோ. (எச)

மூன்றாவது

மாயையினுற்பத்திகதி

முற்றிற்று.

---

கதி - ௩ - இ - திருவிருத்தங்கள் - க௱எ.

நான்காவது

# மாயைபூசைகதி.



பதியைமேவுறுங்காதலனைஞ் சகத்தினுட்பதித்து
மதுகைநாதனையவரன்முறை வரிவிழிமாயை
யுதயகாலையிற்பூசைசெய் நாள்களுளொருநாள்
விதியையோதுவன்குவிமனத் தவர்கொளவிரித்து. (௧)

விதுவைச்சேய்மையிற்கண்டலர் குவளைகண்மெலிய
முதிர்விற்பூணிளமுலையெழின் மாயைதன்முகமா
மதியைச்சேர்தருவரிக்கருங் குவளைகண்மலரக்
குதிரைத்தேரவனெழுந்தனன் குணதிசைக்குன்றில். (௨)

அனையகாலையிலன்னமென்றூவி பெய்யணைமேற்
றனியண்மாமயில்போற்றுயின் றவடுயிறணந்து
வினையிறுன்மலி மஞ்சனச்சாலையுண்மேவி
யினியவாசநீராடினள் சேடியரேந்த. (௩)

விலைவரம்பறியாமணிக் கோவைசூழ்விளிம்பு
கலையணிந்தொருதலை முலைமேலலங்கரித்தாண்
முலையொடுந்துகில்கண்ட நாண்முதற்றொடர்ந்தன்றோ
விலகுறுங்கலைவல்லவர் கடபடாமென்றல். (௪)

மணியமைந்தபொற்பாதுகை யொருத்திமுன்வைப்பப்
பிணியவிழ்ந்தசெந்தாமரைப் பதங்கொடுபெயர்ந்தே
யணியணிந்திடுமண்டபத் தணைமிசையமர்ந்தாள்
பணியணிந்திடுமங்கைய ரடைந்தனர்பலரே. (௫)

மாரவேள்சிலைவளைந்திடப்பூட்டியவண்டு
நாரியோர்தலைநெகிழ்த்துவிட்டெனவொருநாரி
காரவாமலர்க்குழற்சடைகைபுனைந்தியற்றி
வீரவேனெடுங்கண்ணிதன்முதுகுறவிடுத்தாள். (௬)

பின்னும்வேணிவார்குழலெனுங்கரியபேரரவ
முன்னமார்தருசுடர்களையுமிழ்ந்திடுமுறைபோற்

கன்னிவாணுதன்மிசைக்கதிர்பிறையொடுகவினப்
பொன்னவாஞ்சுணங்கவிர்முலையொருத்திகைபுனைந்தாள். (௭)

ஓதியாகியவறன்மிசைச்சுவடுறவூர்ந்து
தீதிலாதவொண்சந்தனத்திலகவெண்மதிக்குப்
போதுமோர்சிறுபாம்பெனமயிர்வகிர்ப்பொருந்தச்
சோதிமாமணிசசுட்டியொன்றொருத்திதூக்கினளால். (௮)

வேணலம்பதிகொலைவிடமூட்டியவெவ்வேன்
வானவஞ்சனமெழுதியவிழிபொரவவலாற்
றானதன்பகைதனைத்துணைகொண்டிறந்தகைபோற்
பானலஞ்செவிமிசையணிந்தனளொருபாவை. (௯)

அடுத்துமாதவமழிமினென்றனங்கவேடமக்கு
விடுத்தவோலையைக்கண்கடம்மேற்பழிவிளம்பிற்
கொடுத்தவேண்மிசைநிந்தைகூறுதற்குவைத்திருத்தல்
கடுத்துவாழ்தரவொருத்திபொன்னோலைகாதணிந்தாள். (௧௦)

தன்னைநிந்தைசெய்வெண்ணகைமேற்பழிசார
மன்னியங்கதுநிகரறவாழ்மனைவாய்தன்
முன்னிறந்திடுவேனெனஞான்றுகொண்முறைமை
யென்னவெண்மணிமூக்கணியொருத்திநின்றிட்டாள். (௧௧)

கற்றையங்குழனறுமலர்த்தொடையொடுகனமா
யுற்றணங்குமென்றிலகுபூண்பிடித்ததையொப்ப
விற்றயங்குவாணுதலெழின்மாயைதன்மிடற்றிற்
பொற்றடந்தகட்டணியொருமடவரல்புனைந்தாள். (௧௨)

† கன்னியத்தம்வந்தினமணிக்கர்கடகத்தின்
மன்னியுற்றதற்புதமெனவளைபலகாக்க
வின்னுதற்கருங்கண்மடமாதுகைவிளங்கப்
பொன்னினற்கடகம்புனைந்தனளொருபூவை. (௧௩)

ஆயுமின்சுவைதரச்செலுங்கையுடனடுத்து
வாயிஞெண்கவின்காணியமருவுறுமாபோன்
மாயைதன்கையிற்பொற்கடகத்தின்முன்வனைந்தா
டேயசெம்பவளங்களைக்கோத்தொருதோகை. (௧௪)

---

† கன்னியத்தமென்பதுமுதல் யுற்றது என்பதுவரையில்
சிலேடை.

மங்கலத்தொழிலாடவர்மனநடக்கிற்காக்
குங்குமப்பெருஞ்சேற்றினைக்குறித்திடுகற்போன்
மங்கையர்க்கொருதிலகமாகியவெழின்மாயை
கொங்கையிற்புனைந்தனளொருபெண்மணிக்கோவை. (௧௫)

பாயும்வெண்டிரைக்கருங்கடனிலச்சுமைப்பாம்பி
னுயிரம்படங்களுந்திறையிட்டனவனைய
மீயிலங்கொளிவிரிமணிமேகலைவேய்ந்தாள்
மாயைமங்கைதனல்குலிலொருதிருமடந்தை. (௧௬)

கறையடிக்களியானையின்வரவினைக்கண்டு
மறுகினுற்றவரிரிதரமணிமருங்கிடல்போ
லுறுதவத்தினரறிந்தனரோடவொண்ணுதற்கு
நருமலர்ப்பதத்தணிந்தனள்சிலம்பொருநங்கை. (௧௭)

கூடைமென்மலர்மணத்தினுலறிந்தனைக்குறுகப்
பாடும்வண்டினஞ்சூழ்தல்போலிளைஞர்கண்பரப்பத்
தேடரும்பொருளனையவட்குறுநறுந்தேய்வை
பீடுறுங்குவிமுலைக்கணிந்தனளொருபேதை. (௧௮)

நின்றன்விம்பமேநினக்கெதிரன்றிவேறில்லை
யென்றுகண்கொளத்தெரிந்தபோரடியொன்றெடுத்தாள்
குன்றெனுங்குவிமுலையவளெதிர்கொடுங்குழைமேற்
சென்றுசென்றுபாயரிமதர்மழைக்கணேர்தெரிவை. (௧௯)

வீரவேள்வளையாதசெங்கரும்பவன்வில்லி
னரிமேலிடாமலர்மறுவிலாநகைமதியங்
காருருதகின்கடற்பிறவாதவின்னமுதம்
சேரிலாதபூங்கொடியெனவிளங்கினண்மாயை. (௨௦)

மாதரிவ்வகையணியலுமதுகைநாயகன்றன்
பாததாமரையருச்சனைப்பொருள்கள்பற்பலவு
நீதியாலமைந்தனவினிநிகரிலெம்பிராட்டிப்
போதுவாயெனவொருமடமாதெதிர்புகன்றாள். (௨௧)

மயிலெழுந்தெனவெழுந்தனள்கோமகள்வாழ்த்திக்
குயிலெழுந்தெனவெழுந்தனமடந்தையர்குழாங்க
டயிலெழுந்தெனவெழுந்தனநூபுரத்துழனி
வெயிலெழுந்தெனவெழுந்தனமணியணிவிளக்கம். (௨௨)

பொன்னிலங்கியசிவிகைமுன்கொணர்ந்தனர்பொறுப்போர்
மன்னியங்கதையேறினண்மதர்விழிமாயை
சின்னம்வெண்பணிலம்பணைதண்ணுமைதிமிலை
முன்னிரைந்தனமதியெழக்கடன்முழங்குதல்போல். (௨௩)

ஆன்றிரட்டுறுங்கண்ணன்வாய்க்குழலிஃதணிபூண்
மான்றிரட்டுறுமெனக்குழலூதினர்மலர்விற்
கோன்றிரட்டியவமுதனையாண்முனங்குறுகி
மூன்றிரட்டியமுகமுடைமுருகனுமுருக. (௨௪)

வயங்குமாயையங்கரும்பினிற்றுழ்ந்தவர்மாவி
னுயர்ந்தமாதராரூற்றிருந்தொழுகுகண்மலரா
யயர்ந்துசூழ்தருமளியினண்ணினர்பிறர்காலா
லியங்குமாதிருபுடையினுமிடையறவீண்டி. (௨௫)

வேளெரித்தனன்றன்குடையெனக்குடைவிதிர்க்கும்
வாளெனப்பிறழ்மதர்நெடுங்கண்ணிபான்மருவக்
காளமொத்தகண்மடந்தையர்பலரிளங்கமுகின்
பாளையொத்தவெண்கவரியீசினரிருபாலும். (௨௬)

காமவெந்தழன்மூட்டல்போற்கடிமலர்ச்சிவிறி
தாமசைந்தனபொய்க்கணைசொரிந்துவிற்றடக்கைக்
கோமகன்றிருந்திழையுளமறிதல்போற்குறுகிப்
பூமடந்தையையென்றவர்பூமழைபொழிந்தார். (௨௭)

பாகுவெள்ளிலைசந்தனங்குங்குமம்பளித
மோகைமான்மதம்வண்டிமிர்றுமலரொலியல்
பேர்கெழும்பணிப்பெட்டிமென்றுகிலுடைப்பேழை
தோகைமார்பலர்மருங்கினிற்சுமந்துபோயினரால். (௨௮)

சொங்கையங்குவிமுகிழ்விழிக்கயலிசழ்க்குமுத
மங்கையம்புயமுந்தியஞ்சுழியிவையடுத்துப்
பொங்குறங்கவினீர்பெருகாற்றினைப்புரையு
மங்கலந்திகழ்வுறுமணிமாளிகைமறுகு. (௨௯)

திங்கள்வாணுதன்மடந்தையர்செஞ்சிலம்பொலியுஞ்
சங்கினோடணிகலன்களின்சிற்றொலிதாமுங்
கொங்குலாமலர்த்தொடையளியிசைகளுங்குழீஇப்
பொங்குமாழியிற்பஃறுளிபெருகுதல்போன்று. (௩0)

துன்றுபெண்படைசூழ்வரமாயையந்தோகை
வென்றியங்கனன்மழுவிஞேன்விழியினால்வேளைக்
கொன்றதென்னெனக்கேட்பமென்றுளவலிகொண்டு
சென்றுறுஞ்செயலென்னவத்தெருவிடைச்சென்றாள். (௩௧)

வேறு.

அரிமதர்மழைக்கணல் லரிவைதன்புடை
வருமடவரலியர் வனப்புக்காண்டலு
மெரிபுரைவிழியரி யேறுபோல்பவர்
கரிநுகர்வெள்ளிலங் கனியையொத்தனர். (௩௨)

இடையொருசற்றுவா ணுதல்சற்றேழையர்
படைவிழிசற்றுவாய்ப் பவளஞ்சற்றினைக்
குடமொருசற்றிவண் கொள்ளைகொள்ளநம்
புடைபெயரறிவெலாம் போயிற்றேயென்பார். (௩௩)

இணைத்தியல்பாமறி வென்பதுண்மையே
மணர்துயர்செயுமயன் மாற்றுநீறதா
னணிரசமெல்லடியினார் நுதலடுத்தலும்
பணித்துடல்வெதும்புமால் படர்தலாலென்பார். (௩௪)

தொல்லைநஞ்சடர்துயர் சொல்லக்காத்தவன்
வல்லிபங்குடையருண் மதுகைநாயகன்
செல்லுமங்கையர்விழி நஞ்சுநொய்யதுஞ்
சொல்லுதுமவனொடு நொழுதுநாமென்பார் (௩௫)

இக்குழுமகளிருள் யார்வனப்பினோன்
மிக்கவளெனத்தமை வினவினொதிர்
முக்கனிகளுட்சுவை முதிர்ச்சிபெற்றுள
தெக்கனியதனைநீ ரியம்புவீரென்பார். (௩௬)

கரும்பினுமினிய † செஙகயற்கணாரிளங்
குரும்பையும்பயன்படாக் ‡ கோவைதன்னையும்
விரும்பினமுலகர்முன் வீணெஞ்சகம்
வருந்துதனைகைதரு மடமையேயென்பார். (௩௭)

விடங்குலாமதர்விழி விரைத்தண்பூங்குழ
னுடங்குநூலிடைப்பிறை நுதற்பொற்கொம்பனார்

† சொற்கயற்கணார் எனவும்பாடம். ‡ கொங்கை எனவும் பாடம்.

குடங்கணூறுமிளங் குவவுக்கொங்கைபோ
லுடம்பெலாமூடினு லுய்யலாமென்பார். (௩௮)

இவ்வணங்கருத்தழிந் திளைஞர்மாழ்குறக்
கௌவ்வையங்கனியிதழ்க் கோதைமாரொடு
மௌவலங்குழலெழின் மாயையென்பவ
ளவ்வரன்கோயிலி னருகுபோயினாள். (௩௯)

சிவிகையினிழிந்துதன் சென்னிதாங்கிய
குவிகையினொடுபுகாக் கோபுரத்துள்வெண்
கவிகையனொனுமம காான்கன்னிகட்
செவிகையினணிபர னெதிர்சென்றுளரோ. (௪0)

வேண்டியவனைத்தையு மேவன்மெல்லிய
ராண்டருகுறவமைத் தப்பமாயைதான்
காண்டகு நுதல்விழிக் கடவுட்கன்புளம்
பூண்டனளருசசனை புரிதன்மேயினாள். (௪௧)

ஆதியவரன்முறை செய்தருச்கிய
மாதியகொடுபர னணிந்திருந்தபூ
வாதியகளைந்துமந் திரமறைந்துநம்
மாதியைமஞ்சன மாட்டன்மேயினாள். (௪௨)

தயிலமுடனுனிடத்தைந்தையமுத நறுநெய்பாறயிர்செழுந்தேன்
வயலினெழுகரும்புடைத்துக் கொள்சாறுபழம்பிழிந்தமதுரச்சாறு
புயலளவுதாழையிளநீர்நறுஞ்சந் தனக்குழம்புபோற்றுநூலி [டி.
னியலினமைதபனமிவையொன்றன்பி னொன்றமுறையிறைவற்காட்

சங்குலவுமென்கைநெடுஞ் சுடரிலைவேல் விழிமாயை சாம்பற்
பூத்து, மங்கலமாகிய மேனிமுழுவதுஞ்சந் தனத்திரளை மலியசசாத்
தித், திங்களெனுமொருசிறுகூன் முதுகிப்பியின்றதெனச் சினவெள்
ளேற்றான், கங்கைமுடிமீதினில் வெண்ணிலவெறிக்கு நித்திலவக்க
தையுமிட்டாள். (௪௪)

பிறைதவழுநெடுஞ்சடையெம்பெருமானைச் சார்ந்துசர்ப்பபிராந்
திமேவ, * நறைமலர்மென் றொடைமாலைபலவனைந்து கூர்ங்கோட்டு
நால்வாய்ச்சீற்றக், கறையடியீருரிசுமந்ததிருமேனி யழகுறநுண்கலை
புனைந்திட், டிறைவனெலும்பணிநாணவவிர் மணிப்பூண்பற்பலவுமெ
டுத்தணிந்தாள். (௪௫)

* நறுமலர் என பிரதிபேதம்.

நற்றாமங்கமழ்நித்தியகல்லியாணிமணாளற்குநானஞ்சாத்திப்
பெற்றானைநகடிதலிலாக்கறிமருவுபோனகங்கள்பிசசையல்லான்
மற்றொன்றில்லாதபெருந்தகைக்குரிவேதித்துவண்டுகிண்டி [ள்.
யுற்றூதுங்கடிமலர்மென்குழன்மடவாள் வெள்ளிலையுமுவந்தளித்தா

நறியபுகைசெழுஞ்சுடர்மென்சிவிறியொடுவெண்கவரிநாடுமாடி, நெறிமுறையி னெடுங்கடல்போ லியமுழங்க நின்றுதவி நிமலன்றன் னைப், பிறைநுதலிவ் வகைபூசைபுரிந்து துதிபலசெய்து பெருகுமன் பான், மறைபுகலுமஞ்செழுத்துமறைந்து வலம்வந்துமுனம்வணங் கிப்பின்னர். (௪௭)

பண்பினுளமுருகிவிழிசொரிநீ ராலெழுதியமையழிந்திருப்பப்
பொன்புரையும்வடிவமயிர்பொடிப்பவெயர் வாணுதலின்பொட்டழிந்
தண்புரையுநெடுஞ்சடிலப்பொன்மலையினணைந்தவெள்ளமூழ்கி [து
யினடினடிப்பவெள்ளனவந்நாடாவிலாங்கிலெய்தினளால். (௪௮)

அரங்கினிடைநடநவிலுஞ்செயற்கேற்ப வுடையணிந்திட்டரும் பைவென்ற, குரும்பைமுலையினைவம்புகொண்டணிந்துதவங்களெல் லாங்கொள்ளைகொள்ளுங், கருந்தடங்கண்மலர்க்கோதை சிற்றடியிற் றகைபுனையகற்றமாதர், சுரும்புமுரன்மல்லிகைமென்போ துனைய சிறுசதங்கைதுளங்கவார்த்தார். (௪௯)

மாயைமுலைக்கிணையெனவென்முன்றனும்வந்ததெனவுலக்கைத் தாளம், போயிடக்கைதட்டாளமறைப்பொருமையினற்றுக்குதல்போ றபுடைத்தொலிப்ப, வாயுரைக்குமொழிபோலத தண்ணுமைசெங் கைகளால்வார்த்தைசொல்ல, மேயகலைப்பெண்விளர்ப்ப வெழின் மாதரிசைபாடவீணைகொண்டு. (௫0)

என்னொருகையொடுமற்போர புரிகவெனநிற்பவள்போலிடை யினேர்கை, மன்னியுறவைத்தொருகைநீட்டி யரனெதிர்நின்றுமா யைவல்லி, கன்னன்மதன்றனைவருகவென விளித்தல்போற்றழுங்கக் காற்சதங்கை, பொன்னினியலொருபாவைநடிக்கின்றதென்னநடம் புரியலுற்றாள். (௫௧)

வேறு.

தண்ணுமைவிளங்கலுறு தாளமிசையெல்லாம்
வண்ணமலர்மெல்லடி வழிசசதியினிற்பக்
கண்ணிணைகொள்பல்வளைய கைவழிநடப்பப்
பெண்ணமுதமன்னவள் பெயர்ந்தனணடித்தாள். (௫௨)

வாயுரைசெய்சொற்பொருண் மலர்க்கரமுரைப்ப
மீயுயர்விசும்பினெழு மென்புனொலியெல்லாம்
பாவெயாலியபஞ்சுறு பதத்துறாகித்துப்
பேயொடுநடித்தவிறை பித்துறநடித்தாள். (௫௩)

அந்தணனிருங்கலை யணங்கினையுநிழுந்தான்
செந்திருவைநேரியிறை சியெனவெறுத்தா
னிந்திரனருஞ்சசியை யெண்ணிலன்மறந்தான்
பைந்தொடிநடிப்பநரர் பட்டதெனுரைப்பாம். (௫௪)

பொன்னெயிலினென்றிய புரைநுக்குண்முகம்மைத்துந்
துன்னிமுனர்நின்றவர் தோடரிடையிவர்ந்து
பின்னெனநடம்புரியு மெல்லியன்மருங்கு
லென்னும்வெளிகாணிய விடர்ப்படுவர்மைந்தர். (௫௫)

பற்றுமனமோடியிரு பார்வையினுமெய்தி
மற்றையபுலன்களை மறந்துநடமாடும்
பொற்றொடியைநண்ணவுயர் பொன்மதிலுறப்பி
னுற்றபொறிபோலசை வொழிந்தினொருநின்றார். (௫௬)

இளங்கொடிமருங்குலவ ளின்னணநடிப்பக்
களங்கனியைவென்றமணி கண்டனையருச்சித்
துளங்குளிருந்தவ னுவர்திறையணிந்த
வளங்கெழுமுசந்தமலர் மாலையொடளித்தான். (௫௭)

வணங்கிமதுகேசனிரு மாலியமதேற்றங்
கணங்குமடவாருட னரங்கிடையிருந்தா
னுணங்கிழைமருங்குன்மிக சோமெனவினைந்து
பிணங்குறுசதங்கையமு பிள்ளையினடங்க. (௫௮)

மைத்தடநெடுங்கணிள வல்லிநிகர்மாயை
பத்தியொடருச்சனை பயின்றதையறிந்தா
னித்தனுலகெங்கணு நிறைந்தவனருநி
முத்தனருளல்லம முதற்பெயரினனே. (௫௯)

நான்காவது
மாயைபூசைகதி
முற்றிற்று.

---

கதி - ச - இ - திருவிருத்தங்கள் - உகசு.

ஐந்தாவது

# பிரபுதேவர் வந்தகதி.

நிரந்தரமடியார்வேண்டு நினைவெலாநிரப்பாநின்ற
பெருந்தகையல்லமையன் பெயர்ந்தொருமனிதனாகி
வருந்துறுமயன்மனத்தால் வந்தனைபுரிந்தாடன்பாற்
பொருந்துறுபவன்போற்செய்த புணர்ப்பினைப்புகன்றுரைப்பாம். (க)

தாமுறுநுகர்வும்வீடுந் தந்திடவல்லன்றானே
யாமெனவியம்பலாலே யல்லமதேவனுண்மை
நாமமுமறையவேறோர் நாமமுற்றம்மாயைக்குக்
காமியவினைப்பயன்றான் கடைப்பிடித்தருளவெண்ணி. (உ)

கதந்தருதிருநுதற்றீக் கண்ணினனீறுபட்ட
மதன்செயல்செய்யவன்றானென் வடிவுதான்கொண்டதென்ன
முதிர்ந்தழகொழுகுமாறு முகங்களுட்சிறந்தவொன்றே
டெதிர்ந்துளமுருகனென்ன விளமையோடழகுவாய்ப்ப. (௩)

அவிர்சடைமுனிவர்மாத ரழுங்குறக்கொண்டகோலங்
கவினுமிவ்வடிவங்கொள்ளக் கற்றுமுன்விட்டதென்னக்
குவிமுலைமகளிராவி கூட்டுணுங்கோலமென்னப்
புவியுறுமிரவியென்னப்பொங்கொளியுருவொன்றுற்றான். (௪)

விளிம்புறநடக்களங்கம் வீழ்ந்துசூழ்மதியொன்றுண்டேல்
வளங்கெழுமயிரொழுங்கு வள்ளல்வாண்முகநிகர்க்குந்
துளங்குறமுந்திமேற்போய் மார்பிடைத்தோன்றுரோம
மிளங்கருநனிமுண்டே லேய்க்குமென்றியம்பநின்றான். (௫)

* விலைவரம்பறியாவாடை விரித்துடுத்தரையிலங்க
மலைவரும்புதியசந்த மான்மதங்காதநாறக்
கலைவரம்பறிந்துளோர்தங் கருத்தினுக்கரிதாயன்புன்
றலைவருங்கமலப்பொற்றா டம்பிரான்மலியச்சாத்தி. (௬)

தளிர்த்ததண்பொழிலிற்றேமாந் தடஞ்சினைக்குயின்முகம்போற்
றுளித்தலைமுகில்கவற்றுஞ் சுரிகுழற்சிகழியார்த்திட்

* இப்பாட்டுமுதல் ஆறுபாட்டுமுதல் கூ-பாடல் வரைக்கும் ஒரு தொடர்பு,

டளித்தொடர்மாலேவேய்ந்தவ் வலங்கனேக்குறுவோர்க்கெல்லாம்
வெளிற்றுரைப்பொருள்போற்றேன்ற மென் * றலேசசாத்தணிந்து.

களத்திடையிருப்பினுண்மை காண்குவரென்னவாலங
குளத்திடைவாங்கிவைத்த கொள்கைபோற்றிலதந்தீட்டி
யொளித்தனிமதிதன்பாங்க ருரோணியோடொருபெண்கூட்டி
யளித்துறவைத்ததென்ன வணிமணிசெவிக்கணிந்து. (அ)

விலேயில்வெண்டரளக்கோவை வீரசங்கிலிகேயூர
மிலகுசெம்மணிப்பொன்னுழி யிவைமுதலாயவெல்லாக்
கலனுமொண்கவினெனுஞ்செங கனலிற்பெய்ந்றநெயென்ன
மலேவினங்குருகுகேசன் வயங்குறப்பெலாமணிந்து. (௯)

இந்திரதிருவிற்கேற்ற விலக்கணமுழுதும்வாய்ந்த
சுந்தரகுமரற்காவா விதனேத்தான்சுமப்பதாக
வந்துளதெதுகொலோவென் றெண்ணிமாணிடர்மயங்க
நிந்தையின்முதுகின்பாற்றண் ணுமையொன்றுநிகழத்தாங்கி. (௧0)

சென்றருண்மதுகைநாதன் றிருமுன்வான்சுடர்வலஞ்சூழ்
குன்றுறழ்கொடிநெடும்பொற் கோபுரத்தெதிர்போய்நின்று
மன்றிடைநவில்கூத்தாடி மத்தளத்தொழில்கைக்கொண்டா
னென்றுளமருளவெங்கோ னெறிந்துதண்ணுமையதிர்த்தான். (௧௧)

உரலசைந்திடாதடுக்கி யுறியினையெடுத்தயின்றேன்
குரலசைந்தாதுமோர்வேய்ங் குழன்மொழிமாதர்மாழ்கச்
சிரலசைந்தாடாநின்ற சிறகர்போன்மத்தளத்தை
விரலசைந்தறைதலன்றி மெய்யசையாமனின்றான். (௧௨)

சுத்தமெய்ஞ்ஞானனந்த சூரியன்கரத்தாலார்க்கு
மத்தளமுகின்முழக்க நடித்துறுமயில்கேட்டம்மா
வித்தரைமனிதர்கையா லெஞ்செவிப்படாதிருந்த
புத்தொலியிதுவென்றுள்ளம் வியந்திதுபுகலுமன்றே. (௧௩)

மோட்டிளமுலேயீரின்ன தண்ணுமைமுழக்கங்காதாற்
சேட்டிலமியவாறுண்டென் றுரைப்பவுங்கேட்டிலேமால்
வேட்டிலகனேத்துநின்று வியக்குமிவ்விஞ்சைகற்றுக்
காட்டியவவன்யார்கொல்லோ காண்கவென்றணங்குரைத்தாள். ()

* தலேச்சாத்து - தலேப்பாகையென கிராமியமாக வழங்குகின்றது.

மாதர்வல்விரைந்துசென்று மத்தள ‡ முழக்காநின்ற
சோதியைவிழியாற்றுஞ்செய் தொல்லைமாதவத்தாற்கண்டு
காதொடுபொருதுமீளுங் கயனெடுங்கருங்கட்செவ்வாய்க்
கோதைதன்மருங்கின்மீண்டு வந்திதுகூறலுற்றார். (கரு)

கற்றதன்விஞ்சைபோலக் கவினுநாங்கண்டதில்லை
விற்றொழிலாயகவேளோ மேனிகொண்டடைந்தானென்ன
[illegible]ற்றனனொருவனென்ன [illegible]ரண்டொடிவி[illegible]னென்றாண்
மற்றவர்விளித்துவந்த மாமய[illegible]தெதிர்விதித்தார். (கசா)

அந்நிலையலமருமந் தண்ணல்[illegible]கண்டபோதே
செந்நிலமுருநீர்போலச் செல்[illegible]மான்மயமேயாகிப்
பொன்னவிரொருபூம்பா[illegible] போன்றசைவறவிருந்தாள்
கன்னல்வின்மதவேளெய்து கையிலோர்த்தருகின்றான். (கஎ)

மயக்குமென்பதுபோயமாயை மயங்குமென்றிடவிருப்ப
வியக்குநின்றேயம்யாது வி[illegible]னையாயின்பம்
பயக்குநின்பெயர்யாதெ[illegible]தப் பயின்றனை[illegible]சொல்லென்றே
[illegible]யக்குமென்மொழியாள்கேட்ப ஞானவாரி[illegible]யுரைக்கும். (கஅ)

செல்லுறுங்குழலிர்சேய மோ * ப[illegible]தேயந்தூரால்
[illegible]ல்லவனென்னவந்தோர் [illegible]லி[illegible]பல்லவென்று
மல்லமனென்பதொன்று மன்புசெப்பவிடத்திற்
புல்லுவன்றொடர்பிலாமலென்றனன் † பொய்ம்மையில்லான் (ககூ)

உலகுளவிஞ்சையெல்லா முணர்ந்தவெம்பிராட்டிதன்பால்
மலைவறவிஞ்சைகற்றோர் தம்மொழிமருவியப்பாற்
செலவினையொழிந்திருந்தி செல்வமேயுடையவென்றே
விலகிதழமுதமன்னா ரியம்பினரிணையகுமண்ணம். (உ0)

---

‡ முழக்கிநின்ற எனவும் ஒக்கும்.

* பரதேயமெனற்குபயார்த்தம்,—மேலாயதேயம். அதாவது:— இனிப்பூர்வபட்சப்படுத்தற் கியையாத தேயம். எனவே சிதாகாய மெனப்பெற்றும்.

† மொய்ம்மையில்லான் - உபாதிசகித னல்லன் என்பதன் குறிப்பு.

தன்கணிவாய்திறந்து சாற்றவேண்டியசொல்லெல்லா
மின்குழலனையமாதர் விளம்பலுமகிழ்வுற்றீது
புன்சடைமதுகைநாதன் பூசனைப்பயனென்றெண்ணி
யின்குழன்மொழிமடந்தை யிருந்தனளுரையாடாமல். (௨௧)

மோகினிதவஞ்செய்கின்ற முகிழ்முலைமாயைதன்கைப்
பாகுவெள்ளிலையளித்துப் பரிந்தருகுறமடைப்பைப்
போகியென்பவள்சிறந்த போகிபோனடித்துநின்ற
போகிதன்கரத்தளிப்பித் தரியனபலவுஞ்செய்தாள் (௨௨)

அடிக்கமலங்கள்போற்ற மடியவர்வேண்டிற்றெல்லாங்
கொடுத்தருள்கருணைவள்ளல் கொண்டகோலத்திற்கேற்ப
நடிப்பவளுதலாமேலா ராமயேற்றடங்கண்மாயை
யெடுத்தநற்றுவதங்கை யேற்றனளெரிழிர்துளோன்போல். (௨௩)

விடைக்கொடியமலன்றன்னை விடைகொடுபுறம்போந்தங்கண்
மடக்கொடிமதவேளநாணு மருமம்பாய்ந்தருவரைந்து
நடக்கரிதாகியம்பொன்னகைமணிசரிவிகையூர்ந்து
தொடிக்கைநுண்ணிடைமருங்குற் றோழியர்சூழச்சென்றார் (௨௪)

நண்ணிவெண்டைடவேந்தன்பா னடம்புரிதொழிற்கிசைந்த
தண்ணுமையல்லமன்றன் றிருநகைத்துடனிருப்பக்
கண்ணகன்ஞாலங்காக்குங் காவலனிசைவுகொண்டு
பெண்ணமுதனையமாயை பிறங்குதன்மாடம்புக்காள். (௨௫)

வலம்புரியனையனந்த மருங்குசூழ்ந்துறாசிறந்த
சலஞ்சலமிருப்பதென்னத் தமனியமணிமாடத்திற்
பொலங்குழைமகளிர்சூழப் பூந்தவிசிருந்துவிஞ்சை
நலந்தெரிபவள்போலெங்க ணம்பனேடுரைவிழைந்தாள். (௨௬)

நினைவவன்புணர்ச்சிமேற்று நெடுங்கணேக்கங்கனன்றே
னணிபிகுமழகின்மேற்று நாவெறுங்கூற்றின்மேற்று
புனைமலர்வணர்வார்கூந்தற் பொற்றொடிக்கிதனலன்றே
மனமொழிமெய்யொருங்கு மங்கையரரியரென்பார். (௨௭)

நீதறுகழைக்கரும்பிற் றீஞ்சுவையிரதநீத்துக்
கோதினைவிரும்பிக்கொள்ளுங் கொள்கைபோலுவியின்கட்
போதுறமதம்விடுத்துப் புன்மலங்கொள்ளுமாபோற்
பேதையெம்பிரானுன்முத்தி பெறுதுபுன்போகம்வேட்டாள். (௨௮)

† ஒன்றிரண்டொழியவாளி யுளவெலாமாரன்றூர்த்தான்
குன்றிரண்டனையகொங்கைக் கோமகளாற்றளாகி
யன்றிரண்டனையமேனி விமலன்மேற்சாய்ந்துவீழ்வாள்
பொன்றிரண்டனையமாதர் பொருந்தலாணுணிநின்றாள். (உ௯)

தளிரியல்காமத்தீயிற் சருகுபட்டாற்றளாகி
யுளநிகர்மகளிர்சில்லோ ருடன்வரவெழுந்துபோகி
யளிமலராளகஞ்சோர வணிமுலைத்துகில்விலங்க
வளமலியணையின்மீது வாயுயிர்ப்பெறிந்துவீழ்ந்தாள். (௩௰)

வேறு.

அள்ளிக்கொளும்பேரழகனரு ளுமம்புகலுமவாவாலு
முள்ளக்கருத்தையுயிர்போலு மகளிர்க்குணர்த்துமுளத்தாலு
மெள்ளப்பவளவாய்திறந்து விட்டதலமன்மேவுதற்குப்
பிள்ளைப்பிறைவாணுதன்மடவி யென்றாள்பிறரைவென்றாளே. (௩௧)

இறந்துதுறையினீத்தாயிற் றென்னமாயையிடத்துமயல்
பிறந்தபொழுதேயுயிரளவாய் நின்றதென்னும்பெற்றிமையை
யறிந்துமகளிர்நின்கருத்தை யறியவுணர்த்திலல்லமற்குச்
சிறந்தமனையொன்றளிக்குதுமென் றுரைத்துப்பின்னுஞ்செப்புவார்.

காமமுளதேதோன்றிற்றுனக்கென் றெங்கள்கருத்திற்றோன்றிற்று
வாமமணிமேகலைமருங்குல் வடிவேன்மருட்டுமதர்விழியா
யாமுநினதுநெஞ்சகமும் வேறலேநின்னிதயத்திற்
சேமமதனைநாணுமற் செப்புகென்றார்திருந்திழையார். (௩௩)

கன்னித்தன்மையழியுமெனு நாணுமுலகங்காக்குமொரு
மன்னற்குரியமகளென்னும் பெருமைதானும்மத்தலிகன்
றன்னைப்புணர்ந்தாளென்றுவருந் தகாதமொழியுந்தன்னுளத்தி
லுன்னிக்கருங்கண்மடமாயை யொன்றுமுரையாதிருந்தனளால். ()

இறைவியொன்றுமுறையாமல் வாளாவிருப்பவேவல்புரிந்
துறவினின்றசகளையெனு மாதுபிராட்டியுரையொடுதான்
பிறவுமின்றுவேறுபட்டா ளென்னேபெண்ணேயறியேனென்
றறிவுகலங்கியொருவுகலா விலாசியணங்கைவினவினள். (௩௫)

---

† ஒன்றிரண்டொழியவாளி என்றது - கிடை, கொல்லுதல், ஆகிய தொழிலைச்செய்யும் முல்லை, நீலம் என்னு மிரண்டுபாணங்களொழியவென்பது கருத்து.

இனியான்மறைப்பதென்கொனுமக் கின்றவர்தவல்லமனாந்
தனிநாயகன்பேரழகென்னு நறவையுண்டுதெரியாமற்
கனிவாய்மடந்தையுளமழிந்தா ளென்றுவிலாசிகட்டுரைக்க [து.
முனியாளியைந்துபுன்னகைகொண் டிருந்தாண்மாயைமுகங்கவிழ்ந்

மாயையிடையையுளண்முலையான் மற்றைமாதர்போலென்று
தூயமதிஞானு சிரித்துச் சொல்லுமருங்குற்றோகைதான்
வாயினிளவெண்ணகைதோன்ற வாளாவிருப்பக்கண்டுமய
லாயினுடையளெனமாத ரறிந்தா*ரருத்தாபத்தியினால். (௩௭)

வலியுள்ளமறிந்தன நிம் மாயைதனையுமயக்கவல்ல
வல்லமன்றன்கருத்தையினி யறியவேண்டுமென்றவர்தாஞ்
சொல்லவொல்லைமதமானி யென்பாள்யானத்தோன்றறனை
மெல்லவுள்ளமறிவலெனச் சென்றாள்விநோதவிமலன்பால். (௩௮)

மங்கைவருமவ்வரவையறிந் தவளோர்மாற்றம்வகுத்திடுமுன்
றங்குமனையிற்சென்றிருப்பனுங்க டலைவியெனத்தேடிற் [ன்
றிங்கணுதல்வெண்ணகைக்கருங்கட் செவ்வாய்த்திருவேசெப்புகவெ
றெங்கடலைவனியம்பமத மானியியம்பன்மேயினாள். (௩௯)

வீடுபுறநீவேண்டற்க வையவெமதுவிளங்குமணி
மாடமினதேயிவ ணுறைக வரசர்கோமான்மகளிதய
பீடமதனிலுனைவிடா திருத்தியிருந்தாள்பிரிவறநீ
கூடவுறையும்விருப்புடைய ளென்றாள்குறிப்புவெளிப்படவே. (௪0)

ஒன்றுமில்லேலனீவிர் மிகவுமுடையீரும் மறைவி
வென்றியரசர்குலமடந்தை சாதியறியாவிகிர்தன்யா
னன்றிமகளிர்நீயிர்நான் மைந்தனென்றாலடாதம்மா
வென்றமுங்களுடனுறைவென்றெந்தைநகைகொண்டியம்பினான்.()

நள்ளாதொழியினன்றியவ ணட்டாளாயிற்பினைப்பேதங் [னை
கொள்ளாரொருவர்மாட்டுமெனி லுயிர்போற்சிறப்பிற்கொண்டவு

---

* அருத்தாபத்தியாவது:—நித்திய வுபவாசியை அவனது பாரித்தவுடலா லிரவிற்கரந்துண்பானென்றுணர்கை. அஃதிருவகைப்படும்:—திஷ்டாருத்தாபத்தி, சிரவணருத்தாபத்தியென. அவற்றுளிது திருஷ்டாருத்தாபத்தி, அநுமானமாவது காரியத்தாற் காரணமுண்டெனக் கோடலே. அது மூவகைப்படும். பிரதிக்ஞை, ஏது, திட்டாந்தம் என.

யெள்ளாளென்னவேண்டுமோ வென்சொலெல்லாமிருந்தறிதி
யள்ளாலெனவின்மொழிபுகன்றாண் மாற்றமறிந்தமதமானி. (௩௨)

காரிற்சிறந்தமலர்க்குழலாய் நின்சொலெல்லாங்கேர்பொருளைப்
பாரித்திருந்தேதறுகிலேன் பணிவென்றெருவர்பாற்புரிவோர்
ஆரத்திருந்துவருங்காலந் துணிந்துவருதறுணிவென்று
ஞரிக்கிணங்குமவன்போல நடித்துவிடுத்தாளுமுவோன். (௩௩)

மன்னர்மன்னன்மகடிருமோ லக்கங்காணுமைந்தரோ
இன்னேயுன்னுமவளல்ல டலைவனுகவுன்னினளா
லென்னவன்னமனையாய் நந் தலைவிக்கியற்கையுயர்த்திடுதன்
முன்னமென்னவடங்கியொழு குறுதலெனக்குமுறையென்றான். ()

சொற்போர்செய்துமறைப்பதினி யென்றும்யாங்கடொழுகிறையாய்
நிற்போய்நின்னையெதிர்ந்தளவே கரியுண்விளவினிறையழிந்தாள்
கற்போனின்றவருந்தவரும் காணுமுன்னமுனைக்கண்ட
தற்போனின்றுதடுமாற நினைப்போலிருந்ததலைவியே. (௩௫)

என்றுமங்கைகூறுதலுந் தலைவியிதயநீயறிவை
யன்றியின்றுபுதியன்யா னறிவனோவிங்காப்தமாய்
நின்றவன்றன்மொழிகேட்கு மதுவேயெனக்குநெறியென்றான்
குன்றைவென்றகுவிமுலையாள் களிப்பவெமையாட்கொள்ளுமேவோன்.

நல்லசகுனமென்னவெதிர் கண்டுவந்தாய்நம்பிநீ
வல்லசுரர்சுரர்முனிவ ரெல்லாமயங்குமாயையையோர்
புல்லிவெனறியவெனப்புல்ல நின்றவெனப்புன்முறுவலொடு
சொல்லிமகிழ்வுகொண்டிறைவி பான்மீண்டனளசசுடாத்தோடியே.

அந்தமாயைமதமானி சென்றதற்பினநந்தளர்ந்து
மங்கைமாய்மைகூறியுடம் படுக்குமோமன்மகடனக்குப்
பங்கமாமென்மொன்னுயிரை சீறியகலப்பண்ணுமோ
விங்குநாமென்செய்வவென வறியேனென்னவிருந்தயர்வாள். (௩அ)

என்னேவறிந்துபோயினள் சந்துபொருந்தாசெய்துமோ
வன்னேவரசன்மகளென்ன வஞ்சியழகனகலுமோ
வின்னேரன்னநினைவின்றியெனையே நினைந்திட்டிருக்குமோ
பொன்னேதேறும்வாண்முகக்கண் டலதுதுயரம்போகாதே. (௩௯)

என்னப்பலவுநினைந்துமட மாயையிருப்பவிருளைமார்
பின்னற்கருங்கணிடனுடக் குறிகணல்லவிளங்குதலாற்

கன்னிக்குவகைகைகூடு மென்னவிருக்குங்காலைதனி
லன்னப்பெடைபோனடந்துமத மாளிகை யிப்புற்றடைந்தனளால். ()

வண்டாமரைபோன்முகமலர்ந்து வந்தாள்சென்றமதமாளி
கண்டார்மகளிரவனுள்ளாய * காயோபழமோகழறென்றார்
தண்டார்வனைமென்குழன்மடவீர் பழமேயென்றுசாற்றினள்
கொண்டாருவகையவர்மாயை யுவகையாரேகூறுவார். (௫௧)

மன்னனறியினென்னாமோ வறியாமிதனைமறைகினெனப்
பண்ணிமகளிருளத்தடக்கிக் கங்குல்வரவுபார்த்திருந்தா
ரன்னமனையாளல்லமன்ற னுடம்பாடுரைத்தவம்மொழியே
கன்னன்மதமேயெய்தபசும் புண்ணின்மருந்தாக்கவிப்புற்றாள். (௫௨)

புனலின்விலையாடிருமைந்தர் தம்முளொழுந்துபோயோடிப் [ப்
புனலின்விழுவான்போல் விழுந்துபோனா னொராயிறுபோய்ப்புணரியிடை
புனலின்விழுந்தழுந்துபட் டெழுவான்போலக்கு[illegible]டற்
புனலின்மிசைவந்தெழுந்தருள் பருதிப்புதுமண்டிலகமே. (௫௩)

தொக்ககமலம்வாய்மூடக் கள்ளுண்டிடாறுஞ்சுரும்பினங்கண்
மொய்க்குநறுமென்குவளைவாய் திறந்துமுகிழுஞ்சோய்ப்பொழிலிற்
புககமனீர்ககயதிரை [illegible] குருகுவீண்டின்பூத்துணைவாற்
செக்கரெனுஞ்செந்தீயினிடைப் பொரிந்தெரிந்தபொரிபோல ()

தூயசோதிப்பகலவன்போய் மேலைப்புணரிதோய்ந்திடலு
மாயைநாமங்கொண்டிருந்த பவள்மென்கலாபமயிலனையா
ளையகோம்பிகண்டுசினந் துடலந்திறப்புற்றடையகல்போன்
மேயமாலைப்பொழுதிலிருந் தெகர்தோன்றியதீந்ததால். (௫௫)

காலையரும்பிப்பகலெல்லாம் போதாயிருந்தகாமமலர்
மாலைமலர்ந்துபொருமமொரு மாயைநாமமணிவல்லி
மூலையிருந்துபுறம்போந்து விரிவெண்ணிலாமென்முற்றத்திற்
பலிமஞ்ஞையெனவிருந்து மதநோய்கைவாய்ப்பிதற்றுமால். (௫௬)

தாய்வாயடைந்திருந்தலையை மோதிமோதிசசலித்தலறக்
காய்வாய்நிலவேயுடன்பிறந்தா லிருந்துவாழுங்கடிமனையை
நீவாவெழுந்துவந்தழிப்பா யென்றாலந்தோநிலையின்றித்
தேய்வாய்நின்னேடியையில்லா வென்னையென்னசெய்யாயே. (௫௭)

---

* காயோ பழமோ வெனல்:— கைகூடிற்றோ இல்லையோ வெனக் குறிப்பித்தல்.

தக்கன்மகத்திலொருஞான்று தாளிற்படுநீதலையேறி
மிக்கமுனிவர்மந்திரநீ ரிறைப்பவின்னுமீண்டிலாய்
நக்கன்பவளவாய்ப்பட்டுக் களத்தேயிறங்குநஞ்சுநினை
யொக்குமென்பதறியாமை யன்றோவொளிர்வெண்மதியமே. (௫௮)

அங்கமதினஞ்சிருத்தினா னங்கமல்லாவவிர்சடைமேற்
றங்கநினைவைத்திட்டதுநின் கொடுமைகருதித்தானன்றோ
பொங்குமமுதகலையென்ன நின்னைப்புகறல்வெண்டிங்கா
ளிங்குமனிதர் * காராட்டை வெள்ளாடென்பதொக்குமால். (௫௯)

உருப்பமிகுவன்றழல்சிவப்புற் றுலகர்காணவொளிதரவு
நெருப்புவெண்மையென்பதுநன் னியாயர்நின்னைக்குறித்தன்றோ
பொருப்புநறுஞ்சந்தனசசேறு புலர்ந்துபொரியப்பூவணையும்
விருப்பமலருங்கொளுந்தவழல் வீசியெழுந்தவெண்டிங்காள். (௬௰)

இன்றோருலகிலெனக்கொன்று பிறர்க்கொன்றாகியிருக்கின்றாய்
நன்றோவுனக்குமதியமே ஞாயிற்றேபோல் வாழாமன்
முன்றோகையர்கரியாவவையு மொப்பக்காணுமுயற்சியினா
லன்றோதேய்ந்துபோகின்றா யந்தோவதனையறியாயோ. (௬௧)

கொல்லாநோன்புமுனிமலையிற் றோன்றியென்னைக்கொல்கின்றாய்
பொல்லாமந்தமாருதமே யென்னோகருணைபூண்டிலாய்
சொல்லாய்திருப்பாற்கடலினிடைத் தோன்றுங்கடுவிற்றன்குணமே
யல்லாலமுதகுணமுண்டோ நின்னைவெறுப்பதறிவன்றே. (௬௨)

உயிர்த்தபொழுதேநின்குரல்கே ளாமுன்னோடிற்றீன்றதாய்
நயத்தின்வளர்த்ததாய்குரல்கேட் டலுமேநடுங்கத்துறந்ததாற்
பயத்தமலர்ப்பூங்காவகத்தி லிருந்துபல்காற்கூவினாற்
செயிர்த்துநின்னைக்குயிலேநான் வெறுத்தல்செப்பவேண்டுமோ. ()

கன்னற்சிலையாயென்மனத்தைக் கலக்குங்காளைகவின்கண்டு
முன்னிற்பதற்குநாணியோ விங்கேநின்றுமுனிகின்றாய்
தன்னிற்பெரியரில்லையெனு மவனைச்சமரிற்றாக்காம
னன்னர்த்தளிரின்மெலியாரை யடர்த்தாயாண்மைநன்றரோ. (௬௪)

என்றுபுலம்பிமயன்முதிர்ந்து மாயையிரங்கியிருந்தயர
மன்றன்மலர்பெய்மெல்லணைப்பூம் பள்ளியறையின்மதமானி
சென்றுநம்பியல்லமனை முன்றந்திருத்தித்தேரையூண்
வென்றிமடங்கற்கிடுதல்போ லவளைவிடுத்தாளவ்வறையுள். (௬௫)

---

* காராட்டை வெள்ளாடென்பது - மங்கலம்.

வேறு.

வேனினண்பகலின்வெய்யபாலையுணீர் வேட்டவனந்நிலத்துறுநீர்
தூர்னெதிர்கண்டுபெருகவோடுதல்போற் றண்மலரணைமிசையமர்ந்த
ஞானநல்விளக்கைவிழியுறக்கண்டு நகையொடுதிருமுகமலர்ந்து [ல்.
பானலங்கண்ணிபுணர்முலைவிம்மப் பரிந்துமேல்விழுந்துபுல்லினளா

நாடியவாடிநிழலெனவணைமே னண்ணுறத்தோன்றியவிறையை
யோடினள்விழுந்துதழுவுறத்தழுவ வுருமையாலணைமிசைவிழுந்தே
யாடியினிழலைப்பற்றநீட்டியகை யாடியிற்றுக்கநின்றழுது
வாடுறமழலைப்பேதையேபோல வருந்தினண்மதர்விழிமாயை. (௬௭)

சொல்லருமழகன்றிருவுருவிழியிற்றோன்றலான்மீளவுமெழுந்து, புல்லினண்மலர் மென்கைகளால் வெளியைப் புல்லல்போற் 'சுவைத்தனள்வெறுவாய், வல்லியிவவாறு வெளிமயக்குற்று வள்ளறன்கைப் படாமையிஞ, லல்லமனலனீ துருவெளியென்ன வயிர்த்தனளுண் மையையன்றே. (௬௮)

அருந்தவநெடுநாண் முயன்றுதான்பெற்ற வமுதைவாய்வைத் திடுமளவிற், கரந்தவறுதல்போல லல்லமதேவன் கட்புலத்துற்று மென்றேளிற், பொருந்துற வெளிபோல் வராமையாற் றீயிற்புழு வெனப்பதைபதைத்தரிவை, வருந்தினள் காமமல்லமனன்றி வடிவுளார்யார்கடந்திடுவார். (௬௯)

கன்னிகையென்று மிறைமகளென்றுங் கருதிடா தவாவிளைத் திட்டு, மென்னிணைமுலைகண் மார்புறத்தழுவி யிதழ்சுவைத்தணைமி சைப்புணர்வுற், றின்னலினின்பக்கடலிடைமூழ்க வியன்றனுற்பெற் றிலேனென்று, தன்னகனைந்துவெய்துயிர்ப்பெறிந்தா டவத்தரையலைத்தவம்மடந்தை. (௭0)

பொழிந்திழிமழையால் வளிநனைந்திடுமேற் புகைந்தெழுமெரி யில்வான்வேமேன், முழுங்குவெண்டிரைப்பே ராழியக்கலயமுனிவனை யழுத்துமேனஞ்ச, மெழுந்தரன்றன்னை வருத்துமேன்மயக்கமெய்துவனல்லமதேவ, ஞெழிந்தவர்தம்மை யொழிவறமயக்கு மொருத்தியுமவன்றனை மயக்கும். (௭௧)

விண்ணினைக்குத்திக் கையினைப்பவர்போல் வேனெடுங்கண்ணியங்கிருந்த, வண்ணலைத்தழுவித்தழுவிமெய்வருந்தி யவசமுற்றணை மிசையுறங்கி, யெண்ணுறுநினைவா லவன்புணர்ந்ததுபோ லின்கனவொன்றுகண்டெழுந்தாள், கண்ணகனிலத்தினிருள் குடிப்பவனுங் கருங்கடன்முகட்டினிலெழுந்தான். (௭௨)

காலையின்மாலைவார் குழன்மாதர்க் கண்டுரைசெய்வ ளல்லமன் றன், கோலமென் சொல்லேன் விழியெதிர்தோன்றிக் குறுகிமென் கைப்படானதனாற், சாலவுநைந்து துயின்றனன்கனவிற் றடமுலை குழைந்திடப்புல்லி, மேலுநல்லருள்செய்துன்னைநானென்றும் விடு கிலேனென்றனனென்றாள். (எங)

அருந்தவமழிக்கு மழகுடையணங்கிற் ககப்படாவிறலினன்யா ரோ, புரந்தரனயன்மால்சுரர்முனிவோர்கிம் புருடர்வித்தியாதரரென் னப், பரந்தவர்தம்முளலனிவனொருவன் பார்த்திடிற் * பராபரனெ னறு, திருந்திழைமகளிர்மனத்துளவியந்து தெரிவையோடுரைத் தன்மேயினரால். (எச)

ஆசைநின்னுளத்தின் மிகவளர்ப்பதற்கா யல்லமனிவ்வகைநடித் தான், பேசுறுகனவின்பயனுனக்குரைப்பிற் பின்புனைமெய்யுறவணை யன், வாசமென்குழலாயென்றவண்மனத்தின் வருத்தமற்றிடவறிந்து ரைத்தார், காசணிமருங்குன்மடந்தையர்மாயை கவலைதீர்ந்துள்ளு ளேகளித்தாள். (எரு)

இன்னணமாயை மாநிடைநிகழ்ந்த வியல்பினை மோகினிசிலர் போய்ப்,பன்னுறவறிந்துமானமீக்கூரப் பருவார்கடலிடைப்படிந்து, தன்னொருமகள் வாழ்மாளிகையெய்தித் தனையையைப்பாங்கிமா ரொடுகூ, டென்னிதுசெய்தாயையகோபேதா யென்றுநைந்தின்ன னபுகன்றாள். (எசு)

மானமுமுயிரு மொருங்குநில்லாத வழியுயிர்தன்னையே விடுத் துத,தானுறுபொருளாய்மானமேகொளுமுன் றந்தைதன்செவிப்பட லென்னும், பானுவுமதியுமியங்குறுமளவும்பழியிதுவழிவழிவராதோ, யானுனைவருந்தியீன்றதுமிதற்கோ வென்செய்தாய்பாவியென் றிசை ப்பாள். (எஎ)

குரவர்தாமியைந்துகொடுத்திலராயிற் குமரவேளனையவரெனினு மருவராசிற்பர்தந்தைதாய்தங்க ளாணையினொழுகுகன்னியர்தா முருவிலாரெனினுங்குரவருண்மகிழ்வுற் றுதவுறினனையவர்தம்மைப் பரவுவான்கடவுளாகவேநினைந்து பண்பொடும்பயிலுவரன்றே. (எஅ)

மணம்புரிவதன்முன்குரவராணையினுமணவினைமுற்றியபின்ன, ரிணங்குறவருள்செய்கொழுநனாணையினுமிருப்பர்தம்வயமிலரென்று மணங்கனையவர்தா மென்பதையறிந்து மடாதவிசசெயலினைச்செய்

---

* பராபரம்-பரம் அறிவு, அபரம் அறியாமை.

T. 13657



தாய், பிணங்குவாரிலையென் றிருந்தனைபோலும் பேதைநீயென்று தாய்முனிந்தாள். (எக)

தான்செயுந்தவறுந்தாய்செயுமுனிவுந்தன்மனந்தனைநனிவருத்த, நான்செய்வதென்னென் றிருபிலநோக்கி நாணிநீர் விழியுகவிருந்தா, டேன்செய் மென்மொழியாண் மோகினிகண்டு சினந்தவிர்ந்தகமு கரைந்துன்மேல், மான்செயும்விழியாய் பிழையிலையென்றுண் மனமு கரைவன்னோபோலுண்டோ. (அ0)

மங்கையிர்நீயிர்சூழ்ந்தனரிருந்தும் வனோதருகேவியில்பயிர்போ, லெங்கடம்மடந்தை நிறையழிந்தொழிய வென்செய்தீர் பாவிகா ளென்று,ளங்குறமடவார்சொல்வதெம்பிராட்டியருளொடுகேண்மதி மதனு, லுங்குலமடந்தையுயிர்விடாதிருந்த துன்றவமென்றுரைந்து ரைத்தார். (அக)

பாங்கியர்பகர்ச்சினஞ்சிறிதவிந்துபாங்கியர்குழுவினுட்சிறப்புற், றோங்கியசகலைதன்முகநோக்கியுரைப்பண்மோகினியெனுமரசி, பூங் கணைமதவேளனையவல்லமனைப் புறத்துநின்றகற்றிடாதெங்க, ளோங் கதிர்முகமெல்லியன்முனம்விடுத்தா யென்கொலோவெனவவளுரை ப்பாள். (அஉ)

மானுடப்பிறவியரிதிலரசர் மக்களாகுதலரிததனி, லூனுறுப் பமைதலரிததி லரிதாலுணர்வொடுபோகங்கணுகர்த, றுனைனப்பெ ரியர்கூறலாலன்னாய் தவம்பலமுயன்றுநீபெற்ற, மீனெனப்பிறழுங கண்ணியைவெகுண்டு வெறுப்பதுதகாதெனவுரைத்தாள். (அ௩)

மோகினிசகலைபுகன் மொழிகேட்டு முகமலர்ந்தென்றவப்பய னும், பாகெனுமொழியாட்கு நிலையாமோரர்பயின் மணமரசர்மேற் றென்ப, ராகவிலிவளுக்கல்லமன்றுனை யருமணத்தலைவனுங்கவன் பாற், போகம்வேண்டியயாகொள்கெனப் புகன்றுபுகன்றனள்பின் னுமோர்மாற்றம். (அச)

உலகெலாமறியவதுசெய்காது முலகமன்னவனறியாமற் றிலகவாணுதலாளொழுக்கநீர் மறைநின்றேமொழியீரிவடமை நலமெலாநமதேயாதலானுமக்கு நான்சொல்வதென்னெனுமகளுக் கலகிலாவுவகைசெய்துபோயின டன்னகத்தினுண்முனிவுறவந்தாள்.

என்பிழைபொறுமலன்னையோ டென்பாலிருந்தவரேசொலினை தனு, லன்புடையன்னை முனியுமோவென்ன வறைந்தனண்மாயை கேட்டறைவாள், பொன்புரைசகலைநங்குருவனக்குப்புராரியேதலைவ

னென்றிருப்பப், பின்பிதுசெய்தனையெனினின்னைப் பிழைசொல் வார்மேற் பிழையுண்டோ. (அசு)

* மானனை யாய்நந்தாயறிந்தமையான் மறைந்ததுநொய்துபட்டன் றிக், கோணிதையறிவ னெனிளைனிதாமோ கோமளவல்லிகேண் மோ,போனதுபோகவினியவன்றன்னைப்புறத்தினில்விடுவதேயறிவு, தானெனவுரைத்தாண் மாயைகேட்டயர்ந்து தாங்கருந்துயர மோடி ருந்தாள். (அஎ)

அல்லமுனறிந்து நந்திருமடந்தைக் கடுத்ததென்புக லெனச் சகளை, வல்லிநின்மாயைவலையிடைப்பட்ட மறையெலாமிறைமனை நிறைந்த, தொல்லைநல்வினையாலறிந்திலன்வேந்த னொருவனும்யா முய்யவேண்டிச், சொல்லுவதொன்றுண்டையநீபுறத்தோற் சூழலிலி ருத்தனன்றென்றான். (அஅ)

† மாயையை யகன்று னடக்கக்காலெழுமோ வாயிடைமாற்ற மொன்றுண்டோ, போயொருவிடயமுணமனம்வருமோ பொருந்து றும்பகலிரவுளவோ, காயமுமுயிருங்கலந்துவாழ்வுருமோ கண்டன மெனவெனையொருவர், நீயறிவுறவிங்குரைப்பவருளரோநேரிழாயெ ன்றனனண்ணல். (அக)

* கருத்தினையறியா தவண்மொழிதனக்குங் காட்டியபொருளை யேகொண்டு, விரைத்துணர்மலர்மென்குழலினுள்புணரும் விதியுள தென்னிலெங்கொடியைத், தரித்தெவனொருநீயிருப்பினுமுனக்குத் தருமிதிலையம்வேண்டாவென், றுரைத்தனள்கருணையென்று செய் குவனென்றுழன் றவ ளண்ணலைநோக்கி. (கூ0)

சகளையிவ்வாறு மொழிதரநங்காய் சாலவுநன்று நன்றென்று, நகைமதிதவழுஞ் செஞ்சடைமதுகைநாயகன் றிருமுனஞ்சென்று, முகிழ்முலைநடிக்கும்பொழுது தன்செயல்செய்முயற்சியினின்றனன் றனக்குத், தருமெனவளர்போறிவிளுற் றன்னைத்தானலாதறிதரப்பு டாதான். (கூக)

## ஐந்தாவது
## பிரபுதேவர்வந்தகதி
## முற்றிற்று.

கதி - ரு - இ - திருவிருத்தங்கள் - நூ0எ.

---

† மாயை என்றது - சுண்டுப்பிரகிருதியை.

* இங்கே கருத்து எனல் - அந்தர்முக நாட்டத்தை.

## ஆருவது

# விமலைகதி.



அமலையேவவகனிலத்தெய்துபு
கமலமாயைதனக்கருண்மூர்த்தியா
நிமலனல்லமனீதியையன்பினால்
விமலைகூறியவண்ணம்விளம்புவாம். (க)

மதுலைகநாதனைநாடொறுமாயைதா
னதிகவர்ந்தனையாற்றிநமல்லம
னுதவுமான்மனத்தோங்கவிருந்தன
டிதிகளெண்ணிலசெல்லநிலத்திறனே. (௨)

ஆயகாலையிலம்பிகைஞாலமேன்
மாயைபோய்நெடுநாளினும்வந்திலள்
போயிராதவட்கொண்டிவண்போதென
வேயினாணல்விமலையையென்பவே. (௩)

கறையில்சோதிக்கயிலையினின்றுநம்
மிறைவியேவவிறைஞ்சிவருமுலைப்
பொறையினால்விழுந்தாளெனப்பூமிசை
மறுவிலாமதிபோல்பவள்வந்தனள். (௪)

வந்துபொன்னெயில்வட்டவணிவசை
நந்துபொன்மணிமாடநணுகியே
சந்தமாயைதனெதிர்நின்றனள்
கந்தமென்மலர்க்கற்பகவல்லிபோல். (௫)

நின்றபோதெதிர்கண்டுநிலவுல
கன்றுபோலுமிவ்வாயிழைவாழிட
மென்றுமாயையெழுந்துதொழுதணை
யொன்றுமேவியிருப்பவுதவினாள். (௬)

அருகிருந்தவனையரிருவரு
மிருகரங்களுமேந்துமணியென

உருவமைந்திவணுத்தனரென்றருகுழ்
புரமடந்தையர்புந்திவியந்தனர். (எ)

மாயைவந்தமடந்தையைநோக்கியே
நீயிருந்ததெங்குன்பெயர்யாதுநீ
மேயதன்மையென்னென்றவிளவலுந்
தேயுமண்ணிடைச்செப்புதன்மேயினள். (அ)

கயிலையென்னிடங்கற்பகவல்லியென்
பெயரியம்பின்விமலைபெருங்குலச
சயிலமங்கைநின்றன்புடையேயினள்
வியனிலந்தனில்வந்துளேமேயினேன். (௯)

என்னமன்மகளெம்பெருமாட்டிதான்
மன்னும்வெந்துயர்மக்கட்பிறப்பினன்
றன்னையுன்னிநின்றன்னைவிடுத்ததென்
பன்றுகென்னப்பகர்தரன்மேயினள். (௧0)

வேறு.

அல்லமன்வலிநிலை யறிந்துவாவென
நல்லுமைநினைவிட நன்றென்றெங்கைநீ
வல்லமைபேசியிம் மண்ணில்வந்தபின்
சொல்லியநின்பெருஞ் சூண்மறந்தனை. (௧௧)

நின்னையுமறிந்திலை நீயென்றவிவ
ளுன்னுறுமனமொழி யுறுதவல்லமன்
றன்னைநீயறிவுறுந் தன்மையுண்டுகொல்
கன்னிமாதுமைதம கலையையல்லையோ. (௧௨)

ஓடுறமருந்தயின் றுறங்கல்போலுமை
யாடியசூண்மறந் தயர்ந்திருத்தலா
னாடிநின்றனைத்தரற் கென்னைநல்லுமை
யேடவிழ்மலர்க்குழா லேவினாளென்றாள். (௧௩)

கதிரெழுபகலெனக் கண்டிடாதுதன்
மதியெழுமிரவென மனந்தெளிந்துதன்
றிதியொடுநினைவுமோர் சிறிதறிந்தனள்
விதியுணரிறைமகள் விமலைசொல்லினால். (௧௪)

மூலகாரணனெனச் சிலர்மொழிந்திடு
மாலுமோர்மானிடப் பிறப்பில்வந்துதன்
சீலமோர்ந்திலனெனிற் சிறியபேதைநான்
ஞாலமேன்மயங்குத னவிறல்வேண்டுமோ (கரு)

அல்லமனியல்பெலா மறியப்பூந்தணர்
வல்லிசின்குமுதவாய் மலர்ந்துகூறெனச
சொல்லிசின்றிணையடி தொழுதமாதொரு
வில்லுறழ்நுதல் விமலைகூறுவாள். (கசு)

கயிலையினுமையொடு கண்ணுதற்பிரான்
செயலுறமல்லமன் செய்திகூறலு
மயலுறவிருந்துநா னறிந்தேனனை
மயிலியல்கேளென வருத்தன்மேயினாள். (கஎ)

வேறு.

படியில்வள்ளிகாவையெனும்பதியிற்றனக்குநிகரில்லா
னொடிவில்கருணைநிராங்காரனென்னுமுண்மைப்பெயரினன்
மடிவில்கற்பினவன்றேவிமாசுதீர்ந்தசுந்தரனி
கடிவின்மறையாகமவிதிகள்கண்ணுற்றறியவொழுகுவார். (கஅ)

மெய்ம்மைசிவமேயல்லாதுவிரியுமுலகம்பொய்யென்பா
ரிம்மைமறுமைநிலையல்லவென்னவிகழ்ந்தகருத்தினோர்
செம்மைநெறியிற்புறமொடகந்திரியுங்கரணங்காமாதி
பொய்ம்மைவினையிலவர்தருநூல்பொருளாந்துணிந்துவீடுபெப்பார்.()

இனையராகியிருக்குநாளில்வாழ்க்கையினின்றிடுதலாற்
றனையரின்மையாநெஞ்சந்தளர்வான்போன்றநிராங்கார
னினையுந்தியானமில்லாதநெஞ்சுஞானமில்லாத
வினையும்போலுமக்களிலாவிக்கவாழ்வென்றியம்பியே. (உ0)

இந்தவுலகிற்குதவியாயியன்றதொழில்கள்பலசெய்யு
மைந்தன்வேண்டுமெனநிற்போன்மக்கட்பதடியாகுவா
னந்தவுலகிற்காநினைப்போனறங்கூர்மகனுமத்துவிதா
னந்தமுதவுமகவிருப்போன்ஞானியாகுமென்றெண்ணி. (உக)

உடம்பைப்பொறியைக்கரணத்தையுயிரைத்தானென்றுழலாம
லடங்கத்துறந்துதனையறிந்துபேதாபேதமென்னுமயல்

கடந்திட்டிருக்கும்பரமுத்திகாட்டும்புதல்வன்வேண்டுமென
விடும்பைப்பிறவிநோய்தணிப்பவெண்ணுமனத்தானெண்ணினான்.()

இரண்டோடிரண்டுமூவிரண்டையிரண்டாறிரண்டுமீமிசையெண்
ணிரண்டோடிரண்டுகொண்டிருந்த * விதழ்ப்பங்கயங்கள்கடந்து
யிருந்தகுளத்தின்மேலோராயிரந்தோட்டமலகமலமிசை [போ
யிருந்தசோதிதனைக்கண்டெம்மெண்ணமுடிப்பேமெனவெழுந்து. ()

வேறுமொருவனுடனிருப்பும்வேண்டாதவத்திற்கென்பதொடு
மாறுய்மனையுங்கொழுநனும்போய்வனத்திற்கமலாசனத்திருந்து
தேறுர்புனல்போற்றெளிந்தமனந்திறந்துந்திறவாவிழியொடுதம்
பேறுமிட்டலிங்கத்திற்பிறழாதமையும்படிவைத்து. (உ௪)

தறிபோலுடலநேரிருந்துதயங்குமருங்கினிருநாடி
நெறிபோய்மீளும்வளியதனைநிறுவிநடுநாடியிற்செலுத்தி
யறிவோர்சிறிதுஞ்சலியாமலன்னப்பெயர்மந்திரமாறிக் [ல்.
† குறிபோயிருந்தவொருகுறியைக்குறித்துக்கொண்டங்கிருந்தனரா

வாயுநிற்பமனநின்றுமனந்தானிற்பப்பொறிநின்று
பாயபொறிகணிற்பவிடர்படுபுன்புலன்கணின்றனவா
லாயபுலன்கணின்றமையாலகிலந்தோன்றுதுள்ளத்தே
‡ தூயபரமானந்தபரஞ்சோதிதோன்றக்கண்டிருந்தார். (உ௬)

ஒருங்குமனமோரடினையசிவயோகசமாதிநவதிங்க
ணிரம்பவிருந்தகாலத்துநெற்றிநிசையிற்பரஞ்சோதி
திரண்டுகுழவியுருவாகிச்சென்றுபுறமுற்றிடவதனை
விரும்புமிருவர்தாமுமுடன்விழிகடிறந்துக்கண்டனரால். (உ௭)

வெம்மையொழிந்துநிலத்திழிந்துவிளங்குகதிரோர்பனிநீங்கி
யெம்மையாளவருமதியோவிடுமிந்தனங்கணுகராத
செம்மையொளிவான்பேரழலோதெரியாதென்னவொளிர்ந்ததவர்
தம்மையறியாவுவகையுளந்தழைப்பச்சோதிமதலையே. (உ௮)

---

* ஆறுதாரகமலங்களுக்கு இதழ்களாவன:—மூலாதாரத்திற்கு-௪, சுவாதிஷ்டானத்திற்கு - ௬, மணிபூரகத்திற்கு - ௧௦, அநாகதத்திற்கு-௧௨, விசுத்திக்கு-௧௬, ஆக்ஞைக்கு-௨.

† குறிபோயிருந்த வொருகுறியாவது - வாச்சியார்த்த நெறித்தாநின்ற நிலையை.

‡ தூயபரமானந்த பரஞ்சோதி தோன்ற-லட்சியார்த்தங்காண.

அலைந்துபிறப்பிலாங்காரவஞ்ஞானிகளாமாணிடரு
மலிந்தசுரருமுனிவருமற்றையோரும்பெறுவரோ
தொலைந்தமாயையிராங்காரசுஞ்ஞானிகள்போன்மலவிருளை
நலிந்துவளர்சச்சிதானந்தநந்தாவிளக்காமதலையையே. (உகூ)

பேரானந்தம்பிள்ளையாப்பெற்றவர்க்குவிடயத்து
ளோரானந்தம்பெற்றுடனேயொழியுமுலகர்தம்மைநாம்
நேராவியம்பலாகுமோநிகர்தாந்தம்நிற்குமென்று
வாராரிளமென்முகிழ்முலைநன்மடவாயுரைப்பதன்றியே. (௩0)

பண்டுபாசந்தபுசிலரும்பரஞ்சோதியைத்தாந்தம்முளே
கண்டுவாழ்வுபெறுநாலாற்கண்ணிற்காட்டுமவரில்லை
தொண்டுபடுமிந்நிராங்காரசுஞ்ஞானிகடம்முட்கண்டு
கொண்டவொளியையுலகுய்யக்குழவியாக்கிக்காட்டினரால். (௩க)

சங்குந்தெய்வதுந்துமியுந்தழங்கமலர்மாமழைபொழிந்த
வெங்குந்திசைகள்விளங்கினகன்றீன்றமலடுதறிதளிர்த்த
பங்கங்கலந்தபுனறெளிந்தபதகர்மனமுந்தெளிந்தவருள்
பொங்குந்துறவர்மனமகிழ்ந்தபுனிதன்மகவாய்த்தோன்றுநாள். ()

நையாமனத்துநிராங்காரன்ஞானத்திரளாம்பிள்ளைதனை
மெய்யாமுளக்கணன்றியுங்கட்விழியுங்காணப்பெற்றானமென்
றெய்யாவுவகைக்கடன்மூழ்கியேறுன்மாநர்போடுறத்தமுவிக்
கையாலெடுப்பவெங்குநிறைநனவான்கனவாகுமெய்தாகி. (௩௩)

செவ்வாய்ஞானமயில்கொழுநன்செந்தாமரைத்தாள்வணங்குபுந
மிவ்வாய்மகனதியல்புநீயியம்பாயென்னவவன்றெரிந்து
சைவாகமமுமாரணமுஞ்சாற்றற்கரியநம்மகவை
யெவ்வாறுரைப்பனியான்மடவாயென்றுவியந்துகூறுவான். (௩௪)

நாம்பூரக்குழவியானமம்டா்குழவியாயினுன்
றீம்பாற்கடலிற்றுயில்வோனுஞ்செந்தாமரைமேலுறைவோனுந்
தாம்பார்க்கரியவடிமுடியோன்றானேயையமிதற்கில்லை
காம்பாற்புரிந்ததனையமேதாட்கனிவாய்த்தடங்கணுமென்றான். (௩௫)

ஆன்றமயல்செய்சையோகத்தன்றித்தவயோகத்திறு
லீன்றபொழுதிற்றன்மகனையிருந்துசான்றேனெனக்கேட்டுத்
தோன்றுமுவகைக்கடற்படிந்தாள்சுஞ்ஞானித்தாய்பசும்பொன்மலை
போன்றுவளர்ந்துமருங்குன்மிடிபோக்கவறியாவிளமுலையாய். (௩௬)

## வேறு.

* மத்தநெஞ்சகமோடுதம் மதியினுன்னையறைந்திதா
மெய்த்துறும்பொருளென்றதை வேதமாகமமோதுமென்
றுத்திகொண்டுரைசெய்தெதி ரொன்றைநிந்தைசெய்சமயர்தம்
பித்தையல்லெனுமல்லமாப் பிரபுவெனும்பெயரிட்டனர். (௧௭)

வினையிலாவொருவன்றரு மேனியாளனலாதொரு
மனிதனாகிநடித்திடும் வடிவனைசலிலல்லம
னினையுமாறுதவழ்ந்துபின் னின்றுமெல்லநடந்துபோய்
வனையுமாமணிமாளிகை மறுகினூடல்பயின்றனன். (௧௮)

வருகவெங்கடமாவியே யருககண்ணுகாமுதமே
வருகவெங்குலதீபமே வருககேடறுசெல்வமே
வருகபாசவிநாசனே வருகஞானவிநோதனே
வருகவென்றனை † மகிழ்தர வந்துமேல்விழுமல்லமன். (௧௯)

மாயையாலுளவாகிய வடிவுநாமமழித்துள
தாயவோர்பிரமந்தனை யறியுமாறறிவித்தல்போன்
மேயபேதையர்மணலமை வீடுதாள்கொடழித்தனன்
போயுலாவுவன்மானிடன் போலவேவிளையாடுவோன். (௨௦)

நாளியக்கினியங்குறு ஞாலமென்றறிவித்தல்போற்
றனுருட்டுநல்வீதியிற் றமனியச்சிறுதேரினை
யானடக்கருநெஞ்சக ரிதனையொக்குறுமென்பது
போனமக்குயிராயினோன் புதியபம்பரமாடுமால். (௨௧)

ஆடியொன்றெதிர்கொண்டுதம் மானனந்தெரிவார்கள்போற்
கூடியோனதருவெதிர்கொடு கொண்டுதன்பெருவிஞ்சைக
ளாடியொண்கலைகற்றல்போ னூடகம்பலசெய்தனன்
பீடுறும்பழமறைகளும் பேசரும்புகழாளனே. (௨௨)

தந்தைதாயுளனின்புறத் தனதுபேரருளாலிள
மைந்தனாகியிருந்தொரு வாலலீலைநடித்தரு
ளெந்தைதானுலகெங்கணு மெய்திமக்கடம்வல்வினை
சிந்துமாறுநினைந்திது செப்பன்மேயினனென்பவே. (௨௩)

---

* மத்த நெஞ்சகம் - அல்லதை யாமெனக்கோடல்.

† உளமகிழ்ந்திட என்றும் பாடம்.

௭

## ஏழாவது

# மாயைகோலாகலகதி.



நல்லெழில்விமலையின் னணைநவின்றிட
முல்லைவெண்ணகைகரு முயற்சியெண்ணியே
புல்லுவனவனையென் றெழுந்தபோதினி
லல்லமனகன்றமை யறியக்கூறுவாம். (௧)

முகிழ்மதியணிபவன் முதல்விக்கோதிய
வகைபெறவிமலைதான் வகுப்பமாயைகேட்
டகநெகிழ்வுற்றுநா மல்லமப்பெருந்
தகைதனையடைவதெவ் வாறுசாற்றென்றாள் (௨)

மழுவலமுயரிய வள்ளல்வந்தனை
யழகுறவியற்றினை யாயினல்லமன்
விழியெதிர்தோன்றிநீ மனத்துவேண்டிய
தொழிலுறநல்குவ னுனக்கென்றோதினாள். (௩)

முதல்வீயுரைசெயு முன்னமேயருண்
மதுகைநாயகன் றனைவழிபட்டேத்தினே
னதுதரும்பயனிலை யறிந்துளேனெனப்
புதுமயன்மூழ்கினாள் புலர்ந்துகூறினாள். (௪)

வெருவறவிளக விழியிலாமையாற்
பரசிவபூசனைப் பயனிலென்றனை
ளரகரவென்றுகா * தங்கையைத்திஃ
துரைசெயும்விமலைதன் னுளங்கலங்கியே. (௫)

பயனிலையருச்சனை பயின்றுமென்றனை
யயனரிமுதலிய வமரர்க்காயினு
நயமொடுசதாசிவ நாதன்பூசனை
முயலுதலன்றியோ ரெண்ணமுற்றுமோ. (௬)

---

* அகங்கையை - அங்கையெனல் விகாரம்.

வாசவனரியயன் வானநாட்டுளோர்
பாசமின்முனிவரர் பலருமண்ணிடைப்
பூசனைவிதிமுறை புரிந்தவாலயங்
காசணியல்குலாய் காண்கிலாய்கொலோ (௭)

மலைமகள்சூரர மகளிர்பாற்கட
லலைமகண்முனிவரில் லறக்கிழத்தியர்
கலைமகள்விழிநாதற் கடவுட்பூசையா
னிலைமைகளடைந்தமை நினைந்திலாய்கொலோ (௮)

சித்தியுமாயுளுஞ் சிறப்புங் * காமிய
புத்தியாரடையரப் புத்திநீக்கினோர்
முத்தியையடைவரெம் முதல்வன்பூசையாற்
சத்தியஞ்சத்தியந் தளாமருங்குலாய். (௯)

பீடுறுமானிடப் பிறப்புமாய்த்துநல்
லேடவிழ்மலரினு லிறையைப்பூசியார
பாடமைநரகெலாம் பார்த்திருப்பர்
மூடரையெண்ணுங்கான் முற்றிறப்பரே (௧௦)

காம்பவிழ்கோளரிமுக் கண்ணண்றண்மலா
ரேம்படுமலர்கொடு பூசைசெய்பவர்
பாம்பொடுபழகிலாப் பாமனென்றவர்
பூம்பதுமணமகிழ்ந் தலகம்போற்றுமே. (௧௧)

நோய்ப்பிறப்பிலாதகண் ணுதலைப்பூசியா
வாய்ப்புறத் † தலைக்கொரு மதிபெறுநர
ஞய்ப்பிறப்புற்றதி னறிஞரொள்ளுரு
நாய்ப்பிறப்பாற்றவு நன்றுநன்றரோ. (௧௨)

பொருவிலியாகமம் புகன்றமந்திரக்
கிரியைகள்வழுவறக் கிளக்குநல்லருட்
குருபரனருளினாற் கொண்டுசெய்குநர்
பரசிவபூசனைப் பயனைநண்ணுவார். (௧௩)

---

* காமியமாவது - இம்மையில் செல்வம், மக்கட்பேறு முதலியவையும், மறுமையில் சுவர்க்காதிபோகங்களுமாம்.

† தலைக்கொரு மதிபெறுதல் - சிவசாரூப்பியம் பெறுதல்.

அண்ணலைம்முகங்களு மருளுமாகம
நண்ணியவிதிமுறை நன்குசெய்யினு
மெண்ணருமன்புளத் தில்லையேயெனிற்
பண்ணியபூசனை பயன்றராதரோ. (கச)

பூசைசெய்தன்னையும் பூசிக்கப்படு
மீசனதியல்பையு மிறைவன்பூசைசெய்
யாசறுபொருளையு மறிவறிந்துயர்
தேசிகனருளினற் றெரியவேண்டுமால். (கரு)

மந்திரதந்திர வழுக்கள்வந்தவோ
சிந்தனைபுறவிட யத்திற்சென்றதோ
பைந்தொடிபூசனை பயனிலென்றுநீ
நிந்தனைசெய்ததென் னிகழ்த்துவாயென்றாள். (கசு)

என்றுநல்விமலைமா தியம்பப்பூசையால்
வென்றிகொளல்லமன் விழியிற்றோன்றிய
நன்றியையறிந்தில ளழுவிசிற்றலால்
வன்றுயர்மனமுற மாயைகூறுவாள். (கஎ)

வேறு.

ஒன்றையுமுணர்கிலேனு னெனக்குருவுரைத்தவாற்று
லின்றளவிலிங்கபூசை யியற்றியும்பயனொன்றில்லை
யென்றனள்பருவமுற்றோர்க் கிருமறையுபதேசிப்ப
தன்றிவன்மனிதற்கோதி னதுபயன்படுவதுண்டோ. (கஅ)

நெறிபலமுறையுரைத்து நினைந்திலளதனையந்தோ
மறுகுறுமனத்தளாகி மாயைமால்கொண்டிருந்தா
ளறிவிலர்க்கறிவிப்பார்தா மறிவிலராவரென்று
வெறிமலர்வணர்வார்கூந்தல் விமலைதன்மனந்தளர்ந்து. (கக)

இவண்மனங்கவன்றிருந்த திதனைநானறிவலென்று
குவிமுலைவிமலைசொல்வாள் கோற்றொடிமடந்தாய்நின்மே
லவிழ்மலரம்புபட்ட தாயிருந்தன்றெனக்கு
நவிலுதிமறையேலன்னை நகமகளாணையென்றாள். (உ0)

ஆணையைவெருவிமாயை யம்பலத்தாடாநின்ற
தாணுவுமுளம்விரும்புந் தண்ணுமைத்தொழிலான்கண்கட்

கூடுணையுமழகின் பிக்கா னொருவன்வந்தனனன்னோனைக்
காணலுமெனைநான்காணே னென்றனள்கற்றோர்போல. (உக)

அல்லமனையனும மவன்றனக்கலதென்னெஞ்சக்
கல்லுருகுறாதுமுக்கட் கடவுளுக்கன்றிமேரு
வில்லுருவாவதுண்டோ விளங்கிழாய்நின்னைக்காணு
நல்வினையொன்றிருப்ப நானுயிர்தரித்தேனென்றான். (உஉ)

நீநவிலல்லமன்வே னெடுங்கண்வாணுதன்மடந்தாய்
நானவிலல்லமன்றா னச்சுறன்றனக்குத்தக்க
மானிடவடிவங்கொண்டு வந்தனன்போலுமன்னான்
ஞானநல்விழியினன்றி நயந்துதன்னுண்மைகாட்டான். (உ௩)

என்னநல்விமலைகூற விலங்கிலைநெடுவேற்கண்ணி
தன்னிகரலமன்சச் சிதாநந்தசம்புவென்றா
யன்னவனலனிவன்றான் மத்தளவல்லமன்காண்
முன்னெடுபின்மயங்க மொழிந்தனையணங்கேயென்றாள். (உ௪)

வேண்டியவடிவங்கொண்டு வேண்டியவாறுசெய்யு
மாண்டருளல்லமற்கீ தாமென்றுமாகாதென்றங்
கோண்டருநினதுநெஞ்சாற் குறித்திடப்படுவதுண்டோ
பூண்டிகழிளமென்கொங்கைப் பொற்றொடியென்றுசொன்னாள். ()

தருக்கநின்னுடனுரைத்த றகாதினிபரங்கிலென்றன்
கருத்துறுமனையன்றன்னைக் காட்டுவல்கண்டுநீபின்
புரைத்தருளினையனென்ன வுணர்ந்தறிவரியனென்று
தெரித்தவனுயினன்றான் றிறலினைக்காண்பலென்றாள். (உசு)

கண்டுகொண்மணியின்றன்மை காட்டுதற்கறிந்துளோரைக்
கொண்டுசெல்பவர்போல்வந்த கோதையையுடன்கொண்டேகிப்
பண்டுதன்பூசைக்கெய்தும் பரிசுபோன்மகளிர்சூழத்
தொண்டையங்கனிவாய்மாயை சுடர்மணிக்கோயில்புக்காள். (உஎ)

அருச்சனைமுன்புபோனன் றற்றுபுமதுகைநாதன்
றிருச்சரணங்கள்போற்றிச சேயரிநெடுங்கட்செவ்வாய்
விரைத்துணர்மலர்மென்கூந்தல் விமலைமாதோடும்வந்து
திருத்தமண்டபம்புகுந்தா ணிரைவளைத்தளிர்க்கைமாயை. (உஅ)

அல்லமனிவன்றான்றானென் றறிதரவறிதிராமற்
சொல்லுகவெனவுடிக்குந் தோற்றம்போன்மத்தளத்தை

வல்லவனறைதலோடு மாயைநெஞ்சூசலாடச
சில்லரிமணிச்சிலம்பு சிலம்புறவாடுகின்றாள். (௨௯)

முன்னுறநின்றஞான மூர்த்திமேல்விழியுமார்த்துப்
பின்னுறநின்றமூர்த்தி மான்மிசைப்பெயருநெஞ்சு
மன்னுறவிருத்திநின்று மாயைதானடித்தாள்கண்டோர்
தன்னயனமுமாநெஞ்சுந் தன்மிசைவந்துவீழ. (௩௰)

அரத்தமதுறுபளிங்கா யரிமதர்மழைக்கண்மாயை
கருத்துறுகாமந்தன்பாற் காணுறத்தோன்றிநின்றான்
வருத்துறுசெயல்கொண்மாயை மருவியகுணமடுத்துப்
பரத்தினிற்றோன்றுமென்று பகாவதுமுண்மையன்றே. (௩௧)

கூத்துக்குப்புகுந்தநம்பி கொட்டுக்குநாணுறுமற்
சேர்த்தப்புநடநவின்று சிந்தைவேறாகிநின்றாள்
வார்த்தைக்குட்படாதஞான வாரியைவாயாற்சொல்ல
மூத்துக்குமதியையென்ற முகத்தியர்குழாத்துணி. (௩௨)

கையொடுசெல்லாநின்ற கடைக்கணான்மாயைகாட்ட
வையனைவிமலைகண்ணுற் றதிசயமுடையளாகி
வையகமதனின்மிக்க மணிதருளினையன்போல
மெய்யழகுடையான்றன்னை வேறுகண்டிலனென்றன்றி. (௩௩)

மாறருமலமனையிவ் வடிவுகொண்டிவள்செய்பூசைப்
பேறருளுதற்குற்றானோ பெருந்தவத்தாற்பிறந்த
வேறொருமகனோவென்று விமலையயர்த்தளாகித்
தேறிலளிற்பமாயஞ் செய்துநின்றனனெனக்கோமான். (௩௪)

தமியில்வேலையினிற்செய்மைத் தடத்தொருவனைக்கண்டன்றா
னமைவுறவருதல்போத லையமுற்றறியார்போல
நிமலனைவிகாரியென்று நிகழ்நிருவிகாரியென்றம்
விமலையேமயங்குமென்னின் மாயையைவெறுப்பதென்னே. (௩௫)

நீர்நிலைகோலாற்காணு நீர்மைபோலிங்குநின்றோன்
சீர்நிலைமாயைதன்னாற் றெரியுறவறியலென்றே
வோர்நிலைவடிவமாயைக் கினையனையலமனென்று
வார்நிலைமுலைமடந்தை வடிக்கணாற்காட்டினளால். (௩௬)

கண்ணினாற்கேட்குஞ்சீர்சால் கங்கணத்திறைவன்முன்னர்
கண்ணினாற்குமார்நெஞ்சக் கட்டவிழ்த்தாவொட்குக்

மெய்த்தவம்பயின்றுபெற்று வேந்தர்க்குங்கொடாமன்முக்க
ணத்தனுக்கென்றுவாளா வாசன்வைத்திருந்தபாவை
மத்தளிகன்பின்போனாண் மகடனையங்தோவாண்டு
பத்தின்மேல்வைத்திருத்தல் பாவமென்றிகழ்ந்தார்கண்டோர். (சரு)

பாவமும்பழியுநல்கும் பல்வகைப்புகழறங்கள்
யாவையுமழிக்குமெய்து மின்பமுமதனலெய்து
நோவுநன்மாபுஞ்செய்யு நோன்புநல்லொழுக்குமென்னை
சாவுமெண்ணுறுமனிற்குந் தயவதுபுன்காமமென்பார். (சசு)

## வேறு.

பஞ்சின்மேன் மிதிப்பினும்பதைபதைக்குமென்பதங்க
ளஞ்சுறாள்பரன்மிதிப்பனைந்நுணவவாவாள்
விஞ்சுஞாயிறுமுதிர்கதிர்வெதுப்பினைவெருவா
ணெஞ்சியோகிமேலிருத்தியங்கனாவலைசென்றாள். (சஎ)

காமவெந்தழலாலுடல்வெந்துளங்கரிந்த
கோமடந்தையலாலலைமேல்வருகுபிர்தண்
பூமடந்தையப்பாலையிற்போமெனிற்புனலிற்
றூவிளங்கயல்சுடுமணல்வீழ்ந்தெனத்தளரும். (சஅ)

பானலங்கருங்கண்ணிபோகியகொடும்பாலை
யானைதன்புழைக்கைநிகர்துடியிடைவிடாமல்
வானநின்றுபெய்யினுந்தழற்பட்டவல்லிரும்பின்
மேனகந்தெறிதிவலைபோற்சுவறுறும்விரைந்து. (சகூ)

மாலருந்தியபோதுதன்வயிற்றிடையிராதிப்
பாலையென்றுடனுமிழ்ந்திலனின்மெய்பதைத்து
வேலை[illegible]ன்றலைவீழ்ந்ததனலுமுண்வெண்ணெ
யாலும்[illegible]வெந்தழறணிந்துயிருய்குவனலனே. (ருo)

நாயினு[illegible]னீர்சிறுமுயற்குருளைகணக்குந்
தீயபாலையிற்றனைமறந்தவசத்திற்சென்ற
மாயைமாதுபின்றொடர்ந்துசென்மலர்முகமாதர்
வாயினீரநீஇக்கண்கணீர்சுரந்தனவந்து. (ருக)

கானனீரெனச்சிறிதிடங்கடிதுசென்றிளைப்பார்
மானனார்சிலர்வாய்க்கடைநாவினுல்வருடித்

தானையோர்கரமுகத்தெதிரசைத்துமெய்தளர்வார்
வேணிலாகொடிதென்றதம்விதியினைவெறுப்பார். (௫உ)

மாதரிவ்வணந்தொடர்ந்துபின்வரவெழின்மாயை
பாததாமரைவருந்தினபாலையுணடந்தவ
வாதிநாயகன்றனைமறித்துதவிசெய்தறன்மெல்
லோதியோடுறவாவமென்றழைகண்முன்றேடும். (௫௩)

கூந்தன்மேல்விரிமுகிறரக்கோபம்வாய்காட்ட
வேந்துகொஙகையின்வடமலையருவியையேய்ப்பக்
காந்தளங்கைகடரவருங்காரெனககலாபம்
வாய்ந்தமஞ்ஞைகண்மகிழவந்தனள்பெருவனத்தில். (௫௪)

சிங்கமுஙகரியும்பணிசெயத்தவஞ்செய்யு
வஙகுறுந்தவர்மாயைதன்முலையிடையாமா
தஙகமுஞ்சிறுசிஙகமுஙகண்டுளந்தளர்ந்து
பொங்குறுந்துயரோடெழுந்திரிந்துபோயினாரால். (௫௫)

கொடியவாள்வரிவேரசைகையைக்கண்டமான்குழாம்போ
னெடியவார்சடைமுனிவார்கலஙகுறுநிலையுந்
தொடியுலாவுமென்றோண்மடவார்வருதுயரு
முடியுமாறருள்செயநினைந்தனனருண்மூர்த்தி. (௫௬)

மாயைபோகவோர்கணத்திளிற்றரப்பணிர்மணத்தி
ஞெயுறீரெனவொருமுனிபோனின்றுநுவன்று
தூயமாதவர்க்கருள்செய்துதொல்லைநல்லுருவாய்த்
தேயுநுண்மருங்கணங்கெதிர்தோன்றினன்சிரித்து. (௫எ)

பொங்குமாமுல்வெஞ்சுரம்புக்கபூவையர்க்குக்
கங்கையாறெதிர்ந்தாலெனக்கண்ணெதிர்தோன்று
மெஙகளையகன்றிருவடித்தாமரையிணையைத்
தங்களாகுலந்தீர்ந்துமெய்குளிர்தரச்சார்ந்தார். (௫அ)

பெருகளற்றினிலழுந்தியங்கெழுபவன்பிடித்த
கரனெகிழ்த்துவிட்டகல்பவன்போலிளங்காளாய்
விரைமலர்க்கணைபட்டுளைநையுமெல்லியலை
யருளறத்துறந்தனையென்கொலென்றனரவர்தாம். (௫௯)

பற்றியாயிடைவிடுத்ததுசீயரேபற்றி
யிற்றைநாளுமைவிடுத்திலேனிதனையிவ்வுலக

முற்றுமோதுறுந்தம்பிழைமொழிகுநருளரோ
குற்றநாடியேதிலரிடைகூறுநரல்லால். (௬௦)

என்னவோதலுமல்லமனைநேர்ந்திழைமடவார்
மன்னன்மாமகண்மனத்தெழுகாமநோய்வளரு
முன்னநீமுனியாதிருந்தின்றுதான்முனிந்தா
யென்னையேறவிட்டேணியைவாங்கினையென்றா. (௬௧)

தொல்லைநின்றிருமேனிபோலுள்ளமுந்தூய்தாய்
நல்லையென்றனைநம்பினேனவஞ்சகநடிப்பு
வல்லையென்பதையறிந்திலேனெனவன்சொற்
சொலலிநின்றனண்மாயையெம்பிரானிதுசொல்லும் (௬௨)

வஞ்சநாடகநடிப்பதுமாயைநின்செயலோ
தஞ்சவல்லமன்றனசெயலோவெனத்தடங்கட்
பஞ்சின்மெல்லடியாய்கடவுளையும்படிறி
னெஞ்சமாதவர்தமையுங்கேட்டறிதிநீயென்றான். (௬௩)

கள்ளன்மயக்கைபக்களவுசெய்பொருளினைக்கண்டு
கொள்ளுநன்குறிபுகல்விப்பதொக்குமென்கூத்தைத்
தள்ளருஞ்சீர்முனிவராற்சொல்விக்குந்தகைமை
வள்ளலென்றபுன்னகைகொளீஇயுரைக்குமம்மாயை (௬௪)

நெஞ்சம்யாதினுலெனையகன்றிடவரினிக்கு
கஞ்சன்மாயையையிலனெனக்கழறவாயுண்டோ
விஞ்சும்வாணிறையென்னையெம்மெய்யினால்விடுவான்
றஞ்சமாயையென்றிகழ்தாத்தக்கசொற்கற்றோய் (௬௫)

என்னையஞ்சிமாவழுங்குகாட்டிருக்குமாதவரென்
றன்னையென்றிடவல்லரோவல்லரென்றன்னைப்
பின்னையென்றிடவல்லரியார்பேசுதியென்று
பின்னையென்றநுண்ணிடைசொலவல்லமன்விளம்பும். (௬௬)

என்றணையைக்கடப்பவரிலையிலையென்று
வென்றிகூறினையேலவர்நிற்கவேல்விழியாய்
நின்றவாருயிர்முயற்சியானிகழ்த்தியமாற்ற
மன்றிவாழ்மறையாகமத்தறிதியென்றறைந்தான் (௬௭)

† நாலுவாக்குநீபார்ப்பினுநானவற்றினுக்கு
மூலகாரணமாகுவன்மொழிந்தவிம்மாற்ற
நூலெலாமுறைத்திடுமெனச்செருக்கொடுக்கன்றன்
மாலெலாம்பிறப்பதற்கிடமாகியமாயை. (௬௮)

ஆட்டுகிற்பனியவகிலமுமென்றனைநின்னை
யாட்டுகிற்பவராரெனவுறிந்திலைபேதாய்
கேட்டுநின்னையோர்பொருளெனமுமொழிப்பார்
காட்டுமென்னைநன்கறிந்துயர்ஞானிகளவில்லார். (௬௯)

ஆரையாரிருந்தாட்டுவோரவரையறிவ்ய
மாரவேள்செயுநோய்மறித்ததன்பிலெனல்வாதம்
பாரொருவியம்பினள்பசிக்கனபிடிற்பசிநோய்
தீருமாமருந்துதவுவனென்பவர்சீர்போல். (௭௦)

காமியாகிநீயருச்சனைகடைப்பிடித்தமையா
லுமவேனெடுகண்ணினுய்காமபோனடித்தேன்
றீமைநெஞ்சினுற்குணினைந்தனைநினைத்தீண்டேன்
போமினுருடனென்றனன்வன்சொலாற்புனிதன். (௭௧)

வேறு.

மண்ணுலகில்வழிகுலமுந்தளத்தொழிலோன்றனைவிரும்பிச்சூழ்ந்தமீண்டார், எண்ணன்மகவொனும்பழியையமாளாமனிபயிப்போயவமைகொட்டி, விண்ணுலகநகைசெய்யசகுநன்முடியாதுவமாறுவியலன்பயகிற், பெண்ணரசிமுன்முகத்தில் விழிப்பலெனமாயையுளம்மிழையுற்றாள். (௭௨)

அன்பினுலன்பர்பெறற்கெளியனுமெனைசநானன்றனைந்துவந்துவன்பினுற்பெறவேண்டிநின்றழிந்தாயினுநுமோமாயைமாதே
முன்பினுக்கவிதைத்துக்கரும்பாகவேண்டிநிகமுயன்றனெஞ்சிற்
றன்பராய்த்திரியுமவர்போலென்றன்மாயைதனைத்துறக்கவல்லான்

கரைகுறுகவந்தகலங்கவிழ்ந்தநாய்கன்போலக்கலங்கிநின்ற
வரைபுரைமென்முலைமாயைதனைக்கண்டுவிமலையுளமறுகிமாழ்கி
யிரதமுறகளிம்புமலிசெம்பினியனுக்குருவியல்புபோல [ளுள்.
வருள்புரிதியையவிவள்குணநோக்காதென்றுமொழுதஞ்சிசொன்

† நாலுவாக்காவன - பரை, பைசந்தி, மத்திமை, வைகரி என்பவைகளாம்,

இலங்கிலைவேன் மருட்டுமெதர்விழிவிமலாய் வறியவோடிரதந் தன்று, னலங்கிளர்பொன்னுருவாயிலென்றலிம்மாயையின் பாணுகு மென்று, புலங்களறிவரியபரமானந்தசிவயோகிபுகலமாயை, கலங் கியரிபசும்புண்ணிற்செவ்வேல்பட்டெனவழுங்கிக்கழறுகின்றாள். ()

நனவொருபுன்கனவாகமயங்கவெனைப் புணர்தலின்றளும்வெ ன்றி, யெனதெனநின்றளஞ்செருக்கிமடமாயை கூறுதலுமெங்கள் கோமான், கனவினுகர்வுறுமுணவுகுறையுமோ பசியதனற்களேவ துண்டோ, நினைவில்வருகனவொன்றுகண்டிறுமாந்தனை பேதாய் நீதானென்றான். (எசு)

எவ்வண்ணமுரை வன்மைகொண்டு நீதள்ளினுநா னின்றுபோ கேன், கைவண்ணமலர்ப்பகழிமதனனையாய் நினைத்தழுவிக்கட்டிக் கொண்டு, செவ்வண்ணனமர்கைலைக்கேகியெஞ்சூண் முடிப்பலெ னச்செருக்கிச்சொன்னுள், மைவண்ணமலர்க்குழலாள் வான்றிரட்டி விழுங்குவலென்மாற்றம்போல. (எள)

முடிக்குமலர்க்குழன்மடவாள் சூண்முடிப்பலெனு மொழிக்கு முறுவல்செய்து, பிடிக்கவலையாயிலெனைப்பிடிநடையாய் பிடியெ ன்றுபிரான்மறைந்தான், மடக்கொடிதன்விழியினுற் காண்பதும் போய்மதிமயங்கிவறிதுநின்றாள், சுடர்த்தொடிமென்றேண்மடவா ரின்றிழந்தோமிவளை யெனத்துயருழந்தார். (எஅ)

வெண்டிங்கணிலவுவாயிடைப்புகினுஞ்சகோரமெனுமென்புளன்றி யுண்டிங்குவாழுமுயிருளதோநம்மல்லமனுமொருவன்றனும் பண்டங்குமொழிமாயைகைப்படினுமவள்பிடிக்கப்படுவனோதான் றெண்டன்பின்வழிநின்றுமனமாசுதீர்ந்தபெருந்தூயோர்க்கல்லால்.

மாயைதனைவாதித்துத்தள்ளுபுதன்னிலைநின்றுமாயாவாதி யாயினனல்வீரசைவசித்தாந்தகுலதீபமாயினானென் றேயுமனநிறுவியிறப்பெதிர்வுநிகழ்வெனுங்காலமுணருமாற்றற் [ர். றூயமுனிவரரெல்லாமல்லமனைத்தொழுது தவந்தொடங்கிவாழ்ந்தா

ஏழாவது

மாயைகோலாகலகதி

முற்றிற்று.

---

கதி - எ - இ திருவிருத்தங்கள் - சருஎ.

எட்டாவது

# வசவண்ணர்வந்தகதி.

அசைவிலல்லமற் காயுமைநற்கலை
வசவதேவன் வலியகணங்கடாங்
கசியுமன்பிற் கயிலையினின்றுதென்
றிசையில்வந்த திறமுரைசெய்குவாம். (௧)

தீங்குகாணுஞ் சிறுவிலைநாட்கடன்
வாங்குமோர்பொருள் போக்கும்வறியர்போ
னீங்கஞான நெடுந்தகைமாயைநின்
றேங்குமாவி யியக்கமு மின்றியே. (௨)

மத்தளங்கொடு வந்தவன்றன்னொடு
பொய்த்தநுண்ணிடை போயினளன்னவே
சித்தநாணுந் துயரமுந்தின்றிடப்
பித்தர்போற்பின் றொடர்ந்தனர்பெற்றவர் (௩)

தக்கதந்தைதாய் * சாயப்பழிசெய
மக்களின்றி மலடர்தாமாதலு
மிக்கவன்பிணி மேவலுநல்லவென்
றுக்கநெஞ்சுட னோடினன்மன்னவன் (௪)

காய்பசிக்குக் கவன்றுதனைதின
வாய்பதைக்கு மறவர்வலையிடைப்
போய்விழக்குழக் கன்றுபுகுந்தவண்
டாய்பதைப்பது தன்னெதிர்காணுமோ. (௫)

கண்டுவார்சிலைக் கானவர்பார்ப்பினைக்
கொண்டுபோகக் குடம்பைகண்டேங்கியே
துண்டமாரிரை சோரப்பறவைகண்
மண்டுநோயின் மறுகுதல்காணுமோ. (௬)

அரின்மிதித்திட் டதர்படப்பூம்பணை
மரமுறித்து மழைமதக்கைம்முக

* சாய்க்கவென்பது - சாயவென்றாயிற்று.

வுரலடிப்பிறை யொண்மருப்பஞ்செவிக்
கரிநடப்பக் கலங்கியிரியுமோ (எ)

பரற்கண்மென்பதம் வைத்துப்பதைக்குமோ
சுரத்துமேனி துவண்டுவெதும்பிநீ
ரிரக்குமோமக னென்செயுமோவெனத்
தரிக்கருந்துயர் தாயடைந்தேகினாள். (அ)

பொன்னையன்ன புதல்விபொருட்டிவண்
மன்னர்மன்னன் மனத்தில்வளர்ந்தெழு
மின்னல்காணவு முமொழான்றிருந்ததென்
றன்னிமாழ்கியவ் வூரர்பின்போயினார். (கூ)

அயர்ந்துநிற்கு மரிவையைக்கண்டுநான்
முயன்றுமெய்த்தவ முற்றும்பயின்றுனைப்
பயந்ததற்குப் பயனன்றுதவினை
யயந்தெமக்கெனத் தந்தைதவின்றனன். (க0)

என்னைநீகுகி யிழிதொழில்செய்பவன்
றன்னைநாடித் தலைமையிழந்ததே
சன்னிநீகொடுங் காட்டில்வந்தாயென
வன்னையோவென் றாற்றியழுதனள் (கக)

மகனுமல்லன லல்லமன்மாயையும்
மகளுமல்லள் வரைபுரைதோளினீ
யிகலும்வாட்க ணரசியுநீயுமிங்
ககலுமென்று விமலையறைகுவாள். (கஉ)

வினைப்பயன்கொள வேண்டுநரோரிடந்
தனைப்பொருந்துறச் சம்பந்தமாத்திரத்
தெனக்கினோரிவ ரென்றபிமானமொன்
றனைப்பொருந்தி யழிவரறிவிலார். (கங)

தனையராகியுந் தந்தைதாயாகியு
முனையுறுத வுயிரிலையாதலா
லினையர்கேளி ரினையரயலென
நினைவுறேன்மினிர் நெட்டிலைவேலினாய். (கச)

வேனெடுங்கண் விமலையிவைசொலப்
பானலங்கட் பனிமதிவாண்முகப்

பூநறுங்குழற் பொற்றொடிமாயைமுன்
ருனடைந்தமை தந்தைக்குணர்த்தியே. (கரு)

காவியங்கட் கனியிதழ்மாதுமை
யேவவந்தவென் னெண்ணமுடித்திலன்
போவனங்கிப் புரிகுழலோடுநா
னீவிர்நோவன்மி னென்னைநினைந்தென்று. (கசு)

விரைந்தெழுந்து விமலையணங்கொடு
வருந்துநெஞ்சக மாயையக்காட்டுளோர்
பிரிந்தழுங்குரல் பின்றொடர்ந்தேகவே
பொருந்தருங்கயி லைத்தடம்போயினுள். (கஎ)

அழுதுவாய்விட் டரற்றிலன்றன்னுடல்
புழுதியாடப் புரண்டிலன்மன்னவன்
பழுதிலாததன் பாவைகாணுமையா
லெழுதுமோவிய மென்னநின்றனரோ. (கஅ)

விழுவண்மீள வெழுவண்மெலிந்துநைந்
தழுவண்மேனி யசைந்துநிலங்கையா
லுழுவள்வாய்கொண் டுயிர்ப்பளிறப்பலென்
றெழுவள்கைநெரித் தேங்குவளன்னையே. (ககூ)

பாடுமொதரும் பந்துங்கழங்குநின்
ருடுமொதரு மாகுமரிவைய
ரோடுமேவி யொருமகள்வாழ்ந்தவம்
மாடநானினிக் கண்டுயிர்வாழ்வனே. (உ0)

துளிக்கும்வார்மதுச சோலையும்வாவியும்
பளிக்குமாடமும் பாழ்படவென்மகள்
களிக்குமானிருங் காட்டினுளெம்மைவிட்
டொளிக்குமாறொரு சற்றுமுணர்ந்திலேன். (உக)

என்னைநீவிட்டி ருப்பினும்பொற்றொடி
யுன்னைநான்விட் டுயிர்பிழையேனென
வன்னைவாய்விட் டரற்றினளாயிடை
மின்னனுருங் கதறினர்வேலைபோல். (உஉ)

வந்துவேந்தன் வழிமரபாரிய
னுந்தமாமக ளேன்மைநுமக்குநான்

முந்துகூறில தோதுயர்மூழ்கினீர்
சிந்தைசோர்தற காரணஞ்செப்புவான். (உங)

அருந்தவம்பல வாற்றமறிஞரும்
பொருந்தருங்கயி லைக்குமின்போனமை
தெரிந்துநெஞ்சந் தெரியவறிந்துநீர்
வருந்துந்தன்மை மடமைமடமையே. (உச)

சிலைநுதற்பசுந் தேமொழிமாதுமை
கலைநுமக்குக் கவின்மகளாகநீர்
தலைமைபெற்றது சாலுமுமையினி
யுலகினிற்பிற ரொப்பவரில்லையே. (உரு)

என்றுகூறக் குரவனிறைமகன்
மன்றல்வாழ்க்கை மனையொடுதுன்பொரீஇச
சென்றமாடத் திருநகரிற்புகாக
குன்றமாமதிற் கோயிலினண்ணினான். (உசு)

வேறு

கயிலையில்விமலையோடுங் கவிரிதழ்மாயைசென்று
வியனிலமதனிற்றன்னை விடுத்தநான்றென்னவாமோர்
பயிலவைதன்னிற்புக்குப் பரனையுமிமையமீன்ற
மயிலியறனையும்வாழ்த்தி வணங்கியங்கருகுநின்றாள். (உஎ)

பொலிவழிவதனங்கண்ட போதேயம்மாயைநெஞ்சின்
மெலிவினையறிந்துமன்னை வினவலுந்துள்கொண்டேகி
மலர்தலையுலகிற்றன்முன் மயங்கியவாறனைத்து
நலியுநாணடவருந்தி நவின்றனள்குறிப்பிற்றோன்ற. (உஅ)

நன்னகமகள்கேட்டுள்ள நாணுபுமுகங்கவிழ்ந்தாள்
பன்னகசயனனாதி பண்ணவர்நெருங்கவைக்கண்
முன்னகைசெய்துதீய முப்புரமாளச்செய்தான்
புன்னகைபுரிந்தான்பய்கிற் புரிகுழல்செருக்குமாள. (உகூ)

அரியனென்றுனக்குநான்சொ லல்லமனரியனோமற்
றெரியனோவுரைத்திநீயென் றிலங்கயிலெறிதலேபோல்
வெளியபுன்முறுவல்செய்ய விமலன்வெண்மதியங்கண்ட
நளினமென்மலர்போலென்றாய் நகைமுகமொடுங்கினாளால். (௩0)

போக்கரும்வலிபுகன்று போய்வருமாயைசொன்ன
வாக்கினில்வருந்துவேனை யுள்ளனீநகைசெய்தெள்ளான்

மூக்கிலிமுகத்தின்முன்னர் முகுரங்காட்டுதல்போன்மென்ன
மீக்கிளரிமையமீன்ற மெல்லியன்மேலிதுசொன்னார். (௯௧)

கடம்பயில்வலத்தைமங்கை காணிதல்வருந்திறையொன்
றடைந்தருள்சொல்வன்றால யலைக்குமம்மாயைசூளா
னெடுந்துகைமுன்னஞ்சென்ற நிலையியைன்றுகொல்லோவான்
மடக்கன்முன்வெல்லேவென்று வருதலைபாற்றலன்றே. (௯௨)

அல்லமன்பெருமையெல்லா மிளை யுருமறிந்துகொள்ள
நல்லெழிலின்மலைமடந்தாய் நன்குணர்ந்திலைநீயென்று
சொல்லுநரன்றியின்னே நீந்தனைசொல்லவல்லா
ரில்லையென்றியம்பயாவு மீன்றவளியம்புகின்றாள். (௯௩)

பொறியிலியேன்செய்தீமை பொறுத்தருள்புரிந்துமெய்ம்மை
யறிவருள்குரவனுக்கு மல்லமன்றன்னைக்காணு
நெறியருள்புரிதியென்ன நிரைவளையணையிக்கூற
மறிமழுவமர்ந்திருக்கு மலர்க்கைவானவனுரைப்பான். (௯௪)

மத்தமதுறுகுணத்து மாயையவிடுத்தவாற்று
னித்தியகுரவன்றன்னை நீயறிந்திலையணங்கே
சத்துவகலைமடந்தை தனைவிளிவிடுத்தியாயிற்
கைத்தலநெல்லிபோலக் காண்குவையவனையென்றான். (௯௫)

மிடியடவிறப்பவென்று மேவுமோரிடத்திற்செம்பொன்
குடமொடுகண்டவன்போற் கொண்டெய்தாண்டுறந்துவந்து
துடியிடையுமையெம்பாவைத் தொழுதுவந்துவகையவப்
படிமிசையலமற்காண்பான் செல்கெனப்பணித்தானன்றே. (௯௬)

அப்பொழுதருகுநின்ற வருணந்திதேவனன்னை
யொப்பரும்பத்தியென்னு மஞ்சனமொன்றுண்டாயிற்
செப்பருஞானந்த வல்லமதேவனென்னும்
வைப்பினையெளிதுகாண லாமெனமகிழ்ந்துசொன்னான். (௯௭)

அழிவருநிதியவைப்பை யஞ்சனங்கொண்டுகாணும்
விழியுடையவன்போன்ஞான மெய்க்குரவனைத்தான்கண்டு
கழிமயலன்பர்காணக் காட்டுவோனிவனென்றெம்மை
வழிவழியடிமைகொள்ளும் வள்ளனந்தியைப்புகழ்ந்து. (௯௮)

சத்தியால்யான்பிணித்த தன்னைதனைத்தனதுதூய
பத்தியாலவிழ்க்கவல்லோன் பார்க்கினிந்நந்தியேதா

*னித்திஞல்விலங்குபூட்டு மிறைவஞேவிடுவிப்பாஞே
மெய்த்தவாரருளிஞேன் யார் விளம்புகவென்றுசொல்வான். (௩௯)

அல்லமனென்னுஞான வானையையகப்படுத்த
வல்லவொண்பார்வை நீயேயாதலான்மண்ணிற்போகி
யெல்லையிலன்பர்நெஞ்சத் தின்பருணந்தியென்று
சொல்லினனுயிரிற்ருேன்ருத் துணையெனவிருக்கும்பெம்மான். (௪0)

அந்திவண்ணத்தெங்கோமா னருளிஞலின்னகூறச்
சுந்தரிதனக்குமெட்டாத் தூயவன்றன்னைக்காண
நந்திவல்லவஞேவென்று நகைசெய்துகணங்கடம்முள்
வந்தொருசிலருரைப்ப மங்கைபங்காளன்சொல்வான். (௪௧)

நந்தியென்றனையுணர்ந்தா ஞனவன்றனையுணர்ந்தேன்
சிந்தைசெய்தெம்மைநீவிர் தெளிவுறவறிகிலீரென்
றெந்தையெம்பெருமான்கூற விகழ்ந்துரைசெய்தோரெல்லாம்
வெந்துயர்கொண்டுநின்ருர் மீளவும்விமலன்சொல்வான். (௪௨)

மாசறுநந்திபத்தி வார்த்தையாலறியீர்நீவிர்
காசினியதனிற்சென்று கண்களாலமையக்கண்டு
பேசுதிர்பின்னரென்று பெருந்தகைநந்திதன்ஞே
டீசஞெண்கணங்கடம்மை யேவினனருளிஞனே. (௪௩)

கண்ணுதலருளாலேவுங் கணங்களுட்டலைமைபெற்ருேர்
மண்ணுலகதனில்வேண்டும் வளம்பதிதோறும்வந்து
நண்ணினருலகர்கண்ணி னரர்வடிவாகத்தோன்ற
வெண்ணுறினெழுநூற்றின்மே லெழுபதென்றுரைக்குமெண்ணுர். ()

நந்தியென்கின்றஞான ஞாயிறுநிலத்துதிப்பின்
முந்துறுமமணரென்னு மூடுவல்லிருள்கெட்டோடுஞ்
சந்திரமௌலிசீர்வெண் டாமரைமலருமென்ஞெ
விந்திரன்முதலாயுள்ள விமையவர்மனமகிழ்ந்தார். (௪௫)

எட்டாவது

வசவண்ணர்வந்தகதி

முற்றிற்று.

---

கதி-அ-இ திருவிருத்தங்கள்-௪௮௨.

---

* இதிஞலென்றது - இத்திஞலென்ருயது, எதுகை பற்றிவந்த விரித்தல் விகாரம்.

௯

## ஒன்பதாவது

# அக்கமாதேவியுற்பத்திகதி.



புரஞ்சுடுசிறுநகைப் புனிதன்பாலமர்
கருந்தடங்கண்ணிதன் கலையுநர்த்திய
மருங்கணாநாதரு மகனிலத்திடை
வருந்திறமறிந்தவா வகுத்துக்கூறுவாம். (௧)

பெடையொடு * சுரும்பினம் பெரிதிரைந்திடக்
கடிதடமளவுவாய்க் காலினோடியே
மடையுடைமதுமழை மலர்பெய்சோலைசூ
ழுடுதடையெனுநக ரொன்றுண்டாயிடை. (௨)

நன்மையென்பனவெலா முடையனுண்மறைப்
புன்மையென்பனவெலாம் பொருந்தானெனுந்
தன்மைதன்பெயரினா லறியத்தக்கவ
னின்மலனெனவொரு நிகரிலானுளன். (௩)

அவனெழின்மனையவ ளாடகத்தினைச
சுவணமென்குதலெனச் சுமதியென்பவ
டவனிலைதன்னினுந் தலைமைத்தென்னவே
யுவமையிலில்லறத் தொழுகு † நீர்மையாள். (௪)

தூநிருமலனுக்கச் சுமதிதன்னிடைத்
தானொருமகளெனச் சார்ந்துதோன்றினா
‡ ளானுயர்கொடியினோ னங்கைதாங்குரு
மானுறழ்சத்துவ கலைமடந்தையே. (௫)

மதிபெறுகடலென மகளையீன்றவர்
நதிபெறுசடைமுடி நம்பன்பாலுறு
கதிபெறுமதிநுதற் கரும்பைப்பெற்றுநற்
றுதிபெறுமலையென மகிழ்ச்சிதுன்னினார். (௬)

---

* சுரும்பு - ஆண்வண்டு. † நீர்மை - குணம்.
‡ ஆனுயர்கொடி - இடபம்வரைந்தகொடி.

நெறிமுறைநிருமல னீறுசாத்தியே
யறிவருமஞ்செழுத் தறைந்துமெய்யுணர்
குறியினைத்தரித்தனன் குழவியாகிய
பொறிநிகருறமொரு புதல்விக்கென்பவே. (௭)

இந்துவார்சடையினே னிடத்தளேயெனுஞ்
சிந்தையான்மகளைமா தேவியென்றொரு
சந்தநாமங்கொடுத் தானமைந்தனன்
றந்தையாதற்குநற் றவம்புரிந்தவன். (௮)

அறிவருளாதர வடக்கம்வாய்மைமெய்த்
துறவுநல்லொழுக்கமே தூய்மையென்றிவை
யுறவொடுகுழவியா யுடன்வளர்ந்திட
மறுவறுசமதிதன் மகள்வளர்ந்தனள். (௯)

வாடியமருங்குலம் மாதைதோன்றநாட்
கோடியசிலைகொடு தவநகுலைப்பவே
யோடியமதனன்மா தேவியோங்குநாள்
வீடியசிலையறுப் பீர்க்குமாற்கினன் (௧௦)

விழுந்தனகொடிய தீவினைப் * பரப்பெலா
மெழுந்தனநல்லறம் யாவுந்திகழ்களா
கொழுந்தெனநிருமலன் குமரியோங்குநாள்
முழங்கினசிவாகம முற்றுமெங்குமே. (௧௧)

வேறு.

ஈங்குமாதேவி யின்னணமிருப்ப வெம்பிரானேவிய கணங்க, டாங்கள்வேண்டிய வொண்பதி தொறுமுன்செய் தவத்தர்பானன் மகவாகித், தீங்கிலாசசித்த ராமையன்மாச்சி தேவனென் றிடுபெயர் முதலா, யோங்குநாமங்கள் வேறுவேறாக்கொண் டுற்றனர்நற்றவ முயன்று. (௧௨)

பயக்குறுமினிய சங்காபூசைபல்வகை நெறிப்படவியற்றிச, செ யற்கருஞ்செய்கைசெய்தவரிருந்தார் தென்றிசைகயிலைபோற்சிறக்க, மயக்குறுமமணவல்லிருண்மெலிய வயிணவமெனுமுடுமழுங்க, வியக் குறுசைவமலர்நன்னூந்தி வெய்யவனுதித்தமைவிரிப்பாம். (௧௩)

* பரப்பு - விரிவு.

வாயின்மண்ணிட்டுக் கொண்டவன்றன்னை மதித்துநன்னுதலின்மண்ணிடாமற், பாயும்வெண்டிரையிற் றயில்பவன்றனக்குப் பரிதியொன் றளித்தருண்முக்க, ணாயகன்றனையே கருதிவெண்ணீற்றுனன்னுதல் வீதியையணியுந், தூயநன்மறையோர் தமக்கிடமாகுந் தூரிசிலாவிங்குளாபுரியே. (கச)

கதிர்விளைசெந்நெற்காடு சூழ்கரும்புகரும்புசூழ் கதலியங்காடு சூழ், புதுநறும்பாளைக்கமுகநூசூழ முப்புடைப்பசுங்காயதெங்கதரு, முதிர்கனித்தேமாந்தண்பொழில் பார்ப்பார்க்குயர்வுறு நயர்வடிபுகாம, லதிர்முரசியம்பும் வீதியந்நகரிற்கணிகள் வைத்திடுபடைகாட்டும்.

விருந்தினுக்கிடு. மன்னமந்நகரின்மேதியர் மடைநிரையெல்லாம், பொருந்துமன்னதிற்கிடு வனவிருந்துபுனல்வயற்செயகமலங்கள், வருந்து நுண்ணிடைமான் மாதர்கைம்மலர்க்கு வண்டினைக்கொடுப்பர்பேரின்பந், தருந்தனிநகர்சூழ் தடங்கள்வண்டிற்குத் தாண்மலர்கொடுத்திடுமன்றே. (கரு)

இந்நகர்வாழுமறையவர்செய்புரபாக தூமம்படிந்தன்றோ, பொன்னகர்வாணர் நிறைந்தவோயுளாயப் பொருந்துதலிந்நகர்மறையோ, ருன்னருமனுவா னெருப்பினைவளர்த்திட் டொழுகுநீர்காட்டுதன்னன்றிப், பின்னொருசெயலாற் கலியுநந்தனசிர்பெருகுநா காணுறப்படுமோ. (கஎ)

இனையமாநகரினந்தணர்க் கெல்லாநிறைமை பூண்டுளனொருமறையோ, னினையெலாமன்றுமானுமுறையெல்லா நிருமலன்றனியினுஞ்செய்யும், வினையெலாமவன்பூசனையினும் வைத்தோன்வேதமுமொழுக்கமுமுவல்லான், மனையுளானெனினுந் துறந்தவர்க்கொப்பான்மற்றவனுமமாதாசன். (கஅ)

திருந்தியவனையான்றேவிதன்னுமஞ்செப்பின்மாதாம்பிகையென்பாளருந்ததிமுதலாங்கற்புடையார்தமருவிலையூறின்றிமுற்ற
நிரந்தரமவளைக்கைகுவித்திறைஞ்சிநினைந்துபின்பாயலிற்படுப்பார்
கருந்தடங்கயற்கட்பூங்கொடியனையாள்கற்பினையாவரேபுகல்வார். ()

பூங்கொடியனமாதாம்பிகைபெருமைபுனைந்துரையன்றபட்டாங்கே
யோங்கிய* வபரசிவனெனவேதமுறைத்திடுமருணந்திவந்தான்

* பரசிவம் அபரசிவமென் றிருபாற்று, பரசிவமெனல் - அபரோட்சத்தை. அபரசிவமெனல், பரோட்சத்தை.

ருங்குறவவடன்வயிற்றிடையதனூற்றக்கவர்தகவிலரென்ப [ர்.
தாங்கவர்பயந்தபுதல்வனூற்றெளியவழியினென் றறைகுவர்பெரியோ

* ஐந்தொழிலொருவன்றிருவுளமகிழு † மறுதொழிலாளன்மா
தரசன், பைந்தொடிகொழுநற்றொழுதெழுதொழிலாள்பரிந்துநீவள
ர்ப்பவன்மறையோன், செந்திருவனையாள் ‡ விருந்தினர்வயிற்றிற்
றீயவிப்பவளிவர்பெருமை, நந்தெழின்மலரோன்சொன்மகளிருக்கு
நாவினும்புகன்றிடப்படாதே. (உக)

இன்னமாதரசன்றேவிதன்வயிற்றினிவவுலகெலாஞ்செய்புண்ணி
யத்தான், மன்னுமாரளிகள்விருந்துணக்காமர்வல்லியின் மலர்மலர்
வதுபோ, லென்னையாளுடையநந்திவானவன் றனெய்திவந்துதித்
தனனன்று, சென்னியா லமரர்தொழுது பூமாரிசிந்தினர் துந்துமி
முழங்க. (உஉ)

எங்குருநந்திதோன்றநாட்புதுமையென்சொல்வாங்கண்டுமுட்
டென்னும், வெங்குணவமணருளத்தெரிமழுவோன்வேடங்கண்டஞ்
சலிசெய்ய, வங்கொருநேயம்பிறந்ததுதிருமாலடியவருளத்தினிலெ
ங்கள், சங்கரனிறைவனெனவொருஞானஞ் சார்ந்ததுதமையறியா
மல். (உஙு)

கொலைகளவழுக்காறவாவொடுவெகுளிகொடுஞ்சொல்பொய்பய
னிலகூற, னிலையழீஇயொருவன்செய்நன்றி மறத்தனிந்தனைவஞ்
சனைபிறர்தஞ், சிலைடிநதன்மடவார்க்கருதலென்றினைய தீமைகளியா
வும்போயினவா, னலமலிதருமமூர்த்தியாகியநன்னந்திவானவன்புவி
வருநாள். (உச)

தாடலைதந்திங்கெம்மையாணந்திதாயகட்டினுநின்றுதரைமே[வாய்க்
லேடவிழ்மலர்வாண்முகமதுதோன்ற வெழுந்தருளுதன்முனங்குரு
கூடலசங்கமேசன்றுய்க்கொளித்துக்குறுகிநன்னுதலினீறணிந்து
வீடருள்பரமசிற்கனலிங்கமெய்யுறத்தரித்தனனம்மா. (உரு)

---

* ஐந்தொழிலாவன:—சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபாவம், அநுக்கிரகம்.

† அறுதொழிலாவன:—ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.

‡ விருந்தினர் - நூதனமாக வருபவர்.

தரித்தபின்றனதுமேனிதோன்றுமற்றுயெதிர்நின்றிடபப்பேர், திரித்துநல்வசவனென்றுபேரிட்டுச்சென்றனன்சிவன்றனைக்குருவா, யொருத்தர்தம்பிடத்திற்பாவனை செய்கென்றுரைப்பவருரைகேடத் தானே, யருட்குருவடிவாய்வந்தருள்புரிந்தவாலமார்சூலபாணியனே.

பிறந்தமெய்ஞ்ஞானப்பிள்ளைநன்னுதலிற் பெருகொளிநீறுமொண்களத்திற், சிறந்துளவமலலிங்கமுங்கண்டு செறிந்தவரனைவரும் வியந்து, மறைந்தரன்குருவாய்வந்திசைபுனைந்து மகவினைவசவனென்றொருபே, ரறைந்தனனென்னவறிந்தனரமல னறிவுணின்றறிவிக் கவன்றே. (உ௭)

குறில்வழிலகரந்தனிநிலையாயுங் கூடியதகரமுன்னெழுத்தென், றறிகுறிவடிவந்திரிதல்போனந்தியடல்விடைமெய்திரிந்துறினு, நறுமலர்விழியிற்கண்டவரெல்லா நந்தியேயென்றுளமகிழ்ந்தார், பெறுதவமுயன்றவன்னையும்பிதாவும்பெறுமுவகையினையாருரைப்பார். ()

ஈன்றநாடொடங்கிச் செய்கடன்முற்றுமியற்றினன் மாதரசன்றான், றேன்றுமோர்குழவிப்பதங்கடந்தெங்கோன் சொல்குருமுன்னுறுங்காலை, யான்றமாமறைகண்முதலவாத்தான்முன் னறிந்துளகலையெலாமறிந்தான், சான்றதாமதியமிரவிவந்திறுப்பத் தன்கதிர் தானடைகுதல்போல். (உ௯)

பரமனையிகழ்ந்துநெறியலாநெறிபோம்பரமதயானையையடக்க
வரமுறகூர்மையங்குசமென்னவரனடியாரெனுமாவிற் [illegible]யாண
கொருமழவிளங்கன்றெனவருள்வசவனெழுகுநாள்வளங்கொள்கல்
புரமுறவமணகுழாத்தொடுக்கபுரவலன்விசசலனிருந்தான். (௩0)

படியில்கல்யாணபுரமெனுந்தூசுபரசிவபத்தியால்விளர்ப்பக்
கொடியபுன்சமணமாசுவர்பிடித்தாங்குவலயத்திருந்திடுமந்நா
ளடியவர்செல்வமெனும்வசவேசனங்குடன்வந்தநாகாம்பை
யுடன்வரவந்தவ்விச்சலனகரினுற்றனனற்றவர்நெருங்க. (௩௧)

வந்தனன்வசவதேவனென்றுரைப்பமன்னவன்விச்சலனறிந்து
மந்திரியென்றுமறைந்தவுட்பகையைமலிபொடிமூடியதழலை [போ
வெந்தழலென்னவறிந்திடாதெடுப்பமென்கைதீண்டுதலெனவெதிர்
யுய்ந்திடவரிதாய்த்தன்மதமழியவுடன்கொடுகோயிலுட்புகுந்தான்.()

பொருந்துமத்தாணியிடைத்தவிசொன்றுபுறமதகோளரிக்குதவி, யிருந்திறற்சிங்கஞ்சுமந்தபூவணைமேலிருந்தனனரசனப்போதி, லருந்

திறற்றுணைகாவலர்வேந்தரமைச்சர்வெண்கவரிகொண்மாதர், நெருங்
கிரிற்கரியபேரவையிடத்துநிகழ்ந்தமையொன்றெடுத்துரைப்பாம். ()

வேறு.

இந்திரனெதிர்நின்றுமேந்திழைகாநிற்செம்பொற்
சுந்தரவோலையொன்றுசோர்ந்தெனச்சுருண்முடங்க
லந்தரமுகட்டினின்றமரசன்பேரவையிடத்து
வந்தெதிர்விழுந்ததொன்றமானிடர்மருண்டுநோக்க. (௩௪)

நின்றவரெடுத்துவந்துநெடுங்கையிற்கொடுப்பவாங்கி
வென்றிகொண்மடங்கலன்றான்விரித்ததையெழுத்துநோக்கித்
தன்றலையெழுத்தேயென்னத்தானுணர்ந்திலன்மயங்கி
வன்றிறலமணகாலன்மலர்க்கையிற்கொடுத்தானன்றே. (௩௫)

வாங்கியமுடங்கனோக்கிவசவநாயகனிவ்வோலை
தாங்குநின்றவிசின்கீழோர்தமனியவைப்புண்டென்ற
தோங்கியதூண்செய்தோளாயுனக்குநான்காட்டுவேனென்
றாங்கதையகழ்வித்தானவ்வரசர்கோனதிசயிப்ப. (௩௬)

அகழ்ந்திடநிதியவைப்பொன்றாடகமலைபிலத்திற்
புகுந்திவண்வந்துமெல்லப்புறப்படல்போலத்தோன்ற
மகிழ்ந்தனனரசர்கோமான்வசவனைக்கண்டபோதே
நிகழ்ந்தவொண்பயனுணர்ந்துநெஞ்சகநனிவியந்தான். (௩௭)

பயிலு[illegible]வினையெமக்குப்பயந்தவிவ்வசவதேவன்
கயிலைநன்மலைக்கிரண்டாங்கடவுளேயென்றுசொல்லி
யியலுரைமடந்தைபொய்யாளென்பதைப்புதுக்கினானச்
செயலினைவிழியிற்கண்டோர்தெரிந்துநெஞ்சகமகிழ்ந்தார். (௩௮)

மந்திரிக்கிழமைநல்கிமாபுரிபுரிமையாற்றி
மைந்தனைப்புரக்குந்தாய்போன்மற்றெனைப்*புரத்தியென்று
சிந்தனைகளிப்பவின்சொற்செப்பியாயிடையிருப்ப
நந்தியைத்தொடர்புகொண்டானந்தகத்தடக்கைவேந்தன். (௩௯)

பெருந்தகைவசவதேவன்பெருமைக்குத்தக்கவாறே
யருங்கடிமணஞ்செய்வித்தானலங்கல்வேன்முருகனன்னான்
றிருந்தியவம்மணத்தின்சிறப்புநாம்விரிப்பதென்கொல்
புரந்தனையன்றுதொட்டுப்புகன்றகல்யாணமென்றால். (௪௦)

---

* புரத்தல் - பிறராலபாயம்வாராமற் காத்தல்.

இவ்வகைகல்யாணத்தினிருப்பநாகாம்பையென்னுந்
தவவைநம்பசவதேவன்றன்பிரசாதந்தன்னு
லெவ்வமின்முத்திமெய்யோடிருக்கையினளிக்கும்வீர
சைவநன்னெறிவளர்க்குந்தனையனையீன்றளம்மா (௪௧)

மைந்தனையீன்றவந்தவசவநாமம்புனைந்தா
ணிந்தையில்கற்புநங்கைநிகழ்திருமுகங்களாறு
† மந்தரிறலங்களாறுமறிவித்தற்குலகில்வந்த
கந்தனென்றன்னவந்நாகாம்பைதன்மகன்வளர்ந்தான். (௪௨)

வீரமாகேசரென்னுமென்பயிர்வளர்க்கவந்த
மாரிபோனிகரில்சென்னவசவதேசிகனிருப்ப
நேரிலாவசவநாமனெடுந்தகைமகவொன்றீன்று
சீருலாஞ்சங்கமேசதேசிகன்பெயர்புனைந்தான். (௪௩)

மொழியினுனினைவோனாக்கான்முக்கணனடியர்வேண்டிற்
றொழிவிலாதுதவித்தாய்போலோம்பினன்புறமதத்தோர்
வழியெலாம்வழக்குமாறமலிபுகழ்ச்சைவமென்னும்
பழியிலாவழிநடப்பப்பண்ணினன்வசவதேவன். (௪௪)

ஆனடியவர்க்குத்தேனுவாகியவசவன்சீர்த்தி
விரிநிலமுழுதும்போர்ப்பவெள்ளிவெற்பினையகன்று
தரையினைசவந்திருந்தவரெலாமுணர்ந்துசென்றார்
பொருவில்கல்யாணத்திற்குப்போரல்போற்கல்யாணத்தில் (௪௫)

பலரொடுவரினுமெள்ளும்படிதனிவரினுமிக்க
நலமொடுவரினுமேனிநலமறவரினுஞ்சீர்சான்
மலைமகள்கணவன்றொண்டர்வரவுகண்ணுற்றெதிர்ந்து
நிலமிசைவணங்கியஞ்சிநின்றுநன்றாற்றநந்தி. (௪௬)

சாதியுங்குறியுநீத்துச்சரணரைச்சிவனேயென்று
பாதபங்கயமிறைஞ்சிப்பத்திசெய்குவனந்நந்தி
சீதறுசுவைத்தீங்கண்டாற்செய்தசெங்கரும்பும்வேம்பும்
பேதமொன்றுமற்சாதிபெயர்விடுத்தறிதல்போல. (௪௭)

மாதர்கடமையகன்றமலிதுறவினரெண்ணில்லார்
கோதையருடனிருந்துங்கொடுமையிலரெண்ணில்லார்

---

† ஸ்தலங்களாறுவன:- பக்தஸ்தலம், மாஹேஸ்வரஸ்தலம், பிரசாதிஸ்தலம், பிராணலிங்கஸ்தலம், சரணஸ்தலம், ஐக்கியஸ்தலம்.

மேதைகொளருச்சனைக்குவேண்டுவமுழுதுங்கொண்டு
போதுகள்வழாமலீசன்பூசைசெய்பவரெண்ணில்லார். (௪௯)

விரதங்கள்வேறுவேறுமேவிநிற்பவரெண்ணில்லார்
பரதஞ்செய்மதராிக்கட்பரத்தையர்மனைகடோறுஞ்
சுரதஞ்செய்பவரெண்ணில்லார்தூயநன்னந்திநாம
வரதன்றனன்பின்வாழும்வழுவின்மாகேசரம்மா. (௫௰)

தீதுசெய்சமணர்முன்னர்ச்செயற்கருஞ்செய்கைகாட்டி
வாதுசெய்தவர்செருக்குமாய்வுசெய்திமையமீன்ற
கூதுசெய்முலைமடந்தைதுணைவனுர்தொண்டர்க்கெல்லாம்
யாதுசெய்குவனென்றேவலியற்றுவன்வசவதேவன். (௫0)

உளந்தெளிசரணர்தம்மோடிம்முறையொழுகுநாளி
னளந்தறிவரியசோதியல்லமன்வரவுநோக்கி
வளங்கெழுதிருக்கல்யாணவளநகர்தனில்வாழேனுக்கு
மிளம்பயிர்போலிருந்தானெம்மையாளுடையநந்தி. (௫௧)

ஒன்பதாவது

அக்கமாதேவியுற்பத்திகதி

முற்றிற்று.

---

கதி - க - இ திருவிருத்தங்கள் - ௫௩௩.

## பத்தாவது

# அக்கமாதேவிதுறவுகதி.

தன்னைக்காணவேள்கணைபாயத்தடுமாறு
மன்னைக்காலுஞ்சோறெனவிட்டருண்மாதேவி
மின்னைப்போலுமல்லமதேவன்விளையாடுங்
கொன்னைக்காணிற்றேடியடைந்தமைகூறுற்றாம். (௧)

கொங்கைப்பொறையைக்கொண்டுமருங்குற்கொடிவாட
வங்கைக்குடநெய்பெய்தழலென்னவழகெய்தி
நங்கைக்கிணைகண்டிலமுலகெங்கணுநாமென்ன
மங்கைப்பருவநண்ணினண்முற்றுணர்மாதேவி. (௨)

வாரித்தொன்றோடொன்றெழல்போன்முலைவந்துற்றும்
பேதைப்பெண்போற்காமமுளத்திற்பிறவாமற்
பாதிப்பெண்மேனியனெனுநின்பப்பரிதன்னைச
சாதித்தெய்துஞ்சாதனமோடுதலைப்பட்டாள். (௩)

தன்னையறிர்கிடைவீடறமுக்கட்டலைவன்பாற்
பின்னமறும்படிமேவுபெரும்பருவப்பெண்ணைக்
கன்னலெனுஞ்சிலைமன்மதன்வேரிக்கணைபாயு
மன்னுமிளம்பருவத்தினளென்பர்மறைப்புற்றார். (௪)

வண்டுபடாதலர்சண்பகமேயெனமாறாகிப்
பண்டரனோடமர்செய்மதன்வணப்படாமேனி
கண்டிடுமொண்சுடரேயெனுமாறுகவின்பொங்க
வொண்டவளின்மலன்மாதமர்நாள்கவரிநேர்நாளில். (௫)

வீரங்குறைவின் * மும்மதவேழமிசைகொண்டு
தாருந்தோளும்பொங்கமதிக்குடைதன்மேலா
மாரன்கரிமேல்வந்தனனென்னமணிப்பொற்றே
ரூருந்தெருவிற்கவுசிகமன்னனுலாவந்தான். (௬)

---

* மும்மதமாவன:—கன்னமதம், கபோலமதம், கோசமதம்.

இயங்கடரங்கநெடுங்கடலென்னவெழுந்தார்ப்ப
வியங்குமருங்குன்மடந்தையர்பாடியுடன்போத
வயங்களிவர்ந்திளமைந்தர்மருங்கினடுத்தேகப்
புயங்களலங்கலிலங்கவிசும்பிறைபோல்வந்தான். (எ)

மாணுநெடுங்கரிமீதுபுரந்தனில்வந்தானைக்
காணுமடந்தையரேதுமுணர்ந்திலர்காமத்தா
னாணுமிழந்தனர்தூசுமிழந்தனர்நன்றாகும்
பூணுமிழந்தனராவியிழந்திலர்போனார்கள். (அ)

நல்லமதந்தானெண்கவுளின்பானன்றுண்ணச்
செல்லுசுரும்பேவெங்கரிநின்றாய்செவியூடு
மெல்லநடந்தேபோவெனமெல்லவிளம்பென்று
சொல்லிமறங்கூர்வேலனகண்ணார்துயர்கின்றார். (௯)

கோதையர்மாலாலிவ்வகைநோவக்கொடிமாட
வீதியினூடுவருந்திறன்மன்னன்வினையில்லா
மாதவனுக்குநின்மலனுக்கோர்மகளாகுங்
காதொடுகாதுங்கண்மடமாதைக்கண்டானே. (௧௦)

கண்டனனேவிலையோவெனுமுன்னம்பகழைவாங்கிக்
கொண்டனன்வாளிசொரிந்தனனேடிக்கொடுமார
னுண்டிலையோவெனவாவிதளர்ந்தேயும்பன்மேல்
மண்டலமாளுமன்னனிருந்தான்வசமற்றே. (௧௧)

கொங்கைப்பாரத்தான்மலர்வாசங்கூடாம
லிங்கிப்பாரிற்போதுமலர்க்கணெழின்மாவோ
மங்கைக்கோலங்கொண்டுநிலத்தில்வருமின்னோ
வங்கைக்காந்தட்பொற்றொடியாரோவறியேனே. (௧௨)

வஞ்சிநடந்தேயென்னெதிர்வந்தேமயல்செய்தா
ணெஞ்சுதளர்ந்தேன்மாலில்விழுந்தேனிலைகாணே
னஞ்சலையென்றேயின்றிணையாளேலனல்காணும்
பஞ்சுபடும்பாடங்கசனம்பாற்படுவேனே. (௧௩)

என்னநினைந்தேமன்னவன்வெந்தீயிழுதாகி
முன்னர்மருங்கேநின்றவொருத்தன்முகநோக்கிப்
பொன்னெனவந்தவ்வாய்தலினின்றுபுறப்பட்ட
கன்னியணங்கார்நீயறிகென்றான் * காமுற்றே. (௧௪)

* காமமென்பது - காமென்றாயது.

ஓடியறிந்தேயன்னவன்வந்தங்குறைசெய்ய
வாடுமருங்குன்மங்கையையின்றேன்மகளென்று
நீடியவெந்துயர்மன்னனறிந்தெந்நெறியாலும்
கூடுவனிந்தவணங்கினையென்றுகுறித்தேகி. (௪௫)

கோயிலின்மேவியிருந்துயர்ஞானக்குறிகூறுந்
தூயவராகியவாரியர்தாமுஞ்சுடர்செம்பொற்
சேயிழையாரும்வலித்துமிலின்புசெயாவென்று
வாயிலிலாலினையேவெனமன்னன்மனத்தெண்ணன். (௪௬)

வேறு.

தாதுவல்லநன்முதுக்குறைமாதரைத்துணிந்து
நீதிவல்லவனிருமலன்மகடனைநீவிர்
நீதியெம்மனைக்கிழத்தியாம்படியுரைசெய்து
போதுமின்களென்றேவினன்வியனிலம்புரப்பான். (௪௭)

ஐயவன்னதேசெய்குவமெனப்புகன்றகத்திற்
பையவந்துநன்னிருமலன்றிருமுகம்பார்த்து
வையமன்னவன்கருத்தினைவகுத்தனர்மறத்தாத்
துய்யமங்கைமீரெமக்கடாதீதெனச்சொன்னான். (௪௮)

வேந்தன்மாமனைநம்மகளாயினவேந்தன்
சார்ந்தவாழ்வெலாநமதெனவறிகிலீர்தானே
போந்தபோர்திருமகள்வயினைப்புறம்போக்கு
மாந்தர்யாருளரென்றுமங்கையர்சொலவகுப்பான். (௪௯)

இம்மைசேர்பயன்கருதியேதகாதவரிடத்திற்
கொம்மைவார்முலைமகட்கொடைநேர்ந்தவக்கொடியா
ரம்மையாழ்கிரையத்திடைவீழ்ந்தனரழுந்தித்
தம்மைநோக்குநரொருவருமின்றியேதளர்வார். (௫௰)

தமக்கடாததுசெய்துயிர்வாழ்வதுதன்னிற்
சுமைக்கடாதமெய்விடுத்தலேநன்றெனச்சொல்வ
ரெமக்கடாததுபுகன்றனிர்மங்கைமீரிச்சொ
னுமக்கடாததென்றியம்பலுமங்கையர்நவல்வார். (௫௧)

உறையில்வாளொடுமொவ்வுறுகுறவனைத்தோடி
மறவனோர்பொருட்டுருகெனவிரத்தலேமானு

மிறைவன்வாழ்குடிதன்னிலொன்றொருபொருளிரத்த
லறவனுகியநீயிதையறிந்திலையந்தோ. (உஉ)

என்றுமாதரார்கூறலுநிருமலனெங்கண்
மன்றல்வார்குழல்பேதையோவல்லனும்மனத்தைச
சென்றுகூறுமினவண்மனமிசைந்துரைசெய்யி
னன்றுபோமினென்றியம்பினனவர்மனநயந்து. (உ௩)

மங்கைபாலடைந்தறைகுவர்மதன்வலிமாயக்
கொங்கைமாமுகிழ்ப்பூங்கொடிநீயருள்கூர்ந்தே
யெங்கள்கோமகனுருயிர்நிறுத்திலையென்னி
லங்கண்மாநிலத்துயிர்க்கெலாமன்னையாகுவையால். (உ௪)

என்னவோதலுநிருமலனின்றருளென்றாய்
மன்னனுன்மனேதுறக்குமோர் † சூழ்ச்சியைமதித்துப்
பொன்னனீரரசெனக்கொருகுளிலைப்பொருந்திப்
பண்ணுமாயினீர்பணித்ததுநன்றெனப்பகர்ந்தாள். (உ௫)

தூதுசென்றவர்பொற்கொடிசொல்லியசொல்லாற்
காதல்கொண்டனளென்றுளந்தெரிந்துதாங்கருதி
மாதுநின்பெருங்கருணைசெய்வதற்கெங்கண்மன்னன்
யாதறைந்தனையதுசெயத்தக்கவனென்று. (உ௬)

உள்ளமார்வமோடேகியம்மடந்தையருரைப்ப
வள்ளலாகியமன்னவன்மனநனிமகிழ்ந்து
தெள்ளுமாரமுதனையவளிருந்துழிசசென்று
னெள்ளுகாமநோய்கொண்டவனென்செயவிசையான் (உ௭)

வல்லிகொங்கையைப்பொன்மலையென்னவேமதியா
னில்லுறுங்குடமாகவேயெண்ணினனுதலை
வில்லெனும்படிநினைத்தனன்வெண்பிறையென்னுன்
சொல்லுவன்றனக்ககப்படுமடந்தையாய்த்துணிந்து. (உ௮)

அருள்செய்தென்னைநீ * யளித்திடுமதற்குநான்செய்வ
துரைசெய்நானதுசெய்வனென்றரசர்கோனுரைப்ப
வரைசெய்தோளினுயென்னைநீவலித்துபுல்லாமைக்
கொருசொலுண்மைசொல்லென்றனளொருபுடையொதுங்கி.

---

† சூழ்ச்சி - ஆலோசனை, உபாயம்.

* அளித்திடு - உயிர்போகாமற்கா.

நின்கருத்திசைவாலன்றிநின்னையான்வலியே
னென்பதற்கொருசூளுரைக்குவன்முகிலெழுந்த
மின்கொடிச்சிறுமருங்குலாய்கேளெனவொள்வேற்
புன்புகர்க்கருங்கடாக்களிற்றரசர்கோன்புகல்வான். (௫௦)

வேறு.

வந்தநல்விருந்திருப்பமனையினுற்றருந்துவானும்
பந்தியினுணவுவேறுபண்ணுபாதகனுந்தாயுந்
தந்தையுமுணவுண்ணாதசழக்கனுமுசிப்போதி
னொந்தவர்தமைநோக்காமனுகர்ந்திடுகொடியன்றானும். (௫௧)

நிந்தைசெய்யுணவினானுநிருமலன்பூசையின்றி
வந்துணவருந்துவானுமறுத்தலூனுகர்விப்பானுந்
தந்தநல்வினையாற்செல்வஞ்சார்ந்தவர்தம்மைக்கண்டு
சிந்தனைபொருதழுங்கித்தீர்வினுண்மகிழ்வான்றானும். (௫௨)

கன்றுணவிடாமலான்பால்கறந்துகொள்பவனுஞ்செய்த
நன்றிகொல்பவனுங்கோடி * நடுநிலைதவறுவானுங்
கொன்றுயிர்பதைப்பநோக்குங்கொடியனும்போர்க்களத்திற்
றன்றலைவனைவிடுத்துச்சாய்ந்துபோமடமையானும். (௫௩)

அடைக்கலமெனவந்தானையளித்திடாதகற்றுவானுங்
கொடுக்குதுமெனவுரைத்துக்கொடானுமொண்கொடைவிலக்கி
விடுக்குறுமவனும்பாவவினையிடத்துதவியாகி
நடக்குறுமவனுந்தேர்ந்துநட்டபின்வஞ்சிப்பானும். (௫௪)

குரவர்தம்முரைகடக்குங்கொடியனுந்துறந்துளார்தம்
வரவெதிர்கண்டெழாதமறவனுமறிந்தான்போன்று
கரவினிலருநூல்கற்குங்கயவனும்புதியராகி
யிரவினில்வந்தநல்லோர்க்கிடங்கொடாதகற்றுவானும். (௫௫)

முன்புகழ்ந்துரைத்துப்பின்னர்முறுவல்செய்திகழ்வான்றானுந்
தன்பெருங்கிளைநல்கூர்ந்துதளர்வுறவாழ்கின்றானு
மன்புகொண்டொருவன்வைத்தவரும்பொருள்கவர்கின்றானுந்
துன்புறுந்தொழில்செய்வித்துச்சொல்பொருளிலையென்பானும். ()

கற்பழிமனைவியோடு கலந்திருப்பவனுமற்றோர்
பொற்புடைமனைவிதன்னைப் புணர்வதற்கெண்ணுவானுந்

---

* நடுநிலை - நீதி.

* சொற்பொருளுணர்த்தினோனைத் தொழவுளநாணுவானும்
விற்பனவலாதவிற்று மெய்வளர்த்தழிகுவானும். (௫௭)

நலமலிவயலிலாற்றி னந்தனத்தாலயத்திற்
சலமலமொழிப்போன்றனுந் தனிவழிவிலக்குவானும்
விலைமொழிபொய்த்துவிற்கும் வெய்யவாணிகனுந்தாழ்ந்த
குலப்பிலிதன்குற்றேவல் கூலிகொண்டியற்றுவானும். (௫௮)

உறவுசெய்தறிந்தசொல்லை யுடைந்தழிக்கூறுவானும்
பிறர்பிழைதனையோடிப் பிறரொடு பேசுவானு
முறையமுவுறுகொடுஞ்சொன் முனிவிடைமொழிகுவானு
மறிவழிமனைவிசொல்லின் வழிநிற்குமறிவிலானும். (௫௯)

கலந்தவர்தமைப்பிரித்துக் கலகங்கண்டிடல்லானும்
புலந்தருநூலினில்லாப் பொருளினைக்கூறுவானு
நலந்தனையழுக்காறெய்தி நகைத்திகழ்கிற்போன்றவை
மெலிந்தவரிடத்துநீக்க வொத்திலைப்பெருக்குவானும் (௬௰)

புண்ணியம்பிறர்பொருட்குப் புரிபவன்றனுநீக்க
மண்ணிடையின்பத்திற்கா மறநைவசெய்தொழில்விடுக்குந்
தண்ணளிபவறிலிலானுந் தவத்தனையிகழ்கிற்பானும்
பண்ணியவினையிலென்றும் பாவமேபயில்கின்றானும் (௬௧)

ஆவனுண்மையோ தனைத்தனை பதுசெய்தன்றி
மேவுமேவனையினென்ற கேள்விரும்பழுகன்கூறக்
காவிநேர்விழிமாதேவி கருத்தினைச்சுதற்றேயாயிற்
போவம்வாவென்றுசொன்னாள் புரபலனுமகைப்புத்தான். (௬௨)

கோயிலின்முன்னர்ச்சென்றான் கொற்றவன்சிவிகையேற்றி
யாயிழைமடந்தைநல்லா ளருத்துற்றுச்செல்லப்
போயினளரசர்கோமான் புக்குழிப்புக்காளொள்வேற்
சேயரிநெடுங்கட்செவ்வாய்த் திலகவாணுதன்மாதேவி. (௬௩)

மடந்தையைத்தனிக்கண்டங்கி மருவியவரக்கேபோல
வுடைந்துநெக்குருகியாற்ற வுள்ளமோடிளம்பூங்கொம்பே
கடந்திடற்கரியகாமக் கடல்கடந்தேறக்கொங்கைக்
குடந்தரத்திருவுளத்திற் கோடியென்றரசிறைஞ்ச. (௬௪)

---

* சொல் - தத்துவமசிபொருள் - இலக்கியார்த்தம்.

காவலன்காமமிக்க கழிபடர்கிளவிகண்டு
பாவைபுன்முறுவல்செய்து பண்பெனுந்தொடரால்யாப்புண்
டோவல்செய்யாதுநிற்கு மொருகளிறனையாயான்சொ
லேவல்செய்திட்டபின்ன ரென்னொடுபேசுகென்றாள். (௪௫)

ஏதுநான்செய்வதன்ன தியற்றுவனறைதியென்ன
வோதினனரசனேத வொண்டொடியயன்மாறேடுஞ்
சோதிமாசிவலிங்கத்தைத் தூயையாய்க்காப்பீட்டிற்
போதினலருச்சித்தென்னைப் பொருந்துதிபின்னரென்றாள் (௪௬)

எல்லையில்காமம்பொங்க விளமுலைநெருங்கத்தோளாற்
புல்லுவனென்றெழுந்த புரவலன்றனைத்தடுத்துச்
சொல்லியதன்னமன்னாள் சுடர்த்துணிர்முகந்தவாயிற்
செல்லுமொண்கரத்தையோடிச் சென்றுபற்றுதலையொக்கும் (௪௭)

முகையிடைமுருகுண்டாயின் முளையிடைவிளைவுண்டாயின்
மகவிடைமதனவின்பம் வருவதுண்டாயிற்றையல்
பகையொடுமருவிநின்ற பார்த்திபன்றனதுளத்தி
னுகையிடையமலற்போற்று மொழுக்கமும்வந்தொன்றும் (௪௮)

செப்புறுந்துணிவினைக்கு தீண்டலனாகனின்று
முப்புரஞ்சீறுமுக்கண் முதல்வன்பூசனையான்யாங்க
ளெப்பொழுதுஞ்செயதக்க தன்றெனவினையிலாளின்
றப்புறந்தோளும்யாங்க ளொடுவதன்றெனப்புகன்றாள். (௪௯)

மட்டவிழ்குழன்மடந்தை வாயுரைதையும்வாயுங்
கட்டியதெனவடங்கிக் காமரீந்தனபிரிப்போற்
கெட்டிடவறிதிருந்தான் கிளர்மணிப்பூண்செய்தோளா
னெட்டிலையயில்வேற்கண்ணு ணீந்தனள்போகவெண்ணி. (௫௰)

துறவெனுமாசுநெஞ்சத் தொன்னகர்கொளவலாவா
யிறைவனதாணையெல்லா மிரிதல்போற்பூண்கள்யாவு
மறவையுமகற்றியோதி யவிழ்த்துவார்மைக்குழம்பின்
மறையுறுமணிப்பொற்பாவை போலுடன்மறையவிட்டாள். (௫௧)

மருளடைந்தனள்கொலென்று மருண்டுமன்னவனிருப்பத்
தெருளடைந்தங்கைகொண்ட சிவலிங்கத்தொடுநினைந்த
பொருளடைந்தெனமகிழ்ச்சி பொங்கமன்னவனைநீங்கி
யருளடைந்தொழுகுகண்ணு ளணிமறுகூடுசென்றாள். (௫௨)

அன்னையும்பிதாவுங்கேளா வருமகட்கடுத்ததென்னென்
றுன்னிவந்தழுங்கநீலி ரும்மகளென்றுமாழ்கி
யின்னல்கொண்டிரங்கன்பின்போ மென்னைநானறியத்தேடித்
தன்னிருங்கருணைசெய்யுஞ் சற்குரவனைச்சார்கிற்பேன். (ருங)

என்றவளவரைநோக்கா தேதிலர்போலகன்று
சென்றனணிருமலப்பேர்ச் செல்வனுஞ்சுமதிதானு
நன்றிவணினைந்ததென்று நம்முடைமரபிற்கெல்லா
நின்றிடும்புகழென்றெண்ணி நிறுவினர்தங்களுமம். (ருச)

கண்டவரெல்லாநெஞ்சங் கரைந்துகக்கண்ணீர்மல்கத்
திண்டிறலரசன்பின்னர்ச் சிவிகையூர்ந்தலர்பூங்கோயி
லொண்டிருமகள்போற்சென்ற வொண்டொடியிப்பேய்க்கோலங்
கொண்டிவண்போகாநின்ற கொள்கையேதறியேமென்பார். (ருரு)

மங்கையை * யிவணங்கண்டேம் வயிறெறி † தவிழநின்றே
யிங்கிவடன்னையீன்று ரென்படுவாரோவென்பார்
மங்கலவடிவங்கண்டு மகிழ்ந்தகண்ணிதுவுங்கண்டு
பொங்குறுதுயரங்கூரப் புரிந்ததெப்பாவமென்பார். (ருசா)

இன்னணநகரமெல்லா மிரங்கமாதேவியம்மை
கன்னலுமமுதுந்தேனுங் கைப்பப்பேரின்பநல்குந்
தன்னிகர்குருகுகேசன் றன்னையேதேடிச்சென்றாண்
மென்னிழல்விரும்பிக்க வெயில்சுடச்செல்வார்போல. (ருஎ)

அடவிகடொறுமடைந்து மடுக்கல்கடொறுமிவர்ந்துங்
கடிநகர்தொறும்புகுந்துங் காமனைவென்றவல்லி
மடிவறுமனத்திலன்பு வளர்தரக்கருணையாலெங்
குடிமுழுதடிமைகொள்ளுங் குரவனைத்தேடுகின்றாள். (ருஅ)

## பத்தாவது
## அக்கமாதேவிதுறவுகதி
## முற்றிற்று.

---

கதி - ௧0 - இ திருவிருத்தங்கள் - ருகக.

---

* இவ்வண்ணமென்றது - இவணமென்றாயது.

† தவழ எனவும் பாடம்.

பதினோராவது

# கொக்கிதேவர்கதி.



அருள்செயுமல்லம னரிநீடப்பெயர்
குரவனைமெய்யொடு கலந்துகொண்டுதான்
பரவுறுமடியர்தம் பவந்துறந்துபோய்த்
திரிதருநிலையினைத் தெரிந்துசெப்புவாம். (௧)

சீர்நிலையல்லம தேவன்சூல்கொளுங்
கார்நிறைமயிலெனக் கருதித்தன்னையே
பார்நிலவிசையமர் பத்தர்தம்மையா
ளோர்நினைவொடுநடந் துலாவுநாள்களுள். (௨)

* ஒன்றொருநாளொரு திசையிலோங்கருட்
குன்றனையானொரு கோலங்கொண்டுதான்
சென்றணனவனெதிர் சிறந்துதோன்றிற்று
மன்றன்மென்மலரிள வனமொன்றயிடை. (௩)

சிறு † பொழுதைந்திலுந் திரிவிலாதபே
‡ ரறுபொழுதினுமித ழவிழ்ந்துதேன்சொரி
நறுமலர்நிறையுமந் நந்தனத்தினைப்
பெறின்மகபதிவளம் பெறவுவந்திடார். (௪)

படிமிசைதவம்பல பயின்றுநோந்தவர்
வடதிசைக்கயிலையின் மருவவேண்டலிக்
கடிமலர்ப்பொழின்மணங் கலந்ததென்றல்வந்
துடன்மிசைதவழ்தர வொன்றுமுன்னியே. (௫)

கண்ணிறைமலர்பல கண்டுகண்டுபோ
யுண்ணுறுநறுமது கொளவுழன்றிடு

---

* ஒன்றொருநாள் - மீமிசைப்பதம்.

† பொழுதைந்தாவன:— மாலை, யாமம், வைகறை, விடியல், நண்பகல் என்பன.

‡ அறுபொழுதாவன:—மேற்படி ஐந்தும், எற்பாடு என்பன

மெண்ணறுமணியின மிரையுந்தன்மையாற்
றண்ணுறுநந்தனம் வண்டின்சந்தையே. (எ)

நறுமலர்நிறையுமந் நந்தனத்தினைக்
குறைவறவளிப்பவன் கொக்கிதேவனென்
றறைதருபெயரினு னனையனுயிடைத்
திறமுறுசெயலினை செய்துநின்றனன். (அ)

நின்றவன்றனையருணிலைநெஞ்சொடு
* சென்றனனல்லம தேவன்கண்டவன்
புன்றொழில்விடவரும் பொருளுணர்த்துவ
லென்றருகடைந்தைய சரணமென்றனன். (கூ)

தானெதிர்நிமலனைச் சரணெனத்தொழாத்
தேனலர்வனத்தனின் செயலியாதுநின்
மேனியின்பெயரெது விளம்புகென்றலு
ஞானநல்விளக்கனு னவிறன்மேயினுன். (க)

பத்தர்தம்மனைதொறும் பத்திப்பிச்சைகொண்
டெத்திறவினையுமின் றிருப்பனல்லம
னுத்தமவென்பெயர் பெயருனக்கெனென்
றத்தனும்வினவத்தன் பெயரறைந்தவன். (கo)

அருங் † குருலிங்கசங் கமத்திற்காகமெய்
வருந்துறுதொழிலற வறிதிருப்பவ
னருந்துறுபிணமென வவையு ‡ மாற்றநீ
தெரிந்திலையோவெனச் செப்பன்மேயினன். (கக)

### வேறு.

பெய்தற்கரியயாக்கைதனைச் செய்திற்றென்றலதுகொண்டு
செய்தற்கரியவறங்கள்பல செய்துதுயர்கூர்பிறவியினின்
றுய்தற்கொருமைபெறவெண்ணுதுழல்வோனுடம்புபொற்கலத்திற்
பெய்தற்குரியபால்கமரிற் பெய்ததொக்குமென்பரால். (கஉ)

---

* சென்றனம் மல்லமதேவனென்றும் பாடபேதமுண்டு.

† குரு - லிங்கம் - சங்கம் என முப்பாற்று. இவற்றுள்:—குரு-ஞானசிரியன். லிங்கம் - ஆன்மா. சங்கம் - அதையுணர்ந்த சத்துக்களென்க.

‡ மாற்றமெனல் - சுருதிப்பிரமாணத்தை.

மின்போலழியுமுடல்கொடுநல் வினைசெய்தழியாவுடம்பெய்தி
யின்போடமர்தலாயிருப்ப யாக்கைவருந்துமென்றெண்ணி
யன்போடறஞ்செய்திளையாம லருந்திவாளாவிருக்குமடன்   [ன்.
றன்போன்மருளரிலையென்றான் றண்பூம்பொழில்வைத்தபிக்கின்ற

உரைத்தமொழியையல்லமப்பே ருடையான்கேட்டுக்கைகுலைத்து ந
சிரித்துவினைநல்லனசெய்து சிதையாவின்பம்பெறுவானேல்
வருந்தலுறமும்மலங்களினோர் மலமாகியவாணவத்தாலும்
பொருத்தமுறுபேரின்பநாம் புணரலாமென்றியம்பியே.   (சர)

தான்செய்வினையாலோருடம்பிற் சாருமின்பமென்றினையய
ஊன்செயுடலமொழியவுட னொழியுமம்மெய்யழியாமல்
வான்செய்பதத்திலிருக்குமெனின் மாயைதந்ததன்றாருவ
கான்செய்மலர்நற்றனஞ்செய்து கருணைத்தூடைப்பவெண்ணுவோய்.

இன்பநனிசெய்நல்வினையி னிறப்பினிறப்பவுடம்பினிடை யு
துன்பமதுசெய்தீயவினை தோன்றுமதுநீவினைமாய்வின்
முன்புசெயுநல்வினைவருமம்முறையாலிரண்டுமாறிவரு
மென்பவுலகிலொன்பகலுமிரவுமாறிவருதல்போல்.   (ருச)

புறத்துக்கருமம்பலசெய்து பொருப்பையகழ்ந்திட்டெலிபிடித்தாங்
கிறப்பசிறியவிண்ணின்ப மெய்துமவனோசோடாயன்
மறுத்துச்செயல்களனைத்தினையும் வாளாவிருந்துபேரின்பம்
பெறததக்கவனேமருளன்யார் பேசுகென்றானெம்பெருமான்.   (கவ)

பொறியிற் † புறத்துமனஞ்செல்லிற் புலனேதோன்றியிடு ‡ மகத்திற்
செரியக்கரணம்பரந்த சிவமேதோன்றுஞ்சிவந்தோன்ற
வறிவிற்பார்த்தவிடமயமாகுமுலகந்தோன்றமற்
பிறவித்துயரக்கடல்கடந்து பேரின்பஞ்சார்குவரென்று.   (௬அ)

கண்ணுற்காணக்காட்டியிவன் கருத்தைத்திருத்துவேமென்ன
வெண்ணுக்கருணைக்கடலனையா னிவணீயகழ்தியென்றுரைப்ப
நண்ணுப்பெருமானன்றென்றுநவின்ற நிலத்தையகழ்கின்றான்
பண்ணுற்சிறந்தபொரிவண்டு பாடுமலர்ப்பூம்பொழிலுடையான்.   ()

தொடலுஞ்செம்பொற்சிகரமொன்று தோன்றச்செய்யுட்பொருள்
கடிதினகழ்ந்துபுகுந்ததனுட்கண்டார்நிலத்தையகழ்ந்திட்டு [போலக்

---

† புறம் - பகிர்முகம்.   ‡ அகம் - அந்தர்முகம்.

மிடியன்கண்டபொருள்போல விடையம்புறத்துக்காணுமல்
வடிவஞ்சிறிதுமசையாமல் வசமற்றிருக்கும்யோகியையே. (உ0)

கையிற்சிவலிங்கத்தின்மேற் கண்கள்வைத்திட்டெலும்பலான்
மெய்யிற்றசையொன்றின்றியே மேவும்புனிதன்றனைநோக்கிச்
செய்யச்செயலிலாதசெயற் சிவயோகியைக்கண்டனையோவென்
றையத்தடைந்தவவனறியவறிவித்துயரல்லமதேவன். (உக)

கடலின்விழுந்துதுயர்பவர்க்குக் கலமொன்றுருவந்ததெனக்
கெடலில்பரமகுருவெணக்குக் கிடைத்ததாலாவற்புதமென்
றுடலம்விதிர்ப்பக்கண்கணீ ரொழுகவுருகித்தொழுதனனல்
விடலின்மரபிற்குருசீட விதியைவிளக்கவுளங்கொண்டு. (உஉ)

காந்தங்கண்டவிரும்புபோற் கண்டபொழுதேயனிமிடன்ற
னேந்துஞ்செங்கைச்சிவலிங்கமெங்கள்பெருமானங்கைமலர்
போந்தங்கிருந்ததுபொழுதிற் புனிதன்சிவகலைதானுஞ்
சார்ந்தங்கிருந்தசிவலிங்கந் தன்னோடவன்பாற்சார்ந்ததால். (உங)

வந்துபரமசிவலிங்க மருவப்பெறுமல்லமன்றனையு
மந்தவிமலலிங்கமுட னடைந்தஞானக்குரவனையுங
கந்தமலர்நல்வனமுடையான் கண்டுமகிழ்வுற்றிவர்பெருமை
சந்தமறைதேர்நான்முகனுஞ் சாற்றற்கரிதென்றறைகுவான். (உச)

நின்றற்கண்டேன்சிவலிங்க நிஷ்டைஞானயோகிதனை
முன்னுட்கருமமனைத்துமினி முடித்தேன்ஞானநிலைநின்றே
னுன்னுற்செய்யப்படுமுதவிக் குதவிவேறுநெடுந்தரா
வென்னுற்செய்வதொன்றுளதோ வெழிலிக்குதவியார்செய்வார். ()

ஐயநினையுநின்கரத்தி னடைந்தசிவலிங்கத்தினையும்
பொய்யில்குரவன்றனையுமொரு பொருளென்றறிந்தேனின்றென்று
செய்யகமலத்திருவடியிற் சென்றுதொழுதல்லமநாம
மெய்யனெதிர்நின்றன்பினுல் விளம்பும்வனங்காவலனன்றே. (உசு)

என்னையறிவித்ததுபோலிவ் விஷ்டலிங்கமகம்புறமு
மன்னியிருக்குநெறியினைநின் மலர்த்தாள்பரவுமடியார்க்குப்
பன்னியுணர்த்திசசரமாகிப் பாரிற்சரிப்பாயெனத்தொழுதான்
றன்னினிலத்தினரரெல்லாந் தரும்பேரின்பம்பெற்றினைந்தான். ()

கொக்கிதேவனிரந்தமொழி கொண்டுகிளரல்லமதேவன்
றக்கபெரியோர்தமக்கியல்பு தாம்பெற்றுள்ளபேறெல்லா
மிக்கவுலகம்பெறுகவென வேண்டிக்கோடலெனப்புகழ்ந்து
செக்கர்மலர்ப்பூக்கைகளாற் றீண்டித்தழுவியருள்செய்தான். (உஅ)

அங்கைச்சிவலிங்கத்தினிடை யமைத்தநோக்குநெஞ்சகமுந்
தங்கச்சிவயோகத்தினையே சார்ந்தங்கிருந்தானேவியம்போன்
மங்கைக்கிடந்தந்தருளினேன் மலர்த்தாட்கிடுபூவணமாக்கிப்
பொங்கப்புரந்ததவத்தான்மெய்ப் பொருளாசிரியன்கண்ணுற்றான்.()

அடியர்வேண்டிற்றேபுரியு மல்லமப்பேரெம்பெருமா
னெடியவிழிகளருள்சுரப்ப நிமலலிங்கங்கரத்தேந்திப்
படியி * லரியதவஞ்செய்யும் பத்தருள்ளங்களிகூர
வடியவிளமாத்தழைப்பவரு மந்தாநிலம்போற்சரிக்கின்றான். (௩0)

பதினோராவது

கொக்கிதேவர்கதி

முற்றிற்று.

---

கதி - கக - க்கு திருவிருத்தங்கள் - ருஉக.

---

* அரியதவமென்றதனால் நிட்காமியமென பொருள் கோடன் மேன்மை.

## பன்னிரண்டாவது

# முத்தாயியம்மை கதி.

கண்டிலேனச கண்ணனையென்றனர்
கொண்டுவாடுங் கொடியிடையாடுயர்
விண்டுபோக விரைந்துவந்தல்லமன்
பண்டுகூறும் பரிசுவிளம்புவாம். (௧)

பொடியணிந்தெழிற் பொங்குறமல்லம
னடியர்தங்க ளகத்திற்றுயரினை
யுடையிழந்த வொருவன்கரமெனக்
கடிதடைந்து களைந்தருள்செய்யுநாள். (௨)

மறைத்திருந்த மலிசிவபத்தியைப்
புறத்தறிந்த பொறுமைதயுடம்பினை
வெறுத்தகன்ற மெய்யுருவாயினு
னறத்தபந்த வசகணனென்பவே. (௩)

அறைந்ததூயவ னங்கவுபாதிபோய்
நிறைந்தநீர்மை நினைந்திலன்போயுயி
ரிறந்துபோயின னென்னத்தளர்ந்துடன்
பிறந்தமாது பெரிதுளமாழ்கியே. (௪)

புலம்பிநைந்திருக் கின்றவப்போதினி
லிலங்கழுங்கர முந்திகழ்மெய்துற
நலங்கொளல்லம னண்ணின னண்ணலுங்
கலங்கிநின்றவக் காரிகைகண்டனள். (௫)

கண்டபோதச கண்ணனைக்காண்கிலாள்
கொண்டபீழை குறையவழுதடிப்
புண்டரீகப் புதுமலர்வீழ்ந்துகண்
மண்டுநீருக வாய்விட்டரற்றினள். (௬)

பாவியேன்முகம் பார்க்கவொண்ணுதென
வாவியாமச கண்ணனகன்றுசெய்

நோவெலாமிவ ளூக்கவருமென்றன்
மேவினுமெயன மீண்டும்வணங்கினுள். (௭)

வணங்குமாதின் மலர்முகநோக்கியே
யணக்கனுய்நல் லசகணன்றன்மையை
புணர்ந்திடாம லுளைதலுணர்வுளார்க்
கிணங்குருதவென் றெந்தையியம்புவான். (௮)

அழிவிலானை யழிந்தனனென்றுநீ
விழியினுன்மிகு வெள்ளம்பெருக்கினை
சழிவிலாதவா காயங்கழிந்ததென்
றெழிவிலாம லுளமெலிவார்கள்போல். (௯)

சச்சிதானந்த சங்கரனுகவே
யசசீவகுபு தன்னையறிந்தவன்
றசசமாந்துயர் தோன்மலியாக்கையை
யிசசியானதை யானெனவெண்ணுமே. (௧௦)

ஒண்டரைக்க வொழுவிலருளுருக
கொண்டடுத்த குருவருளாற்றினை
கண்டமெய்த்தவன் காயந்தனையன
முண்டநெட்டிலை யொப்பவிசுப்பனல். ( )

படியில்வந்த பரமகுருவனு
றடையறம்படி தன்னையற
னுடல்விடும்பொழு தொன்
கடமுடைந்தவா காட்சிகாப்பனல் (

பந்தபாச முழுதும்பரிந்திட
நந்துமோர்சிவ ஞானிநாவிலே
சிந்துமாறு செறிந்தவடப்புதான
வெந்ததூசின் விழியெதிராய்த்தான்றபே. (

யாவுமாகி யிருக்குஞ்சிவத்தொடு
மேவுஞான விழியுடையான்றனக்
கோவுமாறி லுறவுபகையெனும்
பாவமோவிலை யென்றறிபாவையே. ( )

யாக்கைதாமென் றிருந்தழிகின்றவ
ரூக்கிலாவறி வாகியுடம்பொடு

தாக்கிலாதவர் தம்மையுந்தாமென
நோக்குவாரவ ருண்மையைநோக்குறூர். (கரு)

கூத்தனுடகக் கோலநடிப்பினைப்
பார்த்துவாய்மையென் றெண்ணிலர்பாருளா
ரேத்துஞானிதன் யாக்கைநடிப்பினை
†யோர்த்துமாதவ ருண்மையென்றுன்னுறூர். (கசு)

அறிந்திடாம லசகணன்றன்மையை
யிறந்துளாளென் றிரங்கினையன்னைநீ
மறந்திடாயிம் மதியென்றணல்சொல
நிறைந்தஞானமுத் தாயிநிகழ்த்துவாள். (கஎ)

அரவின்காலர வன்றியறிபவர்
தரையினில்லை யசகணன்றன்னைநீ
தெரியினன்றிச் சிறியனறிவலோ
பெருமயான்செய் பிழைபொறுப்பாயென்று. (கஅ)

வேறு.

பங்கனிருந்த பதிக்கருள்செய்து
கங்கையடைந்த கணக்கெனவென்பா
லிங்குறவந்தனை யெங்குடியுள்ளார்
தங்கடவந்தரு தன்மையினென்று. (கக)

வந்தனைசெய்து வழுத்திமுனின்று
பந்தமகன்ற பதம்பெறும்வண்ண
மெந்தையியம்பி யெனக்கருள்செய்யென்
றந்தமடந்தை யறைந்தனளன்றே. (உ0)

தேசிகனல்லம தேவன்மகிழ்ந்து
பாசமகன்று பரம்பொருள்காணு
நேசமடைந்தனை நின்னைநிகர்ப்பார்
காசினியின்மிசை கண்டிலமென்று. (உக)

பிறப்பொருகோடி பிறந்துபிறந்து
புறக்கருமங்கள் புரிந்திடினும்பொய்
மறப்புறுமாணவ வல்லிருளின்றிச்
சிறப்புறுமுத்தி செறிந்திடுவாரோ. (உஉ)

---

† ஓர்ந்து என்பது ஓர்த்து என வலித்தல் விகாரம்பெற்றது.

மரிப்பொடுதிப்பு மறிக்குதுமென்று
கருத்தைவெளிக்கரு மத்தின்விடுத்து
விரிக்குதனெய்யை விடுத்தெரிகின்ற
நெருப்பையவிப்ப நினைப்பதையொக்கும். (உரு)

மட்டறவோடு மனத்தைநிறுத்திக்
கட்டுதல்வீடு விடுத்திடல்கட்டென்
றொட்டியபண்பி னுரைத்தலமப்பேர்
சிட்டனவட்கருள் செய்தனனன்றே. (உசா)

தத்துவமுற்று மயக்குவதள்ளி
மெய்த்ததனைப்பெற வேறுகொடுத்தான்
பொய்த்துறுகுப்பை கிளைத்தொளிபொங்கு
முத்தையளித்தென முத்தைதனக்கு. (உகூ)

வீடுவிரும்பி வெறுத்திலன்மெய்யைத்
தாடருமொண்குர வன்றனையெங்கு
நாடியுழன்றில னுயவென்னைத்
தேடியடைந்தருள் செய்தனையென்று. (உசு)

அல்லமனென்னு மருட்குரவன்றாள்
புல்லிவணங்குபு பொற்கொடியன்னாள்
செல்லலகன்று சிதம்பரமெய்தி
யெல்லையிலின்பொ டிருந்தனளம்மா. (உஎ)

பன்னிரண்டாவது

## முத்தாயியம்மைகதி

முற்றிற்று.

---

கதி - கஉ - இ திருவிருத்தங்கள் - கூசஅ.

யிழைக்க விட்டதெ னென்றிட
றொழிக்க லுற்றவ னோதினன். (௧0)

சாந்த னோதிய தாழ்மொழி
காய்ந்த வேலிரு காதினும்
போந்த போன்று புகுந்தன
மாந்த ராகுல மன்னினோர். (௧௧)

அறம ழித்தனை யன்றியு
நெறிய றக்குரு நிந்தனை
பெறவு ரைத்தனை பித்தனென்
றறவு றத்தன னொட்டலா (௧௨)

ஒட்ட னென்றனை யும்பருஞ்
சிட்ட னென்றுகொள் சித்தனை
துட்ட னென்று சுமித்தரனர்
வெட்டி ருந்திட மேவினார் (௧௩)

வேறு.

மெய்ப்பதத்தடமகற்பவர் வினையையன்றியே
சித்தார்த்தஞ்செயலொரு சிறிது[illegible]னமைய[illegible]
பத்தர்நாகுரவனை மண்ணினுய்ப்பினு
முத்தரமொட்டனென் றுரைத்துமென்றனன் (௧௪)

நிகழ்ந்துலகிடைநிலை நிற்குநல்லற
முகந்துசெய்பவன்றனை யும்பனேயெனப்
புகழ்ந்தவர்புண்ணியர் பொருமையாளிழித்
திகழ்ந்தவர்நரகரென் றிசைப்பர்நல்லவர். (௧௫)

மறவினையுடையரை மாற்றித்தூயநல்
லறவினையுடையரை யறிந்திட்டன்னரோ
டுறவினையடைந்திலை யொப்பக்கண்டறத்
துறவினையுளையென வொட்டர்சொல்லினார். (௧௬)

ஆங்கிருவினைகளு மொப்பக்கண்டவர்
தாங்களென்றனையொரு தமரிற்பேணுவ
ராங்கவையிரண்டையு மடைந்துபோயுழ
னீங்கவொன்றனையுணர் நெறியிலீரென்றான். (௧௭)

ழோர்ந்திலனுரைக்கொணா விழிபுரைத்தனன்
மாய்ந்திலமுடனைசை மருவியாங்களே. (௩௩)

என்றவரறைதலு மிராமன்சிந்தையிற்
புன்றொழிலகன்றுமெய்ப் போதம்பெற்றிட
வன்றருளல்லம ணடிகள்காட்டுறு
மொன்றொருசீற்றம்வந் துதித்தெழுந்ததே. (௩௪)

யாவனென்றன்னையின் றிகழ்ந்துளானவ
னைவரிந்திடுவனா வெனவெழுந்தனன்
மேவுறுந்தவமத வெகுளிதானினி
யோவுறுந்தரத்ததன் றொருவரானுமே. (௩௫)

வேறு.

என்னைவைதவன் யாரவ னெனமுனிந்தெரிபோன்
முன்னரெய்தினன்சித்தரா மப்பெயர்முதல்வ
னன்னையன்னநம்மல்லம னவன்சினமறிந்து
சென்னியொண்கரமசைத்து வெண்ணகைசெய்துசெப்பும். (௩௬)

அகழ்கின்றார்தமைத் தாங்குறுமகனிலமென்ன
விகழ்கின்றார்தமைப் பொறுக்குமித்தன்மையெய்தலினா
ளிகழ்கின்றாருண்மா தவமுடையோகிநீயென்று
புகழ்கின்றானென விகழ்ந்தனன்பின்னரும்புகல்வான். (௩௭)

சிறப்புப்பெற்றநல் யோகிதன்மனத்தெழுசினந்த
னறத்தைக்கொன்றிடு முன்புபஞ்சியிற்புகுமழல்போ
லொறுக்கப்பட்டவன் பவம்பினையொழித்திடுமதனாற்
பொறுத்தற்கொப்பிலை யென்றுநன்றறிந்தனைபோலும். (௩௮)

காலனின்முனம் பொறையுளானுக்குவன்கடல்சே
ராலநல்லமுதாகுமென் றவன்றவம்புகழ்வான்
போலவைதனன்கொடியவ னெனும்பொருட்டோன்றச்
சீலநல்குமோர்தொழில்செயு மல்லமதேவன். (௩௯)

பொறையுறும்படியல்லமன் சூழ்ச்சியிற்புகலக்
குறையுறுஞ்சினமிகுந்தன னெருப்பெனக்கொதித்தே
யறையுறுந்திரள்பந்தெனச் சித்தராமைய
னிறையுறுந்திருவருளுடைப் பிரானொடிகழ்த்தும். (௪௦)

குறிப்பில்லைதனை வெளிப்படையிகழ்வினுங்கொடிதாய்
வெறுப்புமுன்செயாவென்னைநீ யீண்டிகழ்ந்தமையாற்
பொறுப்பனல்லன்யா னுதல்விழித்தீயிடைப்பொடிப்ப
வறுப்பனென்றனனிகழ்வினுக்காருளமறுகார். (உக)

தன்னைக்கொல்லினுந் தான்பிறிதொன்றினைக்கோறல்
பன்னிற்பாவமென்றறைகுவர் கற்றுணர்பழையோர்
நின்னைசசொல்லியவறத்தினை நிந்தையென்றெண்ணி
யென்னைக்கொல்லுவனென்றநீ யறவனேயென்று. (சஉ)

சாதனங்களுணீறு முந்தியதென்பர்சாற்று
மாதவங்களுளுயிர்செகா மையுமற்றுமதிப்பிற்
பாதகங்களிற்கொலைசிறந் தன்றெனப்பார்த்து
நீதெரிந்திலையாக்கனே யென்றனனிமலன். (சங)

செருக்கொழிந்திலையென்னெதிர் செயிசுடுதீசசொ
லுரைத்துநின்றனை யுனைவிடுகிலனெனவுருத்து
நெருப்பெனுந்திரு நுதல்விழிதிறந்தனனினைத்து
மரிப்பினுந்தருவேனுயி ரென்றிராமன்றான். (சச)

நெற்றித்தீவிழிக்காமனை நீற்றுவதன்றிப்
பற்றிக்காமமில்யோகியைப் படுத்திடவற்றோ
செற்றத்தானுதல் விழியழலல்லமதேவன்
வெற்றித்தாணமலர்க கீழ்சசென்றுபணிந்ததுவிரைந்து (சரு)

பணிந்துமீளுமவ் வழலொருவீரன்மேற்பாயத்
துணிந்துபோயவ னூற்றல்கண்டுளவலிதொலைந்து
தணிந்துபேடிமேற் செல்லுமாறலைவனசான்போ
லணைந்திராமன்வாழ் நகரினிற்பற்றியதன்றே (சசா)

கங்கைவார்சடைக்கறைமிடற் றிறைநகைக்கனல்போயது
துங்கமாமதில்சூழ்தரு புரத்தினைசசுடல்போ
லெங்கணுயகன்மேல்விடு மிராமனன்னுதற்க
ணங்கிபோகியந்நகரினைச் சுட்டதையன்றே. (சஎ)

அணியெரிந்தன மென்றுகிலெரிந்தனவாரத்
துணியெரிந்தன கலவைகளெரிந்தனசுதையின்
பணியெரிந்தன மனைவளமெரிந்தனபகரு
மணியெரிந்தன வெரிந்தனகண்டவர்வயிறு. (சஅ)

சேயெடுப்பவர் விருத்தரையீர்ப்பவர்சேமம்
போயெடுப்பவர் புகவரிதாகிமண்புரண்டு
வாயடிப்பவர் மனையெரியவிப்பவர்மறுகிப்
பாயலைக்கடலென வழுதிரங்கினர்பதைத்து. (ச௯)

உதித்தஞாயிறுபோன்று செம்மணியினமொளிரப்
பதித்தமாளிகைமீது பற்றியவழற்கொழுந்தாற்
கதிர்த்தவாடகச் செங்கமலத்துவான்கங்கை
கொதித்ததாயிடைக் கொதிபொறாதன்னங்கள்குழைய. (ரு0)

அன்னகாலையி லருட்கடலல்லமதேவன்
சொன்னலாபுரத் தவர்துயரனைத்தையுந்தொலைப்ப
வுன்னியோர்விழி யழலினையிமைப்பினிலொழித்தான்
முன்னமாலமுண் டமரரைக்காத்தருண்முறைபோல். (ருக)

எந்தையல்லம னருளினானுதல்விழியெரியால்
வெந்தவந்நகர் பண்டையின்மும்மடிவிளக்கம்
வந்தபல்வள மொடுசிறந்ததுநரர்மகிழ
வுந்துவெவ்வழ லிடைவெந்தவாடகமொத்து. (ருஉ)

ஒருத்தன்வந்தவா ருக்கியபொற்பணியொன்றைத்
திருத்தவல்லவ னழித்ததைச்சிறந்திடச்செயல்போற்
புரத்தைநன்றுற வல்லமன்புரிதலும்புரத்தோர்
கருத்தில்வந்தெழுந் தோங்கியதார்வமாகடலே. (ருங)

* ஒருகணாற்றல்போ யொழிந்திடவலியறுமிராம
னிருகணாலுங்கண் டுளச்செருக்கென்படுதொான்றின்றிப்
பெருகுநாணெனும் புனல்கொளப்போழல்விழுந்து
கருகுநாண்மலரென முகங்கரிந்திதுகருதும். (ருச)

## வேறு.

என்றொருநுதல்விழித் தீயிவன்றனையிறைஞ்சலாலே
தன்னருளதனாலென்னைத் தடுத்துவந்தாளவேண்டிப்
பொன்னவிர்சுணங்குபூத்த புணர்முலைமடந்தைபாக
னிந்நிலவரைப்பிற்கோல மிதுகொடுவந்தானென்று. (ருரு)

---

* இங்கே ஒருகணென்றது - நெற்றிக்கண்ணை.

தீயனேனறிவிலாமற் செய்பிழைபொறுத்தாட்கோடி
பேயனுமொருவன்செய்த பிழையினையனையீன்ற
தாயலாற்பொறுப்பார்யாடர் தானுமேயென்றிராமன்
போயெனுரமுநின்செந்தாட் போதினைப்பற்றிவீழ்ந்தான். (௫௬)

தன்னினமாபிராமன் சரண்புகிலவன்செய்தீமை
யுன்னுவனலனெங்கோமா னுடன்றுவந்திலங்கைகாக்கு
மன்னவன்கவின்கூர்வெள்ளி மலையெடுத்தலைத்துவந்து
பின்னவன்வணங்கிநிற்பப் பிழையுளங்கொண்டதுண்டோ. (௫௭)

செய்யதாண்மலரின்வீழ்ந்த சித்தனையருளானோக்கி
யையநீயெழுகநெஞ்சி லஞ்சலையென்றுகூறிக்
கையினாலெடுத்தணைத்துக் கல்வியுந்தவமுமாய்க்கும்
வெய்யதாம்வெகுளிதன்னை விட்டிடென்றெந்தைசொல்வான். (௫௮)

வலியவனிடத்துமொத்தான் மாட்டினும்வெகுளிகாத்தல்
பொலிவுசெயறமதென்னப் பொருந்துறுதனையர்தம்பா
னலிவுறுவெகுளிசெல்லா தாதலானலியலாற்று
மெலியவனிடத்திற்காக்கும் வெகுளியேயறமதென்பர். (௫௯)

வைதவன்றன்னைநன்று வாழ்த்தினனெனவுந்திய
செய்தவன்றன்னைநல்ல செய்தவனெனவுங்கொள்வோன்
கைதவமகன்றமுத்தி கண்டவனவவாறன்னுன்
பொய்தவனென்பதென்று புகன்றனர்புலவரன்றே. (௬0)

பெரியவர்தம்மைக்காய்ந்தான் பிறங்கல்கல்லியகோலொப்பான்
புரிவனபுரியப்பட்டுப் புலம்புவனொத்தார்காய்ந்தா
னெரிநரகதனில்வீழ்வ னிழிந்தவர்க்காய்ந்தானென்று
லொருவர்தம்மிடத்துஞ்சீற்ற முறாமையேநன்றுமாதோ. (௬௧)

யாவர்க்குமொப்பநன்று மென்னினுஞ்சினமிலாமை
மூவர்க்குமரியசெய்யு முனிவர்க்குஞ்சிறந்ததென்று
தேவர்க்குமரியவின்பஞ் சித்தராமப்பேரண்ணன்
மேவற்குவடிவங்கொண்டு மேவியவிமலன்சொன்னான். (௬௨)

அல்லமனறைந்தமாற்ற மறிந்துநஞ்சித்தராமன்
சொல்லுவன்முத்தியெய்துந் துணையசாதனங்களெல்லா
மில்லையென்னிடத்திலேனு மென்னைநீவலிந்தாட்கொள்ள
நல்லவனாகச்செய்த நன்மையேநன்மையென்று. (௬௩)

கருத்தழிகடமிறங்கு கவுட்கரிவலிந்துபற்றித்
திருத்துபுதன்காலேவுஞ் செயல்செயக்கொள்வதன்றி
யொருத்தல்வந்தறிந்துதானே யுறவுகொண்டிடுவதுண்டோ
தெரித்திடிலடியனேனின் றிருவடிக்கத்திறத்தேன். (௬௪)

அடன்மலிவீரன்வீர மவனெதிர்மலைந்துநின்றேன்
படமிசைகொண்டுகோணப் படுமதுபோலவுன்றன்
கடன்மலியருளினாற்றல் கண்டிடப்படுமிங்கென்றன்
கொடுமையின்மிகையாலென்று குடைந்தும்பட்டழுங்கிக்கூறி. (௬௫)

என்குறைநினையாதெந்தா யினித்திருவுளமிரங்கி
ஈன்குறுமுத்திசேரு நன்னெறிகாட்டென்று
தன்குறையிரந்துளைந்து தனைநிகர்சித்தராமன்
முன்கரையிறந்தவன்பான் முதல்வனைவணங்கினானால். (௬௬)

வணங்கியவனைஞான வாரிதியருளானோக்கி
யிணங்கியபருவங்காணு மிவன்றனக்கின்பமுத்தி
யணைந்திடுநெறியீதென்ன வறையுமென்றுளத்துட்கொண்டு
பிணங்குறுபிறவியென்னும் பிணிமருந்தனையான்சொல்வான். (௬௭)

பருவமுற்றிலர்க்குமுக்கட் பகவனாகமத்தினுண்மைப்
பெருமையைப்பொருளையெண்ணிப் பெருமிதத்துரைப்பிலன்னான்
குரவரிற்பதடியென்ப குறித்துநற்பருவநோக்கி
யருள்செயிற்குரவசிங்க மவனெனாவறைவனையன். (௬௮)

உரைசெயிற்பரமஞான மொன்றுமேமுத்திக்கேது
சரிதைநற்கிரியையோகந் தாமொருமூன்றுஞான
மருவுதற்கேதுவென்று மறைபுகன்றுரைக்குமிந்தக்
கருவியைப்பொருளென்றெண்ணிக் களிப்பவர்கயவரன்றே. (௬௯)

கருமமும்யோகந்தானுங் கரணத்தைப்புனிதமாக்கிப்
பொருமிடர்வாயிரோறும் புக்குழல்கறங்குபோலத்
தெருமராதுண்ணிறுத்துந் தெளிந்தவக்கரணந்தன்னா
னிருமலனாகுமீச னித்தனென்றுணர்வுதிக்கும். (௭௦)

நித்தியனிமலனென்னு நினைவுறினநித்தமாகிப்
பொய்த்தழியுடம்புடம்பைப் பொருந்தியபொருள்வெறுத்து
மெய்த்தருள்குரவன்றன்னை விரும்பினன்சென்றுசார்ந்து
தத்துவமுதறிநின்ற தனியறிவினையேகாணும். (௭௧)

புலன்களையொழித்தபோதே பொறிகளும்பூதமைந்தும்
கலங்குறுகரணநான்குங் கலாதியுஞ்சுத்தமைந்தும்
விலங்குறுமடியில்வைத்த வெறுவுதடக்கள்ளின்மேன்மேன்
மலங்குறுமொருக்கடுக்கு மட்கலம்விழுதல்போல். (௭௨)

இந்திரியமோரொன்றாய்விட் டிடின்மற்றையொன்றுசாரு
முந்திரியமனமழிப்ப முற்றும்போமணியபாம்பி
னைந்தலைகளினுளொன்றை யரிந்திடின்மற்றொன்றலஞ்
சிந்திடுவிடமறிந்தாற் றீர்ந்திடுமொருவுகுமாரா. (௭௩)

ஆதலான்மனமடங்கி லங்கலிங்கங்கடம்முட்
பேதமோவபேதமோவென் றழிவுறுபித் துகேருத
தீதிலாவென்றியம்பிச சித்தராமற்குநால
லோதொணாவுணர்விலுண்மை யுணர்த்தினன்குருகுகேசன். (௭௪)

மனிதருளுரகர்சித்தர் வானவர்கணங்கடம்முண்
முனிவருளென்போனின்றன் முழுதருள்பெற்றாரில்லை
யினியெனைநிகர்வார்யாவ ரென்றருட்குரவனார்தம்
பனிமலரடியில்வீழ்ந்து பணிந்தனன்சித்தராமன். (௭௫)

இப்பரிசருளினாலே யிராமனுக்குபதேசித்துச்
செப்பருமவன்குற்றேவல் செய்யியவுளமகிழ்ந்து
கைப்படுமேர்தமன்ன கருணைவாரிதியிருந்தான்
றுப்புரவமைந்துசீர்சால் சொன்னலாபுரத்துமாதோ. (௭௬)

பதின்மூன்றாவது

சித்தராமையர்கதி

முற்றிற்று.

---

க௰ - க௨ - ஆ திருவிருத்தங்கள் - ௭௨௬.

## பதினான்காவது

# வசவண்ணர்கதி.



### வேறு.

சித்தராமனோடாரியனல்லமதேவன்
பத்தராகியபயிர்செய்கல்யாணமாம்பழனத்
துய்த்தநீரெனும்வசவனையுழவரிற்கண்டு
மெய்த்துமார்வமங்கடைந்தமையாயினிவிரிப்பாம். (௧)

அன்னமீனுடனிகழ்வறக்கொண்டமையாமற்
செங்நெலார்வயறீப்பசியாற்றுபுசிறந்த
சொன்னலாபுரந்தவஞ்செய்ததென்றுவான்றுதிப்ப
வென்னையாளுடையல்லமனிருந்தருணாளில், (௨)

சந்தமேவுகல்யாணமாநந்தனந்தன்னி
னந்திநாண்மலர்ப்புகழ்மணநயந்தசொல்வளியால்
வந்துகாதெனுநாசியிற்புகமிகமகிழ்ந்த
துந்துவார்திரைக்கருங்கடலுடுத்தபேருலகம். (௩)

முக்கணாயகன்புகழெனு மூரலுண்பதற்குத்
தக்கதீஞ்சுவைக்கறியெனச்சமைந்ததுவசவன்
மிக்கவான்புகழுவற்றினை மாதவர்விரவித்
துய்க்குநாவினிற்றுய்த்தனர்பவப்பசிதொலைய. (௪)

விலக்குமுற்பவர்சித்தராமற்குமுன்விளம்பு
மிலக்கணத்தினுக்கருணந்தியெனுமிலக்கியத்தைக்
கலக்கமற்றறிந்திடுவதற்குதாரணங்காட்ட
மலக்கமற்றநம்மல்லமன்றிருவுளம்வலித்தான். (௫)

அடியவர்க்கெளியானெனுமவனெமதகத்திற்
குடியிருக்குமவ்விராமனையுடன்கொடுகுறிலோர்
நெடிலடுத்தநன்னிரையெனவங்நகர்நீங்கிக்
கொடிமதிற்கலியாணமாநகர்வழிக்கொண்டான். (௬)

நறும்பழஞ்செறிதனியிடமொய்த்திடநண்ணு
மெறும்பொழுங்கெனவரனடியவர்திரளெழுந்து
மறந்தும்வெஞ்சமண்குண்டரையிணங்குறுவசவ
னுறும்புரம்புகலிருட்குருங்கண்டுளமுவந்தார். (எ)

தம்பிரானருள் வசவனுக்கியவறச்சாலைக
கும்பவாசநீர் முதலியவேண்டுவகொண்டு
வம்புலாமலர் வனத்தயர்வுயிர்த்துநல்வழிசோந
தெம்பிரானடியவர்கிளைகுதல்கண்டார். (அ)

பாண்டின்மாவளஞ் சிவிகையூர்ந்தேருநாபரிந்து
வேண்டுமாறுகொள் வேட்டத்சர்துறந்தவர்விரத
நீண்டுமாறகண் டேவர்துசென்றெழி * லலங்கார
காண்டமாமெனு மங்கலபுரத்தினைக்கண்டார். (கூ)

கண்டுசெல்லுமப் போதிலங்நகர்வளங்கருத்திற்
கொண்டவல்லமன் றிருவுளமிகக்கூர்ந்து
பண்டைநல்லிசைப் புலவர்சொல்லிராமனைப்பார்த்து
மண்டுபல்வளங் காட்டுவென்றனித்தனிவகுத்து. (க0)

துனைவிரும்பிவந்தடைந்தவர் தம்மைமுன்வெறுத்த
தினகரன்கதிர் விரும்புறச்செய்தளித்திரள்க
ணனிவிருந்துறுங் கடிமலர்சுமந்துபொன்னகரார்
கனிவிருப்புதண் பொழினிகழ்வதையெதிர்காணாய். (கக)

பூவினேறுசெந் தேன்மழையொழிவறப்பொழியுங்
காவினேறுவள்ளிதழவிழ்ந் தொழுகுதேங்கமல
வாவியேயாடுநல் லிசைபயிலஞ்சிறைவண்டு
பாவினேறுவெண் குழலெனத்திரிதலைப்பாராய். (கஉ)

கடிமலர்ப்பசுந்தேன் றுளிபிலிற்றுபைங்காவைக்
குடியிருக்குமவ் வளவெனக்கொண்டுவெண்குருகு
மடியடுத்தவ ரெனவிருந்திளங்கயல்வரலு
நொடியினிற்கவர் தண்பணைமருதமுநோக்காய். (கங)

குதிரையங்கதிர் மணிக்குடநீர்குடிப்பதுபோ
லதிரிளங்கமஞ் சூல்வளை தவழ்வயலணிநெற்

---

* அலங்காரகாண்டம் - கல்யாணபுரம்.

கதிர்வளைந்துசெந் தாமரைவாயுறக்கவிழ்ந்து
நதிபொருந்திய வழகையுமையணோக்காய். (க௭)

இங்குத்தன்னுள்வாழ் பயிற்சியாலிறந்துயிர்போயு
மங்குப்பொன்னெயில் வட்டத்துளிருண்மனத்தமணர்
தங்கற்குன்றுநீப் பொன்னெயில்வட்டமுஞ்சடைமேற்
கங்கைப்பெண்ணமர் பானடிக்கன்பர்காணாய் (க௮)

இறந்துமூடரின் னுரலிமைவிழியெனச்சேர்ந்து
பிறங்குமாமணிக் கதவிருபுடையினும்பெற்றச
சிறந்தகோபுர வாய்தலுமலர் நிசைத்தெய்வம்
பறந்துநாடிய முடியிறைக்கன்பம்போராய். (க௯)

இலங்குநீறெனுங் கவசமிட்டக்கமென்றியம்பு
மலங்கல்வாகைவேய்ந் தஞ்செழுத்தத்திரமடுத்த
நலங்கொள்வீரராம் பத்தர்தமறுகமணர்ளார்
கலங்குபாசறை போன்றெதிர்ப்பநவதுகாணாய் (க௱)

கட்டொர்சடைக் கண்ணுதல்பூசனைக்கருமம
மட்டமாதர் சிப்பசியாற்ற றமறமுள
ளிட்டமேற்புற கண்டவர்கொடியாவென்னப்
பட்டமாளிகை பற்பலநிகழ்வனபாராய். (க௨)

† பொறித்தவாழையின் கனியினைக்கடைத்தலைபொருந்தக
குறித்திடாதுணவெனக் கறித்தலகுநோய்கொண்டு
‡ நிறத்தவாழையின் கனியுமாசெய்கையாய்நினைந்து
கறித்திடாதமர் செம்முகப்பசுங்கிளிகாணாய். (க௩)

வள்ளனல்வசவன்புகழ்நாயினுல்வழுத்தா
தெள்ளும்வல்லமண் குண்டர்தம்பிறப்பினுமிழிப்பில்
புள்ளுநல்லன வெனவிளம்பூவையோடிருந்து
கிள்ளையவ்வச வன்புகழ்சொல்வதுகேளாய். (௨0)

என்றுகூறியவ்விரமனை மகிழ்வுசெய்தின்ப
மன்றல்வீதியில் வசவநாயகன்றிருமனைமுற்
குன்றுபோலுயர் கோபுரவாய்தலைக்குறுகச்
சென்றுமேவின னெம்மையாளல்லமதேவன். (௨க)

---

† பொறித்தவாழை - கற்பிதவாழை.
‡ நிறத்தவாழை - உண்மைவாழை.

தொடர்த்துளைக்கைவெண் மருப்புறக்காற்கருங்கோற்றோ
லுடுத்தமெய்ப்பரன்கொலை குறித்தெடாமழுவொப்ப
வடைத்தலைக்குறித்திடாத செம்மணிக்கதவுடுத்த
கடைத்தலைக்கண்மாதவர் குழாநெருங்குதல்கண்டார். (௨௨)

## வேறு.

அறுசுவையடிசிலுண்பா னடைகுவா * ரடிசிலுண்டு
மறுகிடைவருவோர்சான்றோர் வைகியவிடங்கணாடிக்
கறிவொடுமருவுசோற்றுக் காவடிசுமந்துசெல்வார்
நறுமலர்சுமந்துதண்டநா தன்பூசனைக்குப்போவார். (௨௩)

செஞ்சாணிறைஞ்சிநல்குஞ் செழுந்துகில்கிழித்துக்கீழ்க்கொண்
டெஞ்சியகிகையென்றெண்ணி யிட்டவணகன்றுபோவா
ரஞ்சுடர்மணிப்பசும்பொன் னணிதுகிலலங்கல்சார்தம்
வஞ்சியர்தமக்களிப்பத் தருகெனவாங்கிச்செல்வார். (௨௪)

நிந்தைசெய்தெமையெதிர்ந்த நெறியில்புன்சமணர்தங்கண்
மைந்தினையறியச்சொல்வம் வசவனுக்கென்றுசெல்வா
நந்தியைவணங்கவேறு நகர்நெறிநின்றுபோந்து
சிந்துரம்வயமாவம்பொற் சிவிகைவிட்டிழிந்துசெல்வார். (௨௫)

சீர்கெழுவசவன்பாடற் சிவவியாழ்கொண்டுசெல்வா
ராகிவின்மதனைவென்றோ னடியவர்குழாநெருங்கு
மேர்கெழுமணிப்பசும்பொன்னிருங்கடைநோக்கிநின்று
ரோகையோடலமனுமத் தொருவனுவிராமன்றானும். (௨௬)

ஆயிடைநின்றோர்தம்மை யப்பணப்பெயரின்மிக்க
தூயவனெதிர்கண்டோகை சொல்லுவலையற்கென்று
கோயிலுளமலபூசை குழாத்தொடுசெய்யும்போதிற்
போயினன்வசவனோடு புகழ்ந்திருபுகலலுற்றான். (௨௭)

மாதவரிருவரைய மழைமதர்நெடுங்கண்மங்கை
பாதியனுருவிரண்டு படைத்துவந்தனனேயென்னச
சோதியதரளக்கோவைத் தோரணவாய்தன்முன்னம்
வீதியினின்றாரென்று விளம்பினன்றவத்தின்மிக்கான். (௨௮)

என்றவனியம்பநந்தி யெனும்பெயர்க்கருணைக்குன்றங்
கன்றினைநினைந்துநெஞ்சங் கரைந்துவந்தணையுந்தாய்க்கிங்

---

* அடிசில் - உணவின்பொது.

கொன்றொருதடையுமுண்டோ வொல்லைநீதருதியென்னச்
சென்றவனமலனோடு சித்தராமனைவணங்கி. (உக)

பரசிவலிங்கபூசை பண்ணியபயனையுங்கள்
வரவெனவுஃமகிழ்ந்தான் வசவனீர்வருகவென்ன
வெருவொடுமுளமுலைந்து மெய்த்தவன்விளம்பவெங்கள்
குருபரன்முனிவான்போலக் குறுநகைகொண்டுகூறும். (௩0)

அரசியலடைந்தார்தம்பா லையமேற்றருந்துகின்றோர்
வருசெயல்வரிசையன்று மறித்துநீபோதியென்றே
வுரைசெயவமலனப்ப னுளம்வெரீஇக்கடிதுமீண்டு
வரைசெயும்வயிரத்திண்டோள் வசவநாயகற்குச்சொன்னான். (௩௧)

அல்லமன்புகன்றமாற்ற மப்பணன்சென்றுசின்று
சொல்லலுந்துணுக்கென்றுள்ளந் செர்றறளர்ந்துடல்வியர்த்துப்
புல்லவந்தணையுந்தாய்முன் பொருதுதும்பறுத்திட்டோடு
நல்விளங்கன்றுபோன்முன் னன்செலாதிருந்தேனென்று. (௩௨)

கரைந்துகுமன்முலைந்து கவலைகொண்டமுங்கநந்தி
பெருந்தகைமாச்சிதேவன்பெருங்கடற்பிறந்தசாவா
மருந்துதன்னெதிர்கிடைத்து மற்றதைவாரிக்கையா
லருந்துறவலசுவான்போ லாயினைநீயுமென்றான். (௩௩)

பெருந்தகைமாச்சிதேவன் பேசுசொல்விளக்குத்தூண்டுந்
துரும்பெனவுதவச்செம்பொற் றாவெணுந்தோளான்மாழ்கி
யிருந்தவப்பிழையென்மேற்றே யென்றடியிறைஞ்சியொய்யென
றருந்தவரொடுபுறப்பட் டல்லமனருகுவந்தான். (௩௪)

என்குணமறமேயாகி யானதிற்றிரிதலில்லை
னின்குணமருளேயென்று னீயதினிற்றியெந்தாய்
புன்குணமகவின்றீமை பொறுத்தருள்செய்கையென்னுந்
தன்குணம்விடுத்தொழிக்குந் தாய்வியனுலகிலுண்டோ. (௩௫)

சூத்திரப்பாவையானச் சூத்திரிநீயருட்கண்
பார்த்தெனைக்குறையகற்றிப் பணிசெயக்கோடியென்று
வாய்த்தநற்குரவன்செந்தா மரையடியிசைவிழுந்தா
னேத்திமெய்ப்பத்திநீத்த மெனப்படும்வசவதேவன். (௩௬)

நிலமகள்பொறுதுதள்ளி னிறுத்துநர்யாவரோரதை
மலிகடல்புரளுமாயின் மறிப்பவருளரோவெங்க
டலைவரீமுனிவையாயிற் றடுப்பவருலகில்யாண்டு
மிலையிலையருள்செயென்றா வெனச்சென்னவசவன்றாழ்ந்தான். (ருஎ)

சொற்றிடுங்குதலைச்சொல்லிற் சொற்றிறந்தெரிதல்போலிச்
சிற்றிளங்குமரனன்பு செயவடியிடுமுனேனுக்கேல்
சற்றுநின்கடைக்கண்வைத்துத் தண்ணளிபுரிகவென்று
நற்றவமாச்சிதேவ னங்குரவனைப்பணிந்தான். (ருஅ)

உரைமனமெய்யொருங்கி யுன்பணிசெய்யவல்லோன்
றரைமிசையிவனலாது தாமொருவரையுங்காணோ
மருள்செயவேண்டுமென்ன வல்லமனடிபணிந்தான்
கிரிமகள்கொழுநற்கன்பன் கின்னரப்பிரமனம்மா. (ருகூ)

எமையெலாமடிமைவேண்டி னிவன்பிழைபொறுத்திடென்று
வமையுலாம்பணைமென்றோட்சே யரிமதர்மழைக்கட்செவ்வா
யுமைமணாளனையுவந்த வொண்டவரெலாம்பணிந்தார்
சமையுளாருணருமெங்க டம்பிரான்சாற்றலுற்றான். (சo)

சொல்லியசொற்கள்கற்றீர் சொற்றவந்நெறியினிற்கு
நல்லியலில்லை நம்பா னவிறருமாற்றமொன்று
புல்லியசெயலொன்றாகப் பொருந்துநர்தம்மிலார்க்கும்
பல்லியமொடுநொடிக்கும் பாதரேபெரியராவார். (சக)

ஆதரவிலையேல்வேண்டு மறத்தினிற்பொருளோர்செம்பொற்
பூதரவளவளித்தும் பொருளழிவளவேயாகு
மாதரவுளதேனல்கும் பொருளணுவளவென்றாலும்
பூதரமெனவளர்ந்து புண்ணியப்பொருளளிக்கும். (சஉ)

துறவறமனையறஞ்சீர் தூய்மைநற்கல்விநல்லோ
ருறவொடுமகங்கடான மொண்டவம்விரதம்பூசை
யறிவிவையனைத்து மில்லை யாதரவில்லையாயிற்
பெறுவனமெய்வருத்தம் பெரும்பொருளழிவுமாதோ. (சந)

ஆதரவுடையான்செய்யு மல்லவுநல்லவாகு
மாதரவிலாதான்செய்யு நல்லவுமல்லவாகு
மாதரவதனாலாவிக் கருந்துணையின்பமுத்தி
யாதரவலாதுவேறென் றளித்திடக்கண்டதுண்டோ. (சச)

ஆதலாலன்பினுஞ்சொல் லகமகிழ்வினைசெயாவென்
றேதினானடியர்தீமை யொழித்தருடொழிலி னின்றோன்
காதலால்வணங்கினோர்நின் கருணையாலன்றியாங்க
ளேதினானல்லராவே மென்றடிதொழுதுநின்றார். (சரு)

காஞ்சிரங்கனிதின்றாங்கு கடையனேன்பிழைபொறுத்தாய்
தீஞ்சுவையமிர்தமன்ன திவ்வியகறியிற்குற்ற
மாஞ்சுவையறைதல்போலிவ் வன்பனைசச்சேறலென்று
பூஞ்சரண் பிசைவணங்கிப் போற்றினன்சித்தராமன். (சசு)

அடைக்கலமென்னையாளா யண்ணலேயென்றுநந்தி
கடிக்கமலங்கள்வென்ற கான்மிசைமீண்டுந்தாழ்ந்தான்
விடுத்திடேலென்றுசென்ன வசவனும்வீழ்ந்திறைஞ்சித்
தொடிக்கரந்தொழுதானன்பர் துதித்தனர்சூழ்ந்துகொண்டு. (சஎ)

அல்லமனெனுமெங்கோமா னருட்கடைக்கண்வைத்தைய
சொல்லுவனெழுதியென்று துணைக்கையாலெடுத்தணைத்து
நல்லருள்புரிந்துதண்ட நாயகன்றிருமடத்து
ளொல்லையிலடியர்சூழ வினிதெழுந்தருளினானால். (சஅ)

பதினான்காவது

## வசவண்ணர்கதி

முற்றிற்று.

---

கதி - கச - இ திருவிருத்தங்கள் - எஎஉ.

பிரமமேதனை

பதினைந்தாவது

# மருளசங்கரதேவர்கதி.

வேறு.

தாறுவினுயர் * பிரசாதகுண்டத்திற்
காணருமருளசங கரனைக்கண்டருட்
பூணணியல்லமன் போதநல்கிய
மாறுறுநெறியினை வகுத்துக்கூறுவாம் (௧)

மாதவரெண்ணிலர் மருவகுரூழ்தர
மாதுலரெதிர்பொரு ளாகவல்லம
னாதனை † யறிவறி நந்திகொண்டு
மேனதன்மனையிடை யெய்தன்மேயினான். (௨)

அயத்தைகள்பற்பல வகன்றுமெய்ப்பர
சிவத்தினை யடைபவர் செய்கைபோற்கடை
நடப்பலகடந்துபோய்ச் சாதகுண்டத்தை
மடப்புடனடைந்தன னொப்பிலல்லமன். (௩)

உயர்பிரசாதகுண் டத்தினுண்கரை
மயன்மலிபித்தரின் மருளசங்கரன்
பயினுழல்கண்ணுற்றீஇப் பரமயோகிதன்
னியலினையுணர்ந்தன னெம்பிரானமரா. (௪)

கண்டருளமலனைக் கண்டுதானெதிர்
வெண்டிரையமுதினை யிடியன்மேவிய
யுண்டனனெனமகிழ்ந் தோடிவீழ்ந்தனன்
வண்டிருவடிமிசை மருளசங்கரன். (௫)

வணங்கியவறவனை வந்தெடுத்துமெய்
யணைந்தெழுமுவகையோ டருள்செய்தல்லம

---

* பிரசாதகுண்டம் - அடியார்களுண்ட மிச்சிலுணவுபோடுமிடம்.

† அறிவறிதலாவது - அனைத்தையுமறிகின்ற வறிவையறிதல்.

னிணங்குறவருணிலை யிராமற்பார்த்தவன்
குணங்களைவியந்திது கூறன்மேயினான். (சு)

குண்டமேவுறுபிர சாதங்கொள்ளைகொண்
டுண்டுவாழ்மாதவ னுண்மைத்தன்மையைத்
தண்டநாயகன்முதற் சரணர்யாவருங்
கண்டிலர்யாரினிக் காணவல்லவர். (எ)

சரிதையொண்கிரியைகா றடுக்கும்யோகிவை
புரிபவர்தம்மையப் புரியுஞ்செய்கையாற்
றெரிதரலாகுமோர் செயலுமின்றிவா
ழரியநன்ஞானியை யறியலாகுமோ. (அ)

நலமுறுமோர்சிவ ஞானியில்லில்வாழ்
நிலையறமாகினு நீத்துநிற்குமோர்
தலையறமாகினுந் தரித்துஞாலமே
லிலைமறைகாயென விருக்குமென்பவே. (கூ)

வல்லனென்றிருப்பினு மிருக்கும்வன்மையொன்
றில்லனென்றிருப்பினு மிருக்குமெள்ளுறப்
புல்லனென்றிருப்பினு மிருக்கும்புண்ணிய
நல்லனென்றிருப்பினு மிருக்குஞானியே (க0)

அறிவறிஞானியா லன்றிவன்பவ
மறிவுறுகருவியான் மாய்வுறாதுகா
ணெறிகதிரிரவியந் தெழுந்திடாவிடிற்
செறியிருளகலுமோ சித்தராமனே. (கக)

சங்கரமுனிநிலை தனைக்கண்டாய்கொலென்
றெங்குருபரன்சொல விராமன்கைதொழு
திங்கிவன்மருளறி லிருந்ததன்மையென்
னங்கணவறைகென வறைதன்மேயினான். (கஉ)

வேறு.

தொழிலான்முயன்றுநுகர்வமெனிற் றுயரொன்றுயிர்க்குவிளையுமெ
வொழியாவமலசரமூர்த்தி யுண்டமிச்சினுகர்வமெனிற் [னை
பழியாதுமிலையகன்றுபோம் பவமுமென்னப்பிரசாதக்
குழியானதனையகலாமற் கொண்டிங்கிருந்தான்குணமிக்கான். (கங)

பந்தமகன்றசிவபத்தர் பாதம்விளக்கும்புனற்குழியில்
வந்துபிறந்துழூழ்கியதில் வைகும்புழுவின்பெரும்பேறு
முந்துகங்கைமுதலவா முற்றும்படிந்துதீவினைகள்
சிந்துமந்தணாளருமே சேராரென்றுமறைசாற்றும். (கச)

தாய்க்குவழுவின்மகளிர்க்குத் தந்தைதனக்குப்பசுவிற்குச்
சேய்க்குமறையோர்தமக்கிடர்செய் தீர்வில்கொடியபாதகமும்
போக்குமிமைப்பிற்கரணத்தைப் புனிதமாக்கிச்சிவமாக
வாக்குமரன்றன்பிரசாத மாயினதற்குநிகருண்டோ. (கரு)

பசிக்குமருந்துமாய்வீடு பயக்கும்வண்மைசேர்ந்துபவ
மொசிக்குமரன்றன்பிரசாத வூதியந்தானுணர்ந்திங்கு
வசிக்குந்தகைமைசங்கரற்கே வருவதன்றிப்பசிக்குணவு
புசிக்குமனிதர்தமக்கென்றும் பொருந்தாதென்றனெம்பிரான். (கசு)

நின்னையறிவன்சங்கரனே நீயேயவனையறிகுவாய்
பின்னையுலகில்யாரறிவார் பேசிற்பாம்பேபாம்பின்கா
றன்னையறியுமெனவமலன் றாட்டாமரையின்கீழ்ப்பணிந்தா
னென்னையடிமையாவுடைய விராமனென்னுமிணையில்லான். (கஎ)

அம்பொன்வைப்பின்மீதிருந்து மறியாதல்லற்படுவான்போ
னம்பன்மருளசங்கரனை நாஞேவுறியாதிருந்தழிந்தே
னிம்பர்மருவிநிரஞ்சனநீ யெனக்குக்காட்டித்தந்தனையென்
றம்பர்பரவுமல்லமனை யுவந்துபணிந்தானருணந்தி. (கஅ)

இணங்குமிக்ககாயிதனக் கின்பமூடல்சரலிங்கம்
பிணங்கன்முத்திகாயிக்குப் பேரின்பென்பதுணர்த்தற்குக் [வின்
குணங்கண்மிக்காய்நினைசினந் தாஙகுறையொன்றுளதோநினக்கர
பணங்கொணிலத்திற்பரமசிவ பத்திக்குவானீயென்றக்கால். (கக)

இங்குமருளசங்கரன்போ லெண்ணிலார்நின்மனைவாய்தற்
கங்குல்பகலுமகலாமற் காப்பரென்னினின்முன்றில்
பங்கவினையின்வலிகடந்த பலருந்தாஞ்செய்தவப்பயனாற்
றங்குகயிலைமலையன்றோ தண்டநாதவென்றமலன். (உ0)

வெம்மையெதன்கணிகழ்ந்திடினும் வெந்தீக்குணமென்பதுபோல
மும்மையுலகின்யாண்டேனு முளைக்கிற்பத்தியதைநினதென்
றிம்மையுலகமியம்புமெனி லெங்கள்வசவநின்பெருமை
கொம்மையிளமென்முலைமடந்தை கூறநன்றியாரறிவார். (உக)

பத்திகடலேகுணக்குன்றே பாசப்பகையேயெம்முறவே
முத்திககரசேசிவானந்த முதலேஞானமணிவிளக்கே
சித்திப்பொருளேயருணந்தி தேவேநின்னைத்தொழுமடியார்
புத்திக்கமுதேயாவர்நினைப் போல்வாரவரையறியேமால். (௨௨)

என்றுகூறவெமையுடையா னெனக்குப்புகன்றநலமெல்லாஞ்
சென்றநாளிலிலேநினது செந்தாமரைத்தாடொழப்பெற்ற
வின்றுதொடங்கியுளவாமென் றெந்தைநந்திவணங்கியெழு
நின்றவமலசிவசரணர் நெஞ்சமுவகைபூத்தனரால். (௨௩)

அருளான்மருளசங்கரனுக் கமரர்தாமுமறிவரிய
பொருளாகியபேரின்பவுரு பூதிவிளக்கமருள்செய்தா
னுரையாணினைவாலருமேணுக்கா லுலகருணர்வைப்பிணித்தமல
விருளானதனையறமாற்ற வெழுந்தஞானசூரியனே. (௨௪)

பதினோர்தாவது

மருளசங்கரதேவர்கதி

முற்றிற்று.

---

கதி - ௧௫ - க்கு திருவிருத்தங்கள் - ௬௱௬.

பதினாறாவது

# இட்டலிங்ககதி.

வேறு.

சிட்டனல்லம தேவனருளுறீஇ
நட்டநண்பொடு நந்தியுணர்த்தற
இட்டலிங்கத் தியல்புகன்றமை
கட்டுவெவ்வினைக் கட்டறவோதுவாம். (௧)

சங்கரற்குத் தனிநிகரின்பவீ
டங்களித்தரு ளல்லமனந்திதன்
மங்கலத்திரு மாளிகைகட்செவிக
கங்கணற்கினி யாரொடுகண்டனன். (௨)

மண்டுபேரொளி மாடத்துநாப்பணந்
தண்டநாதன் றவிசொன்றமைத்திட
அண்டநாயக னல்லமனுயிடைக
கண்டநோக்கங் களிப்பவிருந்தனன். (௩)

அதனத்தி லமர்ந்தருளல்லமன்
பாதமன்பொடு பன்மலராயிரு
யாதவத்தின் வலியெனத்தாழ்ந்தெழு
காதன்மிக்குக் கசிந்துளநந்திதான். (௪)

அடியனேன்சிவ பத்தியறிந்தவை
படியிலூமன் கனவெனப்பட்டது
முடியுமாறு மொழிந்தருளென்றுபொற்
றொடியுலாங்கை தொழுதுவிளம்பினான். (௫)

கேட்டவாரியன் கேடில்சிவநெறிக
கூட்டமேவுறுகொள்கையினைநினைக்
காட்டுவாருள ரோசெங்கதிர்க்கிருள்
ஓட்டுசோதியு முண்டுகொலோவென்றான். (௬)

வள்ளலின்றனை வந்துபுகழ்ந்தனன்
தெள்ளுதண்புனற் றேக்குமுளைத்தலைக்
கிள்ளிகின்றெறி கின்றவர்போலெனு
உள்ளுடைந்திட் டுரைக்கும்வசவனே. (எ)

வேறு.

இகழ்ந்தெனதுளச் செருக்கினையகற்றிலாய்
புகழ்ந்தனைவிழைபுளிங் கறியிட்டாறுநோய்
மிகுந்தெழவளர்த்தல்போ லெனவிளம்புபு
தகுங்கழலிறைஞ்சினன் றண்டநாயகன். (அ)

அருளினுனினதடி யருச்சிக்கும்படி
தெருளிலாவெனக்குரை செய்தியென்றலு
மருளறுமெனுமொரு மதிலுற்கீந்தருள்
பொருளினுனினையன புகறன்மேயினன். (௯)

புன்மரனெளிபுழுப் புள்விலங்கெனும்
பன்மையதுயர்செயும் பவங்கடப்பியே
வன்மைகொணிலமிசை மக்களாகுதல்
நன்மைகொளுயிர்க்கலா லரிதுநந்தியே. (௧0)

நரர்வடிவாயினு நன்மையாற்றுறு
மரபினிலுலகினில் வருதறப்புதல்
அரிதுநல்லறம்புரி * வழியடைப்பினு
மருவுதலரிதறம் வளர்க்குமங்கமே. (௧௧)

அறத்துறுப்பெய்தினு மன்பினுலறஞ்
சிறப்புறச்செய்தலிங் கரிதுசெய்யினும்
புறசமயங்களைப் போக்கியாகம
நெறிசமயங்களை யறிதுநேர்தலே. (௧௨)

ஆகமம்புகனெறி யடைவுறுயினுஞ்
சோகமில்சைவநற் றுறையைநன்றெனச்
சேர்குதலரிதது சேர்வுறுயினும்
ஏகலிங்கயிக்யமு குதலன்றெண்மையே. (௧௩)

---

* வழியென்றது - மரபை.

புண்ணியமுதிர்வினாற் பொருந்தியங்கையிற்
கண்ணுறநிகழ்வுறு சிவலிங்கத்தினை
யெண்ணியமனமுட னென்றும்வந்தனை
பண்ணியமுயல்பவன் பத்தனென்பவே. (கச)

ஆவுறுபிணிகெட வாவின்பால்கறந்
தாவினையூட்டல்போ லாணவங்கெட
வாவியுளமலனை யங்கைதந்துபின்
னாவியுளமைவுற வாக்குமாரியன். (கரு)

கருங்கொடியிருவிழிக் கண்ணுமோராமணி
திரிந்திடுசெயலெனத் திரிதலின்றியே
பொருந்துறுமகமொடு புறமுஞ்சீர்வுற
இருந்திலகுறுமரு ளிட்டலிங்கமே. (கசு)

குறிபலபலமுறை கொண்டுபல்வகைப்
பொறிதொறுமருவியொண் புலனுகர்ந்துமாய்ந்
தறிவருநிலையவா தாரமேவியு
நிறைவுறுமங்கையி னிகழுமிட்டமே. (கஎ)

அடைந்துளவுருச்சுவை யமைதியென்பன
வுடம்பொருமூன்றினு முற்றடைந்திடுந்
தொடர்ந்துளவினைவலி தொலைத்தியானெனும்
இடும்பையிலின்பரு ளிட்டலிங்கமே. (கஅ)

என்றறிவறவறிந் திட்டலிங்கமாம்
ஒன்றொருபொருளிலை யுறவிழித்தவன்
பொன்றுறுசகமெனப் புணர்ந்தமாயையை
வென்றவனவனெனா விளம்பும்வேதமே. (கக)

பொருவில்சற்பத்தியாந் தாரம்பூண்டொரு
வரவயிராகமாம் வத்திரம்புனைந்
தொருவலிலுணர்வெனுஞ் செச்சையொன்றுறப்
பரமனையிருத்துவோன் பத்தனாகுவான். (உ0)

ஒன்றினொன்றுள்ளுற வுடம்புமூன்றையு
மன்றநல்வத்திர மடியதாக்கியே

* உடம்பொரு மூன்றாவது - தூல சூக்கும காரணங்களை.

யென்றுமங்கமைவுற விட்டம்வைப்பனே
லன்றவன்சிவமய மாகுமென்பவே. (உ௫)

அருளெனும்புனலினை யாட்டிச்சாந்தமாம்
வரைநறுஞ்சந்தொடு மருவவிந்திய
விரைமலர்புனைந்தறி வினையருத்துறிற்
பரமனையவன்சிவ பத்தனாகுவான். (உ௨)

ஆசறுமனத்தெழு மன்பையன்றியே
பூசனையுவக்கிலன் புராரிசென்னிமேல்
வீசறுதிரையினு மிக்கதோசொலாய்
வாசல்செய்மனமுடை யொருவனாட்டுநீர். (உ௭)

பூப்புனைகையுமெம் புனிதன்றன்புகழ்
பாப்புனைநாவுமே படைத்துளான்றனை
சேப்புனைகொடியுடைத் தேவனேயென
நாப்புனைபுகழொடு நாகரேத்துவார். (உ௪)

பூசனைசெயாதகை புராந்தகன்புகழ்
பேசுதலிலாதவாய் பெற்றமன்றிடு
நீசரானமர்ந்தினி னெடுவனத்திடைக்
கூசுதலிலாதபுன் குரங்குநன்றரோ. (உ௯)

குடிப்பனவிழுங்குவ கூரெயிற்றினாற்
கடிப்பனநக்குவ வனைத்துநகைம்மலர்
அடுத்துளசிவன்றனக் கற்பித்துண்பவன்
விடுத்தவன்மேல்வரும் வினைகள்யாவுமே. (உ௬)

தானுறமுடன்மனந் தனமென்றுள்ளவை
யினமில்குருசிவ சரங்கட்கீந்துதான்
யானெனதென்குத லின்றிவைகுவோன்
மேனிகழ்சிவமொடு வேறலானரோ. (உ௮)

குருசிவசரங்கொளக் கொடுத்தமெய்மனம்
பொருளிவைநமவெனப் புந்திசெய்துகொ
ளொருவனில்வழிமறித் தொறுத்துக்கொள்வன
சரனிநல்லன்மெய் தவறிலாமையால். (உ௯)

விடுவனகாமம்வெவ் வெகுளிமாலிவை
தொடுவனகுருசிவ சரங்கடொல்பவம்

கடுவெனவெருவிய கருத்துளார்க்கிவண்
அடுவனவெனப்புல னட்டவாற்றலாய். (௨௯)

அங்கையினமர்தரு மாீனவிட்டொரு
வெங்கடவுளர்தமை விழைந்துபோற்றுவார்
கங்கையையகன்றவர்க் கழியின்மூழ்குநர்
துங்கவரின்வேறலர் தருமமூர்த்தியே. (௩௰)

மோகமில்குருசா முனியின்முன்றுள
தாகியவெயிர்முழு தகன்றுவண்டுறை
போகியமடிவெனப் புனிதனுநமேற்
பாகியன்மொழியுமை பாகற்கன்பனும். (௩௧)

விள்ளருநற்சிவ வேடத்தோர்பொருள்
கொள்ளைகொள்கிற்பினுங் குறைகள்கூறினுய
பிள்ளையையறுப்பினும் பிழைகள்செய்யினும்
எள்ளுதலிலனெனி லிசற்கன்பனும். (௩௨)

ஈங்கயந்தனக்கொரு சாதியுன்னிறன்
அங்கையினமர்தரு மாற்குமுன்னிறன்
சங்கமனுடெசாந் தம்மில்வேறெனும்
அங்கவனறிவரு மளற்றழுங்குவான். (௩௩)

தலைமைகொள்குருசிவ சரங்கட்காகவே
உலையிடுமெரிசியின் றேங்கன்மத்தெறி
அலையமுதாந்தமக் காகவாக்குறிற்
கொலைசெயுநஞ்சினுங் கொடியதாகுமால். (௩௪)

தனுவுளவளவுமோர் தருநற்செய்கையும்
மனமுளவளவும்பா வனையுஞானமுண்
டெனவுளவளவுமீ ருயமுயினையந்தவன்
பினையுளவளவுநோய் பிறக்ககற்றுமே. (௩௫)

ஈசனையிருத்துறு மிதயத்தோர்பொருள்
ஆசையையிருத்துத லந்தணாளர்தாம்
வாசமுற்றிடுமொரு மனையிற்புன்செயல்
நீசரையிருத்துத னிகர்க்குமென்பரால். (௩௬)

சினமுதலியமய நீரமாற்றபு
வினைதபுவாய்மையா மொழுக்கையன்பெனும்

புனலொடுவிரவியே பூசினல்லது
மனமெனுமனையிடை வராதிலிங்கமே. (௩௭)

காலமுங்கருமமுங் கடந்தகாரணன்
பாலுறும்பரிசறப் பார்மடந்தையர்
கோலமும்பொருளையுங் குறித்துநசசுநர்
சீலமும்விரதமுந் தீயவென்பரால். (௩௮)

வெங்கொலைகளவுபொய் வெகுளியாசையென்
றிங்கிவையொடுமறீஇ யிருக்கின்றார்தமக்
கங்கையினெல்லிபோ லவிர்சடைப்பிரான்
செங்கையிலிருப்பினுஞ் சேயன்சேயனே. (௩௯)

பத்தரைப்புகழ்வுறப் பணியவுண்டவர்
வைத்தனகொளவுடன் மருவப்பெற்றவர்
சித்தியுங்கடவுளர் சிறப்பும்வேறொரு
முத்தியும்பொருளென முன்னுறார்களால். (௪0)

இன்னணநன்னெறி யாவுமாயிடை
துன்னியசிவகணந் துணிந்துகொள்ளவே
மன்னவனெனுமருள் வசவநாயகன்
றன்னெடுபுகன்றனன் றலைவனல்லமன். (௪௧)

பாடினன்பரவினன் பணிந்தசொல்லுரை
யாடினன்பன்முறை யல்லமன்றிருத்
தாடலைபுனைந்தனன் றண்டநாயகன்
மூடியவுவகையின் மூழ்கினனரோ. (௪௨)

திருந்தவிவ்வகையுப தேசித்தெண்ணிலா
அருந்தவர்குழாத்தொடு மருணந்திப்பெயர்ப்
பெருந்தகைமகிழ்வுறப் பிரிவிலாரியன்
இருந்தனன்மலிகலி யாணத்தென்பவே. (௪௩)

பதினறாவது

## இட்டலிங்ககதி

முற்றிற்று.

---

கதி - ௧௬ - இற் திருவிருத்தங்கள் - ௮௩௧.

பதினேழாவது

# கதலிவனகதி.



### வேறு.

வரையிற்புண்ணிய வனத்தினில்வளங்கெழுநதியின்
கரையிற்பன்னெடு நாளருட்குரவனைக்காண்பான்
றிரிதற்குற்றுலாய் வந்துமாதேவிகல்யாண
புரியிற்கண்டுவந் தேகியமுறையினிப்புகல்வாம். (௧)

காட்டினும்பெருங் குன்றினுந்தேடினள்காணாள்
வாட்டுறும்பிறப் பெனும்பிணிமாய்வுறவீட்டிற்
கூட்டுநன்மருந் திருப்பதையறிஞராற்கூறக்
கேட்டுவந்துமா தேவியந்நகரினைக்கிடைத்தாள். (௨)

தலையில்வெண்கலை யொன்றுறவெற்றரைசமைந்து
பலிகொளும்படி மனைதொறுமுலகெலாம்பழிசச
அலமரும்பாற் கினியவள்வெற்றரையாய்க்கட்
புலன்விருந்துணுங் கடிநகர்வீதியுட்புகுந்தாள். (௩)

நாற்குணங்களுண் முதற்குணமாகியநாணைத்
தீர்க்குமிம்மட முடையவள்யார்கொலோதெரியேம்
பார்க்கிலின்னவள் பித்துடையாளெனப்பலரு
நோக்கும்வண்ணம்வந் துற்றனளுலகியனோக்காள். (௪)

உலகுளார்தமைப் பேதையென்றுணர்ந்தனளோதான்
உலகுளார்தனைப் பேதையென்றுணர்குவரென்றோ
உலகுளார்தமை நாணினீங்கியவுடையாள்
உலகுளார்தொழுந் தண்டநாயகன்மடத்துற்றாள். (௫)

தண்டநாயக னொடுபலர்நெருங்குறத்தவிசின்
அண்டநாயக னல்லமன்வீற்றிருந்தருளக்
கண்டுபோயரு கிறைஞ்சினளாண்டமர்கணங்கள்
பண்டுதாமறி யாவியப்படைந்தனர்பார்த்து. (௬)

நெஞ்சமாரழ லரக்கெனநெக்குநெக்குருகச்
செஞ்சொல்வாய்தடு மாறவாள்விழிபுனல்சிந்தக்
கஞ்சநாண்மலர்க் கைதொழுதகங்கனேய்காணு
அஞ்சினேன்பவப் பிணியினியருள்செயென்றழுதார். (௯)

வீவெப்பவ ராணெனப்பெண்ணெனவேரே
ஏடலர்க்குழ லுமைகலையேயிவளிவள்போ
ளூடுநிற்பரு வம்பெறுமயரிலஞானம்
கூடுதற்குரி யாளெனவல்லமன்குறித்தான். (அ)

தானலாதொரு பொருளிலைச்சகமெனவென்னும்
ஞானமேவலாற் காமவின்பந்தனைநண்ணுள்
தானலாதர வாற்றனைத்தழுவியின்புறுநர்
ஏனைமாந்தரு ளார்கொலோவென்றனரிருந்தார். (௯)

இன்றுகாமனை வென்றவரினையளாயிழையோ
டொன்றுமேனிய ருகியகண்ணுதலொருவன்
வென்றுளானெனை வுலகினிலெடுத்தசொன்மெய்ம்மை
யன்றுபோலுமென் றியம்பினர்சிலரவணமர்ந்தோர். (கo)

உடலமானமற் றிவனனவனைத்தையுமொருங்கு
விடவலார்க்கலா விளமையுஞ்செல்வமும்விரும்பி
* நடலைவாழ்வினில் வெறுப்புறுப்புல்லியநரர்க்குத்
தொடருமாவினை தொலையுமோவெனச்சிலர்சொன்னார். (கக)

சென்றுதேடிநாந் தத்துவமருள்செயுந்தீட
ரன்றிஞானதே சிகனுளனோவெனவாய்ந்திட்
டின்றுமேயுமா தேவிபோலிலையெனவெம்மான்
நின்றஞானமூ லந்தனையுணர்த்துவானினைந்தான் (கஉ)

பூதநீயலைபொறி களுமலையலைபுந்தி
யேதுநீயலையிவற்றின மயககியாவெனன்றும்
போதநீயலையென் றிவை யனைத்தையும்போக்கிச
சோதியாகிய பிரமமேநீயெனச்சொல்லி. (கங)

ஞேயஞானஞா துருவெனுமிவைபலநிற்கு
மாயின்வேறறு முத்தியன்றதுசகமாமென்

* நடலை - வஞ்சகம், துன்பம்.

றேயுமாறிது வதுவெனுஞ்சுட்டிலாவியல்பை
மாயைமாறிய தேவிபாலருளினன்வள்ளல். (கச)

தேறுகென வெனதுளந்தெளித்ததேசிகனைம்
மாறுகாண்கிலே னுடல்பொருளாவிகண்மதிப்பில்
வேறுபோயின வாயினவென்றவள்விழிக
ளூறுநீரொடுமெல்லமன் றுடொழுதுளைந்தாள். (கரு)

அன்னை நீயினிக்கதலிமா வனத்தினையடைந்திட்
டென்னைமேவினை கேட்டவிப்பொருளினையெல்லா
நின்னினீதெரிந்துறநிகொ * ணிதித்தியாசனத்தின்
மன்றுவாயெனவேவினன் றற்கொடைவள்ளல். (கசு)

வள்ளறண்மலர்த்திருவடி வணங்கியம்மருங்கிற்
கொள்ளைமாதவர்தாடொழு தருள்விடைகொண்டு
வெள்ளமாகியவன்புடன் றயத்திடமேவித்
தெள்ளுமாரமுதனையவள் பருப்பதஞ்சேர்ந்தாள். (கஎ)

வசவன்பாலருளல்லம ஹற்றெனவாமேனோர்
பசுவின்பானிறைசுனையிடை நழுவிய்ப்பழுத்தை
யிசையும்பூகிள பிழற்றெருலிகடலெனவிரவ
விசையும்பாசிலைக் கதலியங்காடதிலிலங்கும். (கஅ)

விரிந்தவாழையினெட்டிலை மிசைநிறைமதியம்
பொருந்துமாறுவிண்முழுதையு மளித்தருள்புத்தேள
அருந்தவாய்மடைத் தொழிற்றிறநிறம்பயடிசில்
சொரிந்ததாமெனமனமகிழ கூர்தரத்தோன்றும். (ககூ)

இனையவாழையங்காநகெண் டெங்கண்மாதேவி
முனிவர்வானவரியாவரு முறைமுறைபோற்ற
தனியளாயொருபுறமயாந் தாளசுவைதருசெய
கனியவாவியவுளமொடுமிருந்தனள்களித்து. (உ0)

**பதினோராவது**

# கதலிவனகதி

**முற்றிற்று.**

---

கதி - கஎ - இ திருவிருத்தங்கள் - அ௱க

---

* நிதித்தியாசமெனல் - ஐயந்திரிபறத்தெளிதல்.

பதினெட்டாவது

# சாதகாங்கசுதி.



## வேறு.

வினையடுத்த * விழுமந்துடைத்தெமக்
கனையடுத்த வருளுடையல்லமன்
மனனடக்கம் வசவற்குணர்த்துதல்
தனையெடுத்தினிச் சாற்றுதுநாமரோ. (க)

காவினீடுங் கதலிவனத்துமா
தேவிபோதத் திருவருள்செய்தவண்
மேவிஞான விளக்குறவெம்முடை
ஆவிபோலும் வசவனறைகுவான். (உ)

மத்தர்வாத மயக்கமிலாதுயர்
முத்திசாதன மொன்றுமொழிந்தரு
ளத்தநீயென் றடிகடொழுதெழப்
பத்திவேண்டும் பரமன்பகருமால். (௩)

பரமமுத்தி பதம்பெறுமேதுவுட்
கரணசுத்தி யதனதுகாரணம்
அரணெரித்த வமலற்குறித்தநற்
கிரியையித்திறம் வேதங்கிளக்குமால். (௪)

மனமிலிங்க மருவிலையேலுட
றனிலிலிங்கந் தரித்துமிலையிலை
யெனவியம்பு மிணையிலியாகம
நினைவரன்கழ னிற்கநிறுத்திடுய். (௫)

தாவிலாத மனமொடுசார்தரா
தோவுமாயி னுலகிற்புனலுமொண்

* விழுமம் - பிறவித்துன்பம்.

பூவுநாடொறும் போக்குறுபூசனை
ஆவிபோகிய வாகநிகர்க்குமால். (௬)

புறம்புகாண்குவன் புல்லியனீசனை
அறிந்தஞானி யகமுறக்காண்பனல்
எறும்பிகாணுறி லின்கரும்பேகொளுந்
செறிந்தவாடிலை தின்பனவென்பவே. (௭)

கரங்கணல்ல கருமஞ்செயாநிற்பத்
திரிந்துசெல்லுஞ் செலாதவிடத்துநெஞ்
சொருங்குருத வொருமனந்தன்னினும்
பரந்தவல்லற் படிக்கும்பகையிலை. (௮)

துயிலையின்பெனச் சொல்லுதலிந்தியத்
தியலுநெஞ்ச விலாமையினலன்றே
பயிலுநெஞ்சம் பரந்துதிரிதருஞ்
செயலிலில்லைச் சிறிதுஞ்சுகமரோ. (௯)

மனமொருத்தன் வசப்படுமேலவன்
பினைவருத்தும் பிறப்பையடைந்திடான்
மனமொருத்தன் வசப்படாதோடுமேல்
நனிபிறப்பிடை நாளுஞ்சுழலுமே. (௧௦)

அறவினைக்கு மரும்பொருளின்பொடு
பெறுவதற்கும் பெருங்கல்விகற்றுயர்
விறலினுக்குநல் வீரந்தனக்குமொண்
டிறவினுக்குந் துணைமனமென்பவே. (௧௧)

நல்லசெய்து நரரையுயர்த்தவும்
அல்லசெய்தங் களற்றிடையாழ்ப்பவும்
வல்லதிந்த மனமலதையனே
இல்லையென்ன வியம்புமறையெலாம். (௧௨)

நெஞ்சமாதுமை நேசனைநண்ணுமேல்
விஞ்சுபாதகங் கோடிவிளைப்பினும்
அஞ்சுறுனவ னவ்வினையாவையும்
பஞ்சுதீயிடைப் பட்டெனமாயுமே. (௧௩)

மக்கண்மானிட ரென்றுமனத்தினன்
மிக்கமேன்மை விளங்கினரில்லெனிற்

பொக்கமேயும் பொறிகளோரைந்தினால்
ஒக்குமாவினை யொத்துயர்வுற்றிடார். (கச)

கெடுக்கவல்லதுங் கெட்டவர்தங்களை
எடுக்கவல்லது மிம்மனமென்றதை
அடக்கவல்லவ ரையபவக்கடல்
கடக்கவல்லவ ரைவன்கடிதரோ. (கரு)

ஆயின்மிக்கோ ரரியசெயலலா
நேயமிக்க மனத்தைநிறுத்தல்காண்
வாயுநிற்க மனமுமுடனிற்குந்
* தோயநிற்குநி னிற்குந்துரும்புமே. (கசு)

ஓடுமாவை நிறுத்துநினுள்ளுறக்
கோடும்வாய்க்க லினத்தினைக்கொள்ளுவார்
நீடுமாமன நிற்கநிறுத்துநி
லோடும்வாயுவை யுள்ளுறவீர்ப்பரால் (கஎ)

அடுத்தநாடிக ளாங்கொரு † மூன்றினும்
விடுத்துவாஙகியு மேவநிறுத்தியுந்
தடுத்தும்வாயுவைத் தன்வசமாக்கில்வ ட
மடுத்திடாது மனமும்வசப்படும். (கஅ)

ஓடும்பொன்னு முறவும்பகையுமோர்
கேடுஞ்செல்வமுங் கீர்த்தியுநிந்தையும்
வீடுங்கானமும் வேறறநோக்குதல்
கூடுந்தன்மை கொளுமனநன்மனம். (கசு)

மன்னுகாம வெகுளிமயக்கமென்
றின்னகூடி யெறிவளிமுற்சுடர்
என்னவாடு மியன்மனந்தீமனந்
தன்னையாருந் தடுக்கத்தகாதரோ. (உ0)

மறிந்திடாது மன ‡ பவனங்கடாஞ்
செறிந்தவாயிற் சிவமயமாகுமால்

* தோயம் - ஓடும்நீர்.

† நாடிகள் மூன்றாவன - இடகலை, பிங்கலை, சுழிமுனை.

‡ பவனம் - பிராணாதிவாயுக்கள்.

உ

பத்தொன்பதாவது

# கோரக்கர்கதி.



## வேறு.

வசவனைமுதலாயுள்ள மாதவர்தமையகன்று
பசுமதிதவழ்குவட்டுப் † பருப்பதமலையைநண்ணிக்
குசைசுடுமறையோர்போற்றுங் கோரக்கனெனும்பேர்ச்சித்தன்
இசைவுறவுண்மையெந்தை யியம்பியவாறுசொல்வாம். (௧)

பொறிவழிசெலாதுநெஞ்சம் புனிதமாம்வகைபுகன்ற
நெறிமுறைவழாதியற்றி நீவிர்நின்மின்கண்மிக்க
அறவரையுலகிற்கண்டிங் கடைதுமென்றுண்டையோர்கட்
கிறையவனினிதியம்பி யெழுந்துமின்னெனமறைந்தான். (௨)

கன்றின்வாய்முலைநெகிழ்த்துக் கறவைவிட்டகன்றதென்னச்
சென்றனனையனென்று திசைதொறுநோக்கிமாழ்கி
வன்றழலிழுதுபோல மனமுகக்கண்ணீர்மல்கி
நின்றனர்வசவனாதி நிகரில்சற்பத்தரெல்லாம். (௩)

காணுதலொழிகநல்லார்க் காணினங்கவர்பானட்புப்
பேணுதலொழிகபேணிற் பிரிபுறலொழிகவுற்றான்
மாணுயிருடம்பில்வாழும் வாழ்க்கைபோயொழிகவென்று
ஊணிடுமொருதாய்நீத்த பார்ப்பெனவுளங்குலைந்தார். (௪)

தண்டநாயகன்கரத்திற் றம்பிரான்றன்னைக்கண்டு
பண்டுபோலுவகைபூத்துப் பத்திசெய்தாங்கிருந்தான்
தொண்டனாகியவிராமன் சொன்னலாபுரத்தினெஞ்சிற்
கொண்டவாரியனோடேகிக் கொடுவழிதப்பிநின்றான். (௫)

அல்லமனறைந்தமாற்ற மகங்கொடுபிறருந்தாஞ்செய்
நல்லனபுரிந்துதத்த மிடங்தொறுநணுகிவாழ்ந்தார்

---

† பருப்பதமலை - ஸ்ரீசயிலமலை. இருபெயரொட்டுப் பண்புத்தொகை.

தொல்லைநல்வினையாற்றன்னைத் தொழப்பெறுமடியர்தம்பாற்
செல்லுவமென்றுசென்றோன் செயலினித்தெரிக்கலுற்றாம். (௬)

எரிபுரைதளிர்தளிர்ப்ப விளமரக்காவிற்றென்றல்
மருவுதல்போலவன்பர் மனமொடுகண்களிப்பத்
திருவுருவொன்றடைந்து சென்றவக்கருணைவள்ளல்
கருமுகிறவழ்பாரைப் பருப்பதங்கண்டுசென்றான். (௭)

அல்லமன்கண்டுசெல்லு மப்பருப்பதத்தின்மேன்மை
சொல்லுதலறியாராகிச் சுரர்முனிவரர்கடம்முள்
வல்லவனெனவிருக்கு மறிஞருமயங்கிநிற்ப
புல்லறிவாண்மைகொண்டு புகலுவன்சிறிதஞ்சாமல். (௮)

நாடொறுமுதித்தொடுங்கு ஞாயிறுதனைச்சுமக்குங்
கோடுறவரைகுணக்குங் குடக்குமாய்த்திசைத்துநிற்பக்
கூடுதல்பிரிதலின்றிக் குறைமதிதலைச்சேர்ந்தின்பந்
தாடருகதிரைச்சென்னி தரிப்பதக்குன்றமாதோ. (௯)

பொன்னிற்குன் † றெழுவாயாகப் பொருப்பளவிறந்துநிற்பச்
சென்னிக்கட்டவழ்வெண்டிங்கட் சிலாதரன்குழவிவெற்புத்
தன்னைக்கண்டவரையென்னோர் தலைமிசையேற்றமென்னென்
றின்னற்கட்படிந்தன்றோவவ் விறைமலைவிளர்த்ததம்மா. (௧௦)

பரசிவலிங்கமொன்று பருப்பதம்போற்றரிப்பத்
துரிசறவடைந்தேனில்லை யென்னுமச்சோகத்தீயா
லுருகுறுமமையத்தோடி யொருமலைகுழைத்தானன்றிக்
குருகமர்தளிரியற்குக் குழைந்தவன்குழைக்குமோதான். (௧௧)

பொருப்பிறைமகளுனெற்குப் பொருந்துறுநீசனுமம்
நெருப்பனையான்சார்ந்தாங்கு நிகழ்தொடர்மொழியினன்றிப்
பருப்பதமெனவேகூறப் படுமிதுவென்னுநாளுல்
திரைப்பொலிகடலிற்சென்று வீழ்ந்ததுசிலம்பொன்றம்மா. (௧௨)

தன்னையோர்கையால்வீழப் பிலத்திடைத்தள்ளிவந்தோன்
சென்னியால்வணங்கியேத்துஞ் சிலம்பினைவிந்தமொக்கும்
என்னலாமென்னலாமோ வினையறுபருப்பதத்தைப்
பின்னுவார்திரையிலிட்டுப் பெயர்த்தபுன்மத்தோவொக்கும். (௧௩)

---

† எழுவாயாக - முதலாக.

நகைமதிப்பிள்ளைபோல நரைத்தகூன்கிழவன்சென்றோர்
முகைமலர்ச்சுனையின்மூழ்கி முருகுகொப்புளிக்குந்தோட்டுப்
பகைமலர்க்குழன்மடந்தை பகர்ந்தவோராணைகாத்து
மகிழ்மனத்தன்பனைபோல் வந்துமேலெழுவனன்றே. (கச)

சினைமலர்புதன்மென்போது செழும்புனற்பசுந்தாட்செந்தே
னனைமலர்தமதுதண்பூ நண்ணிநீர்க்கொடிகள்குண்டு
சுனைமலர்விழிகள்போலத் தோன்றுமப்பாரைகுன்றிற்
புனைமலர்பலவுங்காட்டும் புரிகுழன்மகளிர்போலும். (கரு)

தூங்கிசையருவிபாயத் தொளைக்கைவெண்கோட்டிறக்கா
லீர்ங்கவுணெடுநல்யானை யேற்பவெந்தழலலாமற்
றேங்குதண்புனன்மேனோக்கா தென்பதந்திரமொன்று
பூங்கதிர்பனிவெண்டிங்கள் போன்மெனத்திவலைசெய்யும். (கசா)

விஞ்சையருளர்நரம்பின் வீணையாழெழுவின்றோசை
குஞ்சரமனையவென்றிக் குன்றவர்புனத்திலென்றுந்
தஞ்செவிமடுத்துக்கேட்பார் தனிநிலையாகமுற்று
ரஞ்செவிநிறையவுள்ளே யரியயாழோசைகேட்பார். (கஎ)

பீடுறுகருவிதோறு பெயரியவில்லினும்ப
ரோடுறுபசும்பொனுற்றெய் தோங்குதுறுசிகரமொன்று
நீடுறுசிலாதரன்ற னெடுந்தவப்பிள்ளைக்குன்றின்
மோடுறுமுடியின்மீது கவிழ்த்தபொன்முடியையொக்கும். (கஅ)

செங்கதிரவனெழுந்த திவாவிடைக்குடம்பைநெற்றிப்
† பொங்கொளிமரத்திற்சேர்சால் புள்ளினம்பொறையுயிர்த்துக்
கங்குலினடைகிடப்பக் கருதிவந்ததனைக்கண்டு
வெங்கனல்கொளுந்திற்றென்று பீலிசைசுழன்றிரங்கும். (ககூ)

நறுமலர்க்குழன்வெண்முத்த நகைமலைமடந்தைமிக்க
அறம்வளர்ப்பதற்குநெற்சிற் றளவிருநாழியென்று
கறைகிடற்றிறையளப்ப வொருபெருங்கருவிதானிய
வெறிமலர்க்குடிமிக்குன்றின் வேய்களுளொன்றிற்பெற்றாள். (உ0)

நெடியவன்குறுகியப்பா னின்றுகைதொழுமவ்வெற்பின்
மடியுடையொருவன்விற்கும் விறகினைக்குறித்துச்சென்று

---

† பொங்கொளிமரம் - சோதிவிருக்ஷம்.

மதலையாகியநற்குணஞ்சார்ந்துநல்வாய்மை
சிதைவிலாவடியாரினஞ்சேர்ந்திடாதவன்கண்
ணுதலினுனையுஞ்சேர்ந்திடானென்பவெந்நூலு
முதலிலான்பெறுமூதியம்யாதுகொன்மொழியில். (௨௯)

ஒருவிருந்தினர்க்குரைசெயுமுகமனோடொப்பக்
குருபரன்றனக்கினையனவின்மொழிகூறி
வருபெருந்தகையார்கொனீயுரையெனவாழ்த்தி
யருளினங்கடனைவினவுநின்றனனன்றே. (௩௦)

செறிந்தமூலவாங்காரத்தின்வேறெனத்தீர்ந்திட்
டிறந்திடாதுதற்கண்டவனென்னையுங்காண்பான்
மறிந்துபோமுடன்மானியையுரைப்பதென்மதித்தென்
றறிந்தஞானிகள்வேறறவறிபவனறைந்தான். (௩௧)

ஆகிநாதனதருளினாற்குளிகையாதிகளான்
மேதையாமுடல்சித்திபெற்றவனென்றும்விளியா
தூலாலதுபெருதவனழியுமென்றறைந்தான்
பூதமேனியேதானெனப்பொருந்துபுந்தியினன். (௩௨)

உடம்புவாழ்தரூன்வாழ்தலுமூன்பொதிந்தியற்று
முடம்புசாதரூன்சாதலுமாகவேயுரைத்தா
யுடம்புதானுயிரென்னநீயுன்னினைபோலு
முடம்புவேறறியாவுலகாயுதனொத்து. (௩௩)

யாக்கைதானெனிலென்னதுடம்பென்பதிங்கென்னை
போக்குமாடைபொன்முதலியபொருளுளொன்றெனதென்
றூக்குவார்திலதனையானென்பவரைய
பார்க்கில்யாருளர்பகர்தியென்றல்லமன்பகர. (௩௪)

யானினைந்தனனேனனென்றியம்புதலாற்
றூனெனப்படுகின்றதேதெனக்கதுதன்னை
நீநிகழ்த்துகவென்றுகோரக்கனின்றியம்ப
ஞானநற்குருபரனிதுநவின்றனனயந்து. (௩௫)

நானினைந்தனனெனல்காரணத்தினைநண்ணு
மானதன்மையாலுடல்பொறிகரணங்களனைத்து
நானெனும்படிவரும்வரத்தான்பலவதனு
ணீநவின்ற † தத்தியாசமென்றறிகெனநிகழ்த்த. (௩௬)

---

† அத்தியாசம் - கற்பனை.

ஒழியுமென்னுயிரெனுமிடத்தவ்வுயிரொழிய
மொழியவேறுமோருயிருளதோவிதைமொழிநீ
பழியினல்லருட்குன்றமேயென்றவன்பகரச
செழியமென்மலர்ப்பதத்தெமையாள்பவன்செப்பும். (கஎ)

உயிரெனும்பெயரியங்கு ‡ காற்கியற்பெயருரைப்பி
னயலுறுந்தனக்கப்பெயராருபேராமென்
றியலுணர்ந்தவரியம்புவரென்றெமக்கிறைவன்
மயலறும்படியுணர்த்திப்பின்றுரைத்தனன்மன்னோ. (கஅ)

தன்னைச்சச்சிதானந்தமென்றருமறைசாற்ற
மின்னிற்கெட்டிடுந்தனைச்சிணமென்புதோன்மெய்ந்த
வின்னற்பொய்க்குடிலாகியவுடம்பினையானென்
றுன்னிக்கெட்டனையென்கொலோவென்றினும்பம்பும். (கக)

வெருவுறப்படும்பிறவியையொழிந்துமெய்வீடு
மறுவுதற்குளம்வைத்தவனிம்மலவடிவைத்
தெருவினிற்புனிதம்படாவொன்றனைத்தீண்டி
யருவருப்பவன்போலருவருத்ததையகற்றும். (௪0)

மருந்துகொண்டுநோய்தீர்ப்பவர்போற்சிவமருவி
யிருந்தவிவ்வுடம்பினைப்பெரியவர்விடவெண்ண
மருந்துகொண்டுநோயோடுறமதிப்பவன்போல
விருந்தயிவ்வுடம்போடுறவெண்ணினையென்னே. (௪க)

பிறந்தவாகமொன்றிறந்திடாப்பெருமையுமுடைத்தோ
வெறிந்தவான்சிலைவீழ்ந்திடாதிருப்பதிங்கில்லை
செறிந்தகாரியமென்பதென்றுயினுஞ்சிதையு
மிறந்திடாதுகாரணமெனப்படுமதேயென்றும். (௪உ)

† மருந்தினுலுடனித்தமாமென்றநீவருத்த
திருந்துவாழுநாட்பன்மைகொண்டன்றிவேறில்லை
பொருந்திவுடலழிந்திடாதென்பதுபொருந்தா
தருந்தவாவினிவீடுவேண்டென்றனனையன். (௪௩)

ஏதுசொல்லினுமென்னுடலழிவுறுதென்றும்
வாதுசெய்வதென்காட்சியாலுணர்த்துவன்வலியின்

‡ கால் - பிராணவாயு.
† மருந்து - காயசித்திக்குரிய மருந்து.

ருதிரதனதருவினுமெலன்றுகோரக்கன்
றீதிலாவருள்வாரியோடுரைத்திதுசெய்யும். (சச)

இன்னியங்களின்முழங்குவெள்ளருவி * வெற்பெறிந்த
மன்னவன்படையன்னதோரொளிரயில்வாய்வா
டன்னைவெம்பிரான்கைக்கொடுத்தனையனென்றன்னை
நின்னிரும்புயவலியினுமெலறிகெனநிகழ்த்தி. (சரு)

அத்தவீசசிறகன்னதோர்தோலறுமேனுந்
சித்தனுனைமலனென்றுமுன்னின்றனன்செருக்கி
நித்தன்யாவினுங்கருதியதேசெய்துநெஞ்சின்
வைத்தமாதருக்கொழிப்பலென்றருளுளம்வலித்தான். (சசா)

வாங்குவாளினையின்னனவிதிர்த்தருண்மாரி
யோங்கிவானுருமேறெனவதிர்த்தவனுடம்பிற்
றூங்கமால்வரைமீதெறிந்தானெனத்தாக்க
வாங்கொரோசைகிண்ணெனன்றுமேலெழுந்ததையன்றே. (சஎ)

திருப்பருப்பதநடுங்கியதவ்விரற்சீற்றத்
தரக்கனுற்றிதுதனையுமின்றெறிந்தனனுமென்
றுரைப்பதற்கரிதாகியவசைமுற்றேறுடிப்
பொருப்பிறைக்கொருமகளரன்புயங்கள்புல்லினளால். (சஅ)

விஞ்சைமாதர்தம்யாழொலிகேட்டமாவேட
ரஞ்சிலோதியர் ‡ பதலைகேட்டயரசுணம்போ
னெஞ்சுமாழ்கினர்புள்ளினமெழுந்தகானி[illegible]த்
துஞ்சுமாவெழுந்தோடினவான்றுளிது[illegible]த்த. (சகூ)

இன்னவாறொலியெழவுடலூறின்றியிருப்ப
முன்னமேமலியசெருக்கினும்மடங்கெய்தி
யென்னைசேர்பவரிலையெனவவனுளத்தெண்ணித்
தன்னையேயனிவியந்தமையறிந்தனன்றலைவன். (ருo)

ஒலியெழுந்திடவின்னணமினதுபேருடம்பு
வலியடைந்தநின்னெப்பவரிலைவளிவழங்கு
முலகிலென்றுகைகுலைத்திளநகைபுரிந்தொருகைம்
மலர்பொருந்துவாளவன்கையிற்கொடுத்திதுவகுத்தான். (ருக)

---

* வெற்பெறிந்த மன்னவன் - தேவேந்திரன்.
‡ பதலை - இனியமொழி.

வாங்கும்வாசிஞானின்கலியொடு நமர்கலியுந்
தாங்கியென்னைநீயெறிந்துகாணென்றானந்தலையு
ளோங்குகின்றனன்சித்தனுமஞ்சிலனாகி
யோங்கிவாசிஞானெறிந்தனனொப்பிலானுருவை. (௫௨)

அணுமயங்குகின்னுழைக்கதிரெறிந்தவாளாக
வினைமயங்குமெய்ப்படாதுவாள்வறிதுபோயிற்றப்
பணைமயங்குதோண்மாயைதன்படாமூலபடாத
மணமயங்குதண்சோதிமேல்வாள்படவற்றே. (௫௩)

வேறு.

வாளெறிந்துழையினைத்த கோரக்கனுந் திகை மனம்வியந்து, ஈனிறைஞ்சும்பாதஞ்சடமீ யிடவென்றுமெய்விசிர்ப்ப நடுநடுங்கித், தானடைந்தசெருக்கொழிந்து தலையன்பினெறிபடப்பத் தலைப்பட்டு டொருகோன், றேனடைந்தசெழு கமலத்திருவடியிற்றந்தெழுந்து செப்புகின்றான். (௫௪)

நின்னையறியாதுமது முண்டவன்போன் மனஞ்செருக்கிநின்றேனந்த பாவம், பின்னரெதிர்நின்றினைதுணையமறந்துப் பத்தனெனப்பற்றாத் தக்கோமை, யின்றுயிர்கொன்றடல்கருமறவன்போற் செய்தபிழை யெல்லாமெந்தாய், மன்னிபின்பேருளாற்றீர்த்தெனையாட்கோடி யெனமறித்துத்தாழ்ந்தான். (௫௫)

செய்தபிழைபோகவினிப் பிழைசெய்யாதுடம்புநகை தீர்த்து நின்றான், மெய்ந்நெறியினைகருநீயினியனெனப் பெருமருளை வெள்ளமூற, வுய்தலிலென்பிழைபொறுத்திட் டடித்தரியவானை முதமூட்டுகின்றாய், கைதருசெம்மணியனையாயான்செய்வது யாது கைம்மாறென்று. (௫௬)

முற்றமருள்செய்துநீயானறியவேண்டுபொருண்மொழிதியென்று
பற்றுடலாசைதீர்த்துகோரக்கனிற்பவவன்பருவங்கண்டு
கற்றறியுமறிவினாலறியவரியபரஞ்சோதிகருணைகொள்ளப் [ன்.
பெற்றதிருவுளமகிழ்வுற் றன்பொடுகேண்மதியென்னப் பேசலுற்றா

இருந்தபடிகுகேசனைநீயறிவையெனி னின்பிறவியெனுநோய் தீர்ந்து, பொருந்துறுவைபேரின்பமென்றமலன் கூறவவன்போற்றி யெந்தாய், பரிந்தருள்செய்குகேசனெனு மொழிப்பொருளேதது கூறப்படுவான்யாவன், றெரிந்துணரவருள்செய்வாயென்றுதொழவெம் பெருமான்செப்புகின்றான். (௫௮)

குகையிதயமதன்கணம ரிறையீசனென்று பொருள்குறித்துக் கொண்மோ, நிகழனையகுகேசமொழியுடையன் யான்றானெனவே நிமலன்கூற, வகமகிழமுகமலர்ந்து சித்தனறைகுவனீயேயாகிலுன் றன், முகையவிழ்மென்மலர்க்கரத்திற்சிவலிங்கங் கொண்டதென் கொன்மொழிதியென்றான். (௫௯)

* பிறந்தபயன்பெறவுலகரெனைக்கண்டு கொண்டுமனம்பிறழ்த லின்றிச், சிறந்தசிவலிங்கமலர்க்கரங்கொண்டு பூசனையாஞ்செய்ய வேண்டி, நிறைந்தவெனதுருவாகுமிக்குறிகைக் கொண்டனன்யா னீங்காதென்று, மறிந்துதெளிகுதிமனமென்றருள்செய்தெங் குரு தேவனறையலுற்றான். (௬௰)

போதகனாகியகுரவனெஞ்ஞான்றுநற்கருமம்புரிகவென்று
வேதமுதலாகியநூன்முழுதுமொருங் † கொருவந்தம்விதித்தலாலே
சாதகனாகியபருவமாணாக்கன்பாசவலிதணிக்கவல்லான்
மேதினிமேலுடலொடுநற்செயல்விடுவதன்றியிடைவிடலாகாதால்.

என்றுதனதியலுணர்த்தியுடம்புநா னென்றிருந்தவியல்போல, நின்றவெனையுணர்ந்துநீ ‡ சோகம்பாவனை கொண்டுநிற்பையாயிற், பொன்றலுறுவிடங்கலுழன்றனை நினைப்பப்போதல்போற்போமவிச் சை,நன்றறிதியெனவறிவித்தனனெங்கோன்கோரக்கனுதன்றன்னை.

ஞானகுருபரனருளாற்றனக்குரைத்த மொழிப்பொருளைநன்ற றிந்திட், டீனவடிவென்பதுவிட்டுண்மையலா வனைத்தையுநீத்துண் மைகண்டு, தானதனையடைந்துதானதுவென்னு மருளகன்றுதானே யாகி, வானவருமறிவரிய பெரும்புகழ்கோரக்கனவண் மன்னினா னல். (௬௧)

பத்தொன்பதாவது

கோரக்கர்கதி

முற்றிற்று.

---

கதி - ௧௯ - இ திருவிருத்தங்கள் - ௯௪௭.

---

* பிறந்தபயன் பெறுதலாவது - தானலதைத்தவிர்தல்.

† ஒருவந்தம் - தனித்திருத்தல்.

‡ சோகம், சோ - அவனே. அகம் - நான்.

௨

## இருபதாவது

# முனிவர் கதி.



### வேறு.

பனிவரைமகளொடு பவளவார்சடைத்
தனிவரையமர்திருச சயிலநீங்கியே
துனிவரையல்லமன் சுருதிமெய்ப்பொருண்
முனிவரையுணர்த்திய முறைமைகூறுவாம். (க)

அருந்தவமுயன்றகோ ரக்கறக்கம்முறை
விரிந்தறிவுருவமா மெய்ம்மைத்தன்மையைப்
பரிந்தருளமலனப் பாலுமுதத்தரம்
பொருந்துாதமக்கருள் புரியப்போயினான். (உ)

நல்லனதீயன நாடுறுதுகொள்
வல்லழலெனவருண் மழையெனப்படு
மல்லமனைதிர்ந்தவ ரறமுளாரற
மில்லவரெனுதறி வியற்றினரோ. (௩)

யாவருந்தனதருட் கேற்றுளாரெனப்
பாவவன்றளையறப் பரிந்துநன்னெறி
மேவவந்தருள்புரி விமலனையிடை
மாவழங்குறுமொரு வனதிற்போயினான். (௪)

அக்கொடுவனத்தெதி ரன்பென்கின்றதுட்
புக்கறிகிலாவொரு † புளினன்கூன்புறக்
கொக்கெனநாடொறுங் கொலைகுறித்தவன்
கைக்கொடுமரமொடு கடிதுதோன்றினான். (௫)

அன்பனைக்கண்ணிடந் தப்பும்வேடனுக்
கின்பமீகுதல்புகழ்க் கேற்றதன்றுநான்

---

† புளினன் - வேடன்.

வன்பனுய்த்திரியுமிம் மறவற்காப்பலென்
றென்பொலாநெறிமன மிரங்கிற்றென்றனன். (௬)

நல்லறிவவனுள நடுதற்கொப்பிலா
வல்லமன்வினையற வருட்கண்வைத்தனன்
கொல்லையின்விதையிடக் கொழுப்புக்காமுனி
புல்லெரிவுறவழற் போகட்டென்னவே. (எ)

மேவுதீவினையெலாம் விளிந்துதூயனுய்ப்
பாவியேனுய்வகை பகர்தியென்றனன்
மாவலால்வழுவகுரு வனத்தில்வேட்டுவன்
யாவர்தாமிறையரு ளெய்தினுய்ந்திடார். (அ)

அறிவெனும்வேலினு லைம்புலன்களா
மறியினமருளெனும் வலையைத்தப்புறு
தெறிகுவையெனினுனக் கில்லைதுன்பெனு
நெறியினைவழுவற நிமலன்கூறினுன். (௯)

அறிவொடுமனஞ்சிலை யம்பதாகநான்
குறியெனவெய்யையேற் குமரநின்றனைப்
பொறிமதிலிலங்கைமுன் புரந்துளான்றலை
பறிபடவெய்தவன் பணியுமென்றுமே. (க0)

இப்பரிசெறும்வலி யெயினனுய்வகை
செப்பிநன்னிலையருள் செய்திருத்தியே
யப்புறமருளுடை யமலன்போம்பொழு
தொப்பறுதவவன மொன்றுதோன்றிற்றே (கக)

கோடமைகரிகளுங் கொடுமடங்கலும்
பாடமைபகைதவிர் பரிசினுனதற்
காடரவொடுமதி யமர்பிரான்சடைக்
காடலதுவமையாங் கண்டதில்லையே. (கஉ)

பெயர்க்குறுகால்கள்கை யாகப்பெற்றவு
முயிர்க்குறுநாசிகை யாகவுள்ளவு
மயக்கறுதீயினை வளர்த்துவான்புனல்
பயக்குறுமுனிவரர் பணிகள்செய்யுமால். (கங)

மறைபலவோதுநர் மகம்வளர்க்குநர்
கறைமிடறுடையநங் கடவுட்பூசனை
முறைவழிபுரிகுநர் மூசசவித்தொரு
தரியனவசைவற விருக்குந்தன்மையார். (கச)

வேறு.

ஆயிருக்கு மருந்தவர்தங்கள்பாற்
போயிவர்க்குறு போதனையாற்பவ
நோயகற்றுவ லெனறு,நுவன்றனன்
றூயெனக்கொரு தானெனுமல்லமன். (கரு)

நோற்றுநோன்புட னெருந்துவருந்துவீ
ராற்றுநீர்மக மாதிவினையிஞன்
மாற்றுமாயை மலஞ்செறுவிற்படு
சேற்றிஞற்கழுந் சேறுநிகர்க்குமால். (கசா)

ஞானங்கொண்டு நணுகுஞ்சிவபத
மூனங்கொண்ட கருமத்துறுவது
வானங்கொண்டு வளர்த்தல்புகைய,நு
மானங்கொண்டு வளர்த்தலையொக்குமால். (கஎ)

குடுமியங்கிரி யொப்பக்குவித்தபுற்
சுடுதல்கொண்டு பிறவிசுடப்படா
தடுபுலன்க ளறிவெனுமங்கியிற்
சுடுதல்கொண்டு பிறவிசுடப்படும். (கஅ)

போதமாகும் புனிதத்தழலினுட்
பேதபாவனைப் பேரவிபெய்வனே
லாதிசோவுடை மாசியவனென
வேதம்யாவும் விளங்கவிளம்புமே. (கக)

மறையினுள்ள கருமமனவினை
வரியர்கொள்ளுதல் போலமதியறுஞ்
சிறியர்கொள்வர் தெளிதத்துவமசி
யறிஞர்கொள்வ ரணிகொளுஞ்செல்வர்போல். (உ0)

என்றுகூற விருந்தவரன்பொடு
நின்றுஞான நெடிர்தகைதாண்மிசை

யின்றுநீவர வெத்தவஞ்செய்தன
மன்றயாமென வாழ்த்திவணங்கினர். (உக)

மாயைதோன்றிய ஞான்றுமனத்தெழு
மூயமோக முடிந்திடசெம்மலர்
வாயினூற்றரு வாசன்சொலப்படுந்
தாயனுமிவ னென்றுதுதித்தனர். (உஉ)

இன்னவாறிங் கிருந்தவரின்புற
மன்னுஞான மறைமொழிகூறியே
தன்னைமேவுந் தலைமைபுரிந்தன
னன்னைபோலுநம் மல்லமதேவனே. (உ௩)

இருபதாவது

முனிவரர்கதி

முற்றிற்று.

---

கதி - உ0 - இ திருவிருத்தங்கள் - ௬௭0.

உ

## இருபத்தோராவது

# சூனியசிங்காதனகதி.



### வேறு.

அல்லமனையறிதற்கோரறிகருவியாகவுனிச
சொல்லரிய † வெழுநிலைப்பொற்சூனியசிங்காதனமொன்
றில்லையெனவில்லையெனுமெங்கள்குருவசவேசன்
மல்லலுறவினிதாற்றிவைகுமுறைவகுத்துரைப்பாம். (௧)

ஒடுக்குமனம்வீட்டுநெறிக்கொருதுணையாகும்புறத்து
நடக்குமனநிரயவழிநடப்பதற்குத்துணையாமென்
றடக்கர்மனமடக்கும்வகையெம்பிரானியம்பியவா
றடக்கமனமுறுநெறியினருணந்திதலைப்பட்டான். (௨)

நில்லாதுபோமனத்தைக்கால்பிடித்துநிறுத்தியே
வில்லாரு ‡ மதியமுதம்விருந்திட்டுநட்புறீஇப்
பொல்லாதபுலனுகரப்புறத்துநிலைதமொறிச
செல்லாமலுடன்கொண்டுசித்திரமொத்திருந்தனனால். (௩)

நின்றமனங்கொண்டுதானித்தமாந்தனையுணர்த்த
வென்றுவருஞானகுருவெனவெழுந்துவளர்காத
லொன்றுமொழிவறநிற்பவுவப்பதுலகிற்பொருள்வே
றின்றியருணந்திபிரானெந்தைவரவினைநோக்கி. (௪)

எவ்வுருவினொடுவருமோவெம்பிரான்றெளியகிலேன்
செவ்வியவோர்தவிசமைத்துச்சேர்ந்ததன்மேலிருப்பவனை
யவ்வியமிலல்லமனென்றறிவன்யானென்றுதுணிந்
திவ்வுலகமுளம்வியப்பவிதுசெய்தானருணந்தி. (௫)

---

† எழுநிலையாவது - சுபேச்சை முதலியன.

‡ இங்கு மதி என்றதை - குண்டலிசத்தியென்னும் பூர்ணசந்திரனை.

## வேறு.

ஆதியாதாரமாதி யடுக்கெனப்பன்னிறத்த
சோதி * யேழ்நிலைகளோங்கச் சூனியபீடமொன்று
போதினுளம்வியப்பப் பொன்மணிபளிங்குகொண்டு
சாதிநான்மறைகள்போற்றுஞ் சைவநாயகன்செய்வித்தான். (சு)

† காரணவுபாதியேழ்மேற் கண்டிடுஞானிபோலச்
சீரணிநுதலின்மீது சென்றுகாண்யோகிபோலப்
பூரணஞானநந்தப் போதகனிருப்புகாண்பா
னேரணிநிலைகளேழ்மே னிகழ்வெய்த்தவிசமைத்தான். (எ)

களங்கமின்மதியம்போலக் கண்டவர்மனமலர்த்தும்
பளிங்குசெய்நிலையுள்வந்து பார்ப்பவர்மெய்ந்நிழற்போய்
விளங்குதறன்மேற்றோன்ற வெந்தெரிபசும்பொனாற்செய்
துளங்கொணிலையைசென்னி சுமத்தல்போற்செய்தவொக்கும். ()

திருந்தியபளிங்குகொண்டு செய்தவந்நிலையின்வாய்தல்
பொருந்துதறெரிகிலாராய்ப் புகுந்துகாண்மனிதரெல்லாம்
கரங்கொடுதடவிக்கண்டு கண்டெரியார்கள்போல
வருந்தியமனமகிழ்ந்து வசவனைவியப்பரன்றே. (கூ)

நினைவினுலொருவன்செய்த நெஞ்சுளாலயமேயன்றி
வினையினாலுலகர்செய்து விளங்கியபணிகடம்மு
ளினையதோடுவமையாத வில்லையென்றும்பரெல்லாந்
தனையலாநிகரிலாத தவிசினைவியந்துநின்றார். (க0)

அம்பராசனமியன்ற வதிசயங்களாமுக்கட்
டம்பிரானடியராகத் தரையுளாரெல்லாஞ்சென்று
செம்பொனாலியன்றவந்தச் சீர்கெழுபீடநோக்கி
யெம்பிரான்வசவதேவ னிணையடிதொழுதிருந்தார். (கக)

கரையிதுகல்விக்கென்னக் கற்றவர்பலருமேத்தத்
தரையிசையமைத்திருந்த சாரதாபீடமேபோ

---

* எழ்நிலைகளாவன:—மூலாதாரமுதல் சோதியிறுவாக்கிடந்தவைகள்.

† காரணவுபாதியேழாவன:—ஈசன், முற்றறிவான், வியாபி, எவைக்குமேலு, மாகாசகன், நிருபாதி, பாவனை என்பன.

லுரைமனமிறந்ததாமிவ் வொருதனிஞானபீட
மருடருகுருகுகேச னன்றியேறிடுதற்காமோ. (௧௨)

இப்பெரும்பீடமேறி யிருந்திடவல்லோனென்றும்
வைப்பெனும்படிமறைந்தெம் மனத்திருப்பதற்குவல்ல
வப்பெருங்கருணைக்குன்ற மாகுமல்லமனேயென்று
செப்புறுபரிசிலாரும்ச் சிந்தைசெய்திருந்தானந்தி. (௧௩)

கரைபொருகங்கையாற்றிற் கண்ணிவைத்தரசவன்னம
வருதலைநோக்கிநிற்கும் வாறுபோலிருள்விழுங்கிப்
பெருகொளிவிரிக்குஞான பீடமொன்றமையவாக்கிக்
குருபரன்வரவுநோக்கிக் கொண்டிருந்தனனெங்கோமான். (௧௪)

எட்டினைப்புதுநீராற்றி லெதிர்கிழித்தேறவிட்டோன்
பாட்டுடைத்தலைவனன்பர் பலருநம்வசவன்றன்னை
நாட்டமுற்றடையுமாசா னமக்குமாமென்றிருந்தார்
வீட்டினுக்கேற்றுஞ்சோதி விருந்திற்குமுதவுரூதோ. (௧௫)

இருபத்தோராவது

சூனியசிங்காதனகதி

முற்றிற்று.

---

கதி - ௨௧ - இ திருவிருத்தங்கள் - ௬௮௫.

இருபத்திரண்டாவது

# சூனியசிங்காதனத்திலிருந்தகதி.

வேறு.

பள்ளம்புகுபுனல்போனெறிபடருஞ்சிவனடியர்
ருள்ளம்புகுமருணந்தியிவ்வுலகோரறியாமற்
கள்ளங்கொளுமனமோடுசெய்யணைமேலொருகருணை
வெள்ளங்கடிதேறுஞ்செயல்விருப்பாலெடுத்துரைப்பாம். (௧)

சிரானுடுறுகயலாடல்செய்செய்ந்நாடுடையுழவ
ரானுடுறுமொருகாவிரியானுடுறுமுறைபோற்
பானுடுறுமடியார்வினைபரியத்திரிகுரவன்
வானுடுறுமுறுகும்பரவசவன்புறுவசவன். (௨)

பொன்னுண்மைகதிர்வீசணைபுரிந்தீரறுபருவம்
பின்னுயினயான்செய்தொழில்பிள்ளைத்தொழிலாயிற்
றெந்நாள்வருமெனையானுடையெம்மானறியேனென்
றுன்னுவருதுயரோடுளமுளைந்தான்வினைகளைந்தான். (௩)

இவ்வாறமர்நாளோர்பகலெலமையானுடைவசவன்
செவ்வாறுசென்மனத்தல்லமதேவன்வரரேன்றிற்
றவ்வாறதுநிகழ்வுற்றவனூர்வந்தனையொருநா
ளெவ்வாறுரைசெய்வன்பணியிறையுஞ்சொலவரிதால். (௪)

வலமாடினவிழிதோளருள்வசவற்கதிதூரஞ்
செலுமாடவன்வருநாள்விழியிடமாடியசெயல்வாய்
குலமாதுளமெனவேமகிழ்கொண்டன்புநிறைந்து
மலமாயைகடரக்குஞ்சென்னவசவற்கிதுபுகல்வான். (௫)

வேறு.

நற்குறிபலவுமிற்றை நாணிகழ்கின்றவென்பால்
* வற்கலைமுனிவர்போற்றும் வசவவந்நிகழ்ச்சியானும்

---

* வற்கலை - மரவுரி.

பிற்பெறுபயன் யாதென்று பெருந்தகைவினவநின்ற
சிற்பரமுணர்ந்தசென்ன வசவதேசிகனுரைப்பான். (௬)

ஐயவிந்நிமித்தந்தன்னா லல்லமற்காண்பையின்று
மெய்யுரையிதுகாணென்னா விடுத்தனன் மருகனெங்கள்
கையுறுமமுதனன்றான் கருதியபடிவிண்ணப்பஞ்
செய்யவுண்மகிழ்வுபூத்துச செயல்செய்வார்க்குரைக்கலுற்றான். (௭)

உடம்பெனும்வனத்தினின்ற வுயிரெனுங்கன்னிதன்னைத்
தொடர்ந்திசைமணத்தாற்சேர்ந்த துணைவனல்லமனின்றெய்து
மடைந்தருள்கல்யாணத்தை யணிபெனன்றெந்தைகூற
நடந்தனர்நன்றென்றன்னோர் நகரியோர்க்குணர்த்தினரால். (௮)

அலர்கதிர்ஞாயிறாரு மணிநெடுந்தேர்க்கொடிஞ்சி
விலகுறவதிற்றாக்காமன் மேலளவொருசாணிறப்பப்
பலர்புகழ்மணிமாடத்துப் பறக்குமொண்கிளியொழுங்கி
விலைசெருகியபசும்பூந் தோரண நிசையவார்த்தார். (௯)

போதகக்குருநம்மூருட் புகக்கொடிகட்டனன்றென்
றாதரவொடுமைசைத்தா ரவிர்கொடிமாடத்தும்பர்
சோதிதன்னிரதமென்றுஞ் சுழன்மெனநகுதல்போல
வீதியுளாடியோடு விளங்குறுநிலைத்தேர்செய்தார். (௧௦)

குங்குமநறியசந்தங் குழைத்ததண்பனிநீர்சிந்திப்
பொங்கெழின்மறுகனைத்தும் புதைசெழுஞ்சேறுசெய்தார்
மஙகலமனைமுன்பந்தர் மணப்பந்தருண்மையாகக்
கொங்கவிழ்தழ்நறும்பூங் கோதைகடேக்கினரால். (௧௧)

வயலிடஞ்சேர்ந்துநின்ற வாழையுங்கரும்பும்பாளை
யுயரிளங்கமுகுமொன்றோ டொன்றுநின்றசாவித்தாமெல்
லியராருந்தொடைதோள்கண்ட மெனுமுறப்பழகிரக்குஞ்
செயலில்வந்தடைந்தவென்னச செழுங்கடைத்தலைமுனார்த்தார். ()

இலையினற்பொலிந்தவாழை தொடையினலெய்தும்பேறு
முலையினற்பெறுவமென்று முன்னிவந்திருத்தல்போலக்
கலையினற்சிறந்தவல்குற் கயற்கணார்நிறைகுடங்கள்
விலையினற்சிறந்தசெம்பொன் வேதிகைமீதுவைத்தார். (௧௩)

மனத்திருளகற்றுநின்ற மணிச்சுடர்வரவுபார்ப்ப
நினைத்துவந்திருத்தல்போல நெடுமணிக்கதவுவாய்தன்

முனைத்திருவிளக்குவைத்தார் முகிழ்முலைக்கருநெடுங்கட்
டனிச்சிலைநுதற்பூங்கோதைச் சரிகுழற்றளிர்க்கைநல்லார். (கச)

அல்லமகுரவன்றன்னை யருணந்தியோடுகாணச்
செல்லுவமென்றுசெம்பொற் சீர்கெழுவிமானத்தோடு
மொல்லையினிலத்திழிந்த வும்பர்வாழ்மகளிர்போல
வில்லெனுமருங்குன்மாத ரிருந்தனர்நிலைத்தேரேறி. (கரு)

திருநகரிதனையின்று திருந்தவேறலங்கரிப்ப
நெருநலுள்ளனகழித்து நீத்தவையமரர்கோமா
னொருநகரலங்கரித்தற் குறியனவென்னினந்தி
பெருநகரணியின்மிக்க பெருமையார்கூறவல்லார். (கசு)

இன்னணமலங்கரித்த வெழின்மணிமறுகினூடு
மன்னவர்மன்னனுய்ய மந்திரிக்கிழமைபூண்டோன்
றன்னொருகுரவன்றன்னைத் தானெதிர்கொள்ளவேண்டிப்
பொன்னவிர்கோயினின்றும் புறப்படாப்போதலுற்றான். (கஎ)

பதியுமப்பதியாற்காணும் பசுவுமப்பசுவின்ஞானம்
பொதியு ‡ மைம்பாசந்தானும் பொருளெனவழக்கிற்கூறும்
விதியுமப்பாசம்பொய்யாய் வேறறும்வீடுமோதி
மதிமயக்கறுத்தசென்ன வசவனுமருங்குசென்றான். (கஅ)

எம்மடிமாசுமுக்க ணிறையவனடிமைபூண்டோர்
தம்மடிமாசுநீக்குந் தன்றொழிலெறிவழாத
செம்மடிவாலமாச்ச தேவனுமன்புதாயின்
மும்மடியாகுநந்தி முதல்வனோடருகுசென்றான். (கக)

சங்கரன்சடையிற்பாம்புந் தவழ்ந்தெதிர்கிடந்தபிள்ளைத்
திங்களுஞ்செய்தவொப்பச் செங்கைமானவசமாகக்
கங்கையுந்திரையடங்கக் கானமுன்பாடியீச
கிங்கரன்றனதுபாங்கர் கின்னரப்பிரமன்சென்றான். (உ0)

தண்டினர்கரகக்கையர் சடையருத்தூளனத்தர்
* புண்டரநுதலர்கற்றோய் பூந்துகிலுடையர்நீல

---

‡ ஐம்பாசமாவன:— ஆணவம், கன்மம், மாயை, வைந்தவம், திரோதசத்தி. வேறுவிதமாகக் கூறுவாருமுளர். அவையாவன:— தமம், மாயை, மோகம், அவித்தை, பொய்யுருவி என்பன.

* புண்டரம் - விபூதியால் மூன்றுகீற்றாக நெற்றியிலணிவது.

கண்டனையகம்புறத்துங் கண்டவர்வினையினீங்கித்
தொண்டுறுநெறியினின்றோர் சூழ்ந்தனரெண்ணிலாரே. (உக)

தோள்வலந்துடித்ததின்று சுடரிலைவேற்புணென்று
கோள்வலங்கொள்ளுஞ்செம்பொற் குன்றெனுமார்பிற்காணேம்
வேள்வலங்கொண்டநெற்றி விழியிறையருளாலென்னும்
வாள்வலங்கொண்டசேனை மறவர்வாரிதிபோற்சூழ்ந்தார். (உஉ)

எங்கள்வாழ்வனையநந்தி யெழுந்தருண்மறுகினூடு
மங்குல்வானிரவிப்புத்தேண் மணிநெடுந்தேர்ப்பைங்கிள்ளை
தங்கள்காற்றூட்குடைந்து தரிப்பரிதாகியோட
வங்கண்மாஞாலமெல்லா மதிர்தரநடந்தவம்மா. (உந)

அரவொடுமண்சுமக்கு மடிகளிறெட்டோடும்போர்
பொரவொருகளிநல்யானை போதுமென்றெண்ணிலாத
விரவொடுபுரைநிறத்த வீங்கவுட்சிறுகட்டுங்கு
கரவனைவெண்மருப்புக் கடாக்களிறெழுந்தவன்றே. (உச)

ஆனைமேற்கொண்டும்வாவு மாடல்வெம்பரியிவர்ந்துங
கூனல்வேய்தொடுத்துநான்ற குச்சுடைச்சிவிகையூர்ந்துஞ்
சேனைகாவலரெண்ணில்லார் சிலைமதன்கோலமென்ன
மானவேன்மன்னர்மன்னன் மந்திரிமருங்குசென்றார். (உரு)

நலங்கிளர்மதன்குடைக்கு நகைமணிக்காம்பிலென்ன
விலங்குறுபசும்பொற்காம்போ டெண்ணில்வெண்குடையெழுந்த
புலன்களைவென்றவீரன் போகியமறுகிலெங்கும்
விலங்கினையன்றியந்த விலங்கின்வாலாடிற்றன்றே. (உசு)

மாயைதன்றேல்வியெல்லா மாதர்க்கும்வந்தவன்றே
நாயகன்றன்னைப்பற்றி நாம்வென்றிகொள்வமென்று
போயுறுதன்மைபோலப் புணர்முலைக்கருநெடுங்கட்
டேயுநுண்மருங்குன்மாதர் திரள்பலவெழுந்தவன்றே. (உஎ)

பரிகளின்முழக்குமிக்க பல்லியமுழக்கும்பூட்கைக்
கரிகளின்முழக்கும்வீரக் கழலொடுசெல்லும்வெங்கோ
ளரிகளின்முழக்குமாத ரணிகளின்முழக்குஞ்செங்கைச்
சரிகளின்முழக்கும்விம்மித் தடங்கடல்போன்றவன்றே. (உஅ)

ஆடுவகவரியெங்கு மசைவனசிவிறியெங்கு
மூடுவகுடைகளெங்கு முழங்குவலியங்களெங்கும்
பாடுவவிசைகளெங்கும் பாய்வனகரிகளெங்கு
மோடுவபுரவியெங்கு முயர்வனதூளியெங்கும். (௨௯)

கரிகலமசையாநின்ற கவரிகளுரைகண்மொக்குள்
விரிகுடைமதுகைவீரர் விதிர்க்கும்வாளுகண்மீன்பாயும்
பரிதிரைமுழக்கமார்க்கும் பல்லியமுழக்கமாகப்
பொருகடலெனவெழுந்து போயதுவசவன்சேனை. (௩0)

வேறு.

இன்னவாறெழுந்திரளோடு நந்தியெம்பெருமான்
றன்னைநேர்குருபரனெதிர் சென்றவன்றனைச
சென்னியால்வணங்குவனெனு மோகையாற்சென்றான்
றன்னும்வானவர்தொகுதியும் வியப்பொடுதுதிப்ப. (௩௧)

அத்திறஞ்செலுஞ்சலவினை யகங்குருட்டமணர்
புத்தர்கண்டிவரென்கொலோ வறிதெதிர்போதல்
பித்தனென்றுதம்மிறைவனைச் சொல்லுமிப்பேய
ரெத்திறஞ்செயாரெனச் சிவசரணரையிகழ்ந்தார். (௩௨)

மன்னன்விச்சலன்பாலடைந் தருகரெம்மன்னு
நின்னகர்க்கொருபுதுமையொன் றுற்றதுநீகே
ணன்னிமித்தமொன்றெய்திய தேகொடுநந்தி
தன்னிடத்தொருவன்வரு மென்றெதிர்சாரும். (௩௩)

தண்டநாயகன்றோள்வலந் துடித்ததுதன்னைக்
கொண்டுதான்வருங்குருபர னென்றெதிர்கோடல்
கண்டவோர்கனவிற்பெறு மடிசிலைக்கருதி
யுண்டுபோம்விருந்தினர்தமைத் தேடுதலொக்கும். (௩௪)

ஒருவன்வந்திடுமெனவெதிர் கடற்படையொருங்கு
பரவிவந்திடச்செலுமிவன் றன்னைநீபார்த்துப்
பொருவின்மந்திரக்கிழமைநல் கியவுனைப்போல்வா
ரரவின்வன்றலைப்படிமிசை யிலையெனவறைந்தார். (௩௫)

அருகர்வாசகங்கேட்டலு முளம்வியந்தடிகேள்
விரகிஞன்மிகுதண்டநா யகனுமெவ்விளைவு

கருதினான்கொலோவறிகில முடிவுறக்காண்பம்
வருகநீரிருமின்களென் றிருந்தனன்மன்னன். (௫௬)

தண்டநாயகன்றனதுளந் தங்குறத்தானத்
தண்டநாயகன்றன்மனந் தங்கியதலைவன்
றண்டநாயகன்றனையிகழ் சமண்செருக்கழியத்
தண்டநாயகனெதிர்செல நினைந்தனன்றனித்து. (௫௭)

என்னைக்காண்குவனெவ்வகை செல்லினுமென்று
துன்னற்கோவணமொடுவிரி குஞ்சியுந்தோன்றத்
தன்னைக்காண்குநர்பித்தனென் றெள்ளவென்றனக்குப்
பொன்னைப்போலுநல்வசவனா யகனெதிர்போனான். (௫௮)

## வேறு.

மருவிநின்றவரிவன் மருளனேயென
விரைவிலிங்க கலகலெனவிலக்கினா
ரொருவருங்கண் டிறையுருவுணர்ந்தில
ருருவுகண்டெள்ளுந ருணரவல்லரோ. (௫௯)

அல்லமனாயிடை யாடலுன்னியே
பல்லெழுவாயுடைப் பாலனாகுவன்
கொல்விளவேறெனக் குமரனாகுவன்
வில்லனைவுடல்வளை விருத்தனாகுவன். (௬0)

விஞ்சையர்மகிழ்வுற வீணையொன்றுகைக்
கஞ்சமென்மலர்கொடு கானம்பாடுவ
னஞ்சனவிழிமணி யரிசசிலம்படி
வஞ்சியர்மனமயல் வளரவாடுவன். (௬௧)

இந்திரனிவனென யானைமேற்கொளா
வந்தொருபுடைநரர் மருளத்தோன்றுவன்
பைந்தொடிபெயர்தரு பாணிபோலவே
பந்திமுன்முடங்குளைப் பரிநடத்துவன். (௬௨)

வானிடைக்கண்டனன் மனையிற்கண்டனன்
சேனையுட்கண்டனன் றெருவிற்கண்டனன்
யானெனக்கடிநக ரெங்குந்தோன்றுவன்
ஞானநற்கண்ணினாற் காணுநம்பனே. (௬௩)

ஆடுநேர்தம்முட னாடுநல்லிசை
பாடுநேர்தம்முடன் பாடுமென்மலர்
சூடுநேர்தம்முடன் சூடும்வாள்விதிர்த்
தோடுநேர்தம்முட னோடுமல்லமன். (சச)

பொருவிலாவளநகர் நகர்பொருந்துமானிடர்
வரைவிலாவாடலின் வகைசெய்கிற்பவ
ரொருவரோபலர்கொலோ வுணர்கிலோமென
வெருவினாரல்லமன் விநோதநோக்கியே. (சரு)

மண்ணிடைமறைவுறு நிதியவைப்பினைக்
கண்ணிடுமஞ்சனக் காரன்காண்கைபோ
னண்ணிடுமுணர்வுடை நந்திஎம்பிரா
னண்ணலையறிந்தன னையமின்றியே. (சசா)

உடம்பெலாமுள்ளமா யுருகிக்கண்கணீ
ரடங்குறுதொழுகமெய் விதிர்ப்பயன்பினாற்
றொடர்ந்தெலாவுயிரையுந் தொண்டுகொண்டரு
ணெடுந்தகாயருளென நிலத்திறைஞ்சினான். (சஎ)

தண்டநாயகனிலந் தண்டிற்றாழ்ந்தெழத்
தொண்டராயவனொடு துன்னினாரெலா
கண்டுநீர்விழியுகக் கசிந்தவன்பினா
லண்டநாயகன்றிரு வடியிறைஞ்சினார். (சஅ)

நந்திதனன்பையு நந்திபால்வரு
மெந்தைதன்னருளையு மென்சொல்வாமெனச
சிந்தினர்மலர்மழை தேவர்யாவருந்
துந்துமியதிர்த்தனர் தொண்டரார்ப்பவே. (சகூ)

மயலிலாநகுரு வசவன்வாழ்தரு
மியலினாலல்லம னெண்ணிவந்தருள்
செயலினாலடியவர் திரள்களித்தலாற்
கயிலையேவளங்கெழு கல்லியாணமே. (ருo)

தெரியநற்றண்டநாயகன் றன்செய்கையும்
பெரியவக்குருபரன் பெருமைதன்னையுங்
கரியமெய்ச்சமணர்தாங் கண்டுமன்பில
ரரியவற்றறிதழுக் காறுவெல்வதே. (ருக)

தந்திரமுடிவெனுஞ் சைவதேசிகன்
வந்தெதிர்தனதுதாள் வணங்கினானொடு
செந்திருமகளுலாந் தெருவுட்போகியே
நந்திதன்மந்திர நணுகினானரோ. (௫௨)

தேவருமுனிவருஞ் சித்தராகிய
யாவருமிதனிய லின்னதென்றுளத்
தாய்வருநிலையுடை யம்பராதனை
மூவருமடிதொழு முதல்வனேகினான். (௫௩)

அசைவறுமறிவுரு வாகுமல்லமன்
றிசையுறுமணியணைச் சென்னிமீமிசை
வசையறுவழிநடை வசவதேசிக
னிசையமருலகிடை யேறவேறினான். (௫௪)

கூறருமொளியுடைக் குதிரைத்தேரினான்
வேறொருமணிமய வெற்பிவர்ந்தெனத்
தேறருமணைமிசை தேசிகோத்தம
னேறலுமலர்மழை யிழிந்தவென்பவே. (௫௫)

முரசொடுபல்லிய முழக்கெழுந்தன
துரிசறுமடியவர் தொகுதிகைகுவித்
தரகரவெனுமொலி யண்டகூடமட்
டொருகணமொடுங்குமுன் றோடிற்றென்பவே. (௫௬)

வேறு.

முதனிலைமுதலாமூவிருநிலையின் மூலமாமுரலவாதா"
விதழவிழ்கமலப்பொகுட்டினுணின்ற விலிங்கமோராறெனநின்று
அதன்மிசையிலகுநிட்களம்போல நுவன்றவேழாநிலையாகு
மதன்மிசையமலனல்லமதேவ னமர்ந்தனனமரரும்வியப்ப. (௫௭)

உடம்பொடு பொறிநாற்கரணமற்றுயிரென் றுரைத்திடப்படு முபாதிகளைக், கடந்துளநிலையிற்சோதியாயிலங்கக் கண்டிடுதுரியனைப்போல, நெடுந்தவிசமையவமைத்தசெம்மணிப்பொன் னிலைகளோரேழையுங்கடவா, விடந்தனிவிசும்பென்றல்லமனிருப்ப விருந்தவர்யாவருங்கண்டார். (௫௮)

ஆடினர்சிலவரங்கைகள்கொட்டி யல்லமன்பெரியதோர்புகழைப்
பாடினர்சிலவர்விழிபொழிவெள்ளம் பாய்வுறக்குவித்தகைதலைமேற்
சூடினர்சிலவர்நிலமிசைவீழ்ந்து தொழுதனர்சிலவர்மெய்ப்புளக
மூடினர்சிலவர்பரவினர்சிலவர் முக்கணனடியவரன்றே. (ருக)

இந்தியம்விடயங்கரணமெய்யென்னுமியாவையுங்காண்கிலனெங்கு
மந்தரவணைமேலிவர்ந்திருந்தருளு மண்ணலைக்கண்டவப்பொழுதே
முந்தியபரமாநந்தவாரிதியுண் மூழ்கினனழுந்தினனம்மா
தந்திரமெவற்றுஞ்சிறந்தது சைவதந்திரமெனுமருணந்தி. (சு0)

மண்டலமவத்தைகுணமபிமான மலமிவையனைத்தையுங் கடந்துட், கண்டிடும்வண்ணம்புறத்துநீயெம்மைக் காணியவமைத்தவிச் செய்கை, வெண்டிரைசுருட்டுங்கருங்கடலுலகில் வேறுளர்செய்வ தன்றென்று, தொண்டர்கடுதிக்கும்வசவனைத்துதித்தான்சுரரெலாந் துதிக்குமெம்பெருமான். (சுக)

உன்னருளுளதேற்கமலன்மாலெருழிலு மொருசிறுதுரும்புசெய்கிற்கு
மென்னைநல்வசவன்புகன்றுகைகூப்பி யிணைவிழிபுனலுகவுருகித்
தன்னுணர்கிலனுய்வசமறநிற்பத் தண்கதிர்ச்செம்மணிகுயின்ற
பொன்னரியணைமேல்விசும்புறவிருந்தான் புல்லருமல்லமதேவன். ()

## இருபத்திரண்டாவது
## சூனியசிங்காதனத்திலிருந்தகதி
## முற்றிற்று.

---

கதி - உஉ - ம் திருவிருத்தங்கள் - க0சஎ.

# இருபத்துமூன்ருவது

# ஆரோகணகதி.

### வேறு.

ஒருவருண்ண வொருவர்பசிகெடார்
தரையிலென்னுந் தகுமொழிபொய்த்திட
வருளினல்லம ஞரும்பசிகெட
விரவியுண்ட மிகுதிவிளம்புவாம். (க)

தண்ணந்திங்களிற் றண்ணெனத்தண்கதிர
வண்ணங்குன்ருரு ஞாயிறுவார்சிலைப்
பண்ணங்குன்றுறு பான்மையினுதனுரு
தெண்ணந்தேவ னிருந்தருள்காலையில். (உ)

வசவனுள்ளம் வயல்புகுநீரென
விசயனல்லமன் மேனியடிமா
யசைவிலன்பிறி தொன்றுமறிந்தில
னிசையுமோவிய மென்னவிருந்தனன். (௩)

கழுமணித்தவி சென்னுங்கலத்திடை
யழிவறத்திக ழல்லமனுகிய
செழியநற்சுதை சென்னவசவனும்
விழியினுக்கு விருந்திட்டனனரோ. (௪)

முனிவினைக்கொனு மோனிகைமாறும்
வினையினைத்தெறு மெய்ம்மடிவாலனுந்
தனைநிகர்க்குந் தவிசமர்பூவினை
மனமெனப்படும் வண்டுறவிட்டனர். (௫)

முன்னிருந்த முதுக்குறைவாளரும்
பின்னடைந்த பெரியருமாகிய
மன்னிருந்த மணித்தவிசின்புடைத்
துன்னியெங்கணுஞ் சூழ்ந்தனர்தொண்டரே. (௬)

புண்டரந்திரு நெற்றியிற்பூசிமெய்க்
கண்டியென்னுங் கலனணிவார்சிலர்
பண்டைநான்மறை யின்பயனாகவே
கொண்டவஞ்செழுத் துங்குறிப்பார்சிலர். (எ)

நந்தனந்தரு நாண்மலர்மஞ்சனஞ்
சந்தனஞ்சுடர் தண்புகையாதிகொண்
டிந்தியங்க ளெலாமடங்குள்ளமோ
டந்திவண்ணனை யருச்சிப்பரோர்சிலர். (அ)

தாவில்பூசனை தாம்புரிகிற்பதிற்
பாவெலாஞ்சொலப் பட்டிடுமைம்புலக்
காவல்செய்யுங் கருத்துடையார்தமக்
கேவல்செய்தனன் றென்றுசெய்வார்சிலர். (கூ)

பூசனைத்தொழில் பூண்பதினெண்மடங்
கீசனைத்துதித் தேத்துதனன்றென
ஆசலொத்த வுளமிலராய்ப்புலத்
தூசிசிறப்பத் துதிப்பவரோர்சிலர். (க0)

அங்கலிங்க மயிக்கமிருமென
மங்கலந்தரு மாமறையின்முடித்
தங்குறுந் * தத் துவமசிதன்பொருள்
பங்கமின்றிப் பகர்பவரோர்சிலர். (கக)

பாசமேது பசுவெனப்பட்டதே
தீசன்யார்பதி யெவ்வகையாருயிர்க்
காசுதீர வருளுமருளுடைத்
தேசிகாவெனத் தேர்பவரோர்சிலர். (கஉ)

புறந்தினஞ்செயும் பூசையினன்றெனச்
சிறந்தகஞ்செய்தி யானமருவிமெய்
மறந்திருந்த மனஞ்சிவலிங்கமுற்
றிறந்திடுந்திற மெய்தினரோர்சிலர். (கங)

---

* தத், துவம், அசி. { பதார்த்தம்:—அது-நீ-ஆனாய்.
வாச்சியார்த்தம்:—சீவன், ஈச்சுவரன், பிரமம்
லட்சியார்த்தம்:—பிரமம், கூடஸ்தன், தான்

ஓடிமீளு முயிர்நின்றிடாதெனி
னீடுமோமன நிற்பதன்றுதலால்
வீடுமேவரி தென்றுவிதிமுறை
நாடிவாயு நலிபவரோர்சிலர். (௧௪)

இனையராகி யிருந்தவக்காலையி
லனையணுகிய வல்லமன்றன்னிடை
நினைவெலாமுற நின்றுதமதிடை
மனமிலாத வசவனைக்கண்டனர். (௧௫)

வேறு.

பெரியவர்சிறியவ ரென்னும்பெற்றிமை
யரவணிகடவுட னடியர்தம்முளே
தெரிபவனெவனவன் சிறியனேயென
விரிவுறுமறையெலாம் விளம்புமென்பவே. (௧௬)

ஆவுரித்திடினு நீ றணியுமன்பனம்
மாவுரித்தவனென வணங்கத்தக்கவன்
பூவுரித்தயன்பதம் புனையப்போற்றுற
நாவுரித்தெனமறை நான்குமோதுமால். (௧௭)

வந்தவர்வருபவர் வருகின்றார்களா
மந்தமிலடியர்மாட் டாற்றுஞ்செய்கையைச்
சிந்தனைசெய்கிலன் றேசிகன்செயு
மிந்திரசாலமுற் றிருந்துநந்தியே. (௧௮)

பத்தியிற்றவறிலேன் பாலிருந்துநாந்
துய்த்துடற்சுமப்பதிற் றுறத்தனன்றெனா
மெய்த்தவக்குழாமெலாம் வெருண்டுபோயின
வத்தனற்றண்டநா யகனைவிட்டரோ. (௧௯)

துன்றியமெய்த்தவர் துறந்துபோயபின்
மன்றல்செய்மற்றைநாண் மனையையொத்தொரு
தன்றனிநற்புரந் தனிப்பக்கண்டன
னன்றறிநற்செய னந்திதேவனே. (௨௦)

வழுவினனன்புசெய் வழியையின்றுநான்
குழுவுறுமடியவர்க் குறித்துச்செய்தவிவ்
வொழிவறுமடுசிலுண் டொழிந்திடாதுநீர்ந்
தழிவுறுமேயென வகந்தளர்ந்தனன். (௨௧)

சங்கமபத்திசெய் தண்டநாதனே
சங்கமபத்திசெய் தகைமைபூண்டுளான்
சங்கமபத்தியிற் றவறினேனென்றுற்
சங்கமபத்திசெய் தன்மையெண்மையோ. (உ௨)

இழிப்பினும்வெறுப்பினு மில்லினுள்ளன
வழிப்பினுமுடம்பினை யரிந்துகொல்லினும்
பழிப்பறுசங்கம பத்திசெய்பவ
ரொழிப்பதுபிறவியென் றுலகமோதுமே. (உ௩)

இம்முறைசங்கம பத்தியெய்திய
வெம்முடைநந்தித னெண்ணமுற்றுற
வம்மடையடிசிலுண் டலமன்மாதவர்
தம்முறுபசியெலாந் தணிப்பவுன்னினான். (உ௪)

ஒருவன்யான்சிறுபசி யுடையன்சிற்றுண
விரைவுறவிடுதிநீ வேண்டுமோறுபின்
பரிவுளவடியவர் பாற்செயென்றனன்
பொருவறுவசவனை நோக்கிப்போதகன். (உ௫)

ஐயனுமுனிவுறு தருளும்வண்ணம்யான்
செய்யுநல்வினையென மகிழ்ந்துதேவனைப்
பையவுண்மனையிடைப் பணிந்துகொண்டுபோய்ப்
பெய்யுமென்மலர்மணிப் பீடத்தேற்றினான். (உ௬)

ஏற்றியவருள்வச வேசனெம்பிரான்
காற்றுணைமலர்களைக் கந்தமஞ்சன
நாற்றமென்மலர்நறும் புகைவிளக்கெனப்
போற்றியவிவைகொடு பூசைசெய்தனன். (உ௭)

பூசனைசெய்தபின் போற்றிநின்றுபொற்
பாசனமமைத்துமென் பதம்படைத்துமேல்
யோசனைகைகமழ் கறியுமொள்ளிய
போசனமுறையிடப் புரிந்துநந்தியே. (உ௮)

அருந்துகவெனவடி தொழலுமக்கலந்
திருந்தியவமுதுளோ ரவிழுஞ்சேடியா
தருந்தினனோரிமைப் போதினல்லமன்
பொருந்தியவவரிறும் பூதாகவே. (உ௯)

பின்னருமம்முறை பெய்யவையனவ்
வன்னமுமம்முறை யருந்திப்பின்னரும்
பின்னருமம்முறை பெய்யவுண்டனன்
றன்னுளம்வியந்தனன் றண்டநாயகன். (ருO)

சிறச்சிறிதனயிடுஞ் செய்கையாலரு
ளிறைக்கெழிலுதரவெந் நெருப்பெழுந்ததால்
விறற்கனலம்முறை விறகிடக்கனன்
றுறப்பெரிதெனவெழுந் தோங்கல்போலவே. (ருக)

எண்ணியவெண்ணியாங் கியற்றுமேவல
ரண்ணலும்வருகென வழைத்துநம்மனைப்
பண்ணியபதமெலாம் படையினென்றலுந்
துண்ணெனவனயிடுந் தொழிறொடங்கினர். (ருஉ)

## வேறு.

அளவறுமடியர்க்கெல்லா மாக்கியவடிசிற்குன்றங்
கொளவுறுகூடையோடு கூடைகடாக்கக்கொண்டு
வளமுறுகயிலைக்குன்றம் பெயர்த்திவண்வைத்ததென்னத்
தளவுறழடிசிலெங்க டம்பிரானெதிர்குவித்தார். (ருங)

பருப்பொருபொருப்பெனத்தாம் படைத்தனர்சிலரெடுத்து
விரைப்புதுநெய்கவிழ்த்து விடுத்தனர்சிலர்மணக்கும்
பொறிக்கறிபஎரிதம்பாகு புளிங்கறிபலவுமெல்லா
நிரைத்தொருசிலர்சொரிந்து நின்றனர்முகில்கள்போல. (ருச)

வடைபடுதிகிரியாக மாங்கனிகவண்கல்லாக
வுடைபடுகழைக்கரும்பங் கொண்கதையாகக்கொண்டு
கடைபடுமுலகிற்கெல்லாங் காரியகருத்தன்முன்னர்ப்
படைபடையெனச்சொரிந்தார் படைமுகத்திளைஞர்போல. (ருரு)

குளங்கரையாகவந்தக் குளத்தினுட்பசுவின்றீம்பால்
விளங்குறமமுதவேலை விடுத்தெனவிட்டார்சிலோ
ருளங்கனி † மூவர்செய்யு ளொத்த ‡ முக்கனியுமேனோர்
வளங்கெழுதொடர்புபோலு மற்றைய * பழமுந்தூர்த்தார். (ருசு)

---

† மூவர்செய்யுளென்பது-சம்பந்தர், அப்பர், சுந்தரர் முறையே திருக்கடைக்காப்பு, தேவாரம், திருப்பாட்டுகளை.

‡ முக்கனியாவன:—வாழை, பலா, மா.

* மற்றையபழம்:—முந்திரி, தீவராக்ஷி, பேரீச்சங்கனி முதலியன.

எண்ணிலரிடுவவெல்லா மினியனவின்றென்ன
கண்ணளிமையொடெங்குமுன்னர் கடிதயின்றுதவுறமல்
வண்ணமென்மலர்க்கைவாங்கி வறிதிருந்தனனெங்கோன்றேர்ப்
பண்ணவன்பரிக்குமேடு பள்ளமென்பனவங்குண்டோ. (கஎ)

சற்றினுமுண்கவென்று தமருபசரியாவண்ணஞ்
சற்றினுமிடுகவென்று தம்பிரானுண்ணுகின்றான்
மற்றிதுகண்டுநின்றோர் மட்கலமொழியவேறு
பற்றிலையென்றுநக்கி இருமுகம்பார்த்துச்சொன்னார். (கஅ)

உண்விளையாடல்செய்யு மொருவனைக்கண்டுவேண்மேற்
கண்விளையாடுநெற்றிக் கடவுண்மெய்யடியாரெல்லாம்
விண்விளையாடுஞ்சோலை வியனகரிடத்திற்செல்வப்
பெண்விளையாடுந்தம்மிற் † போனமிடுதற்கெண்ணி. (கக)

பாண்டின்மேலேற்றிவந்தும் பானையிற்சுமந்துவந்தும்
வேண்டியபாகமுற்று வேறுவேறுயவன்ன
மாண்டகைக்குரவனுண்ண வளவிலர்சொரிந்துயர்த்தா
ரூண்டழல்வெறுக்கும்வண்ண மூட்டுவமென்பார்போல. (சo)

மலையெனவமலஞான வாரிமுன்சொரிந்துயர்ப்பா
ரிலைமலர்பசுங்காய்கந்த மிளஞ்செழுந்தண்டாற்செய்த
வுலையமைபல்காயம்பெ யொண்கறியமுதுவேறு
பலபலமுறைமயங்கப் படைப்பர்வல்விரைந்துவந்து. (சக)

குய்கமழ்கறிகளிட்டுக் குவிப்பவர்சிலரெடுத்து
நெய்கவிழ்கையராகி நிற்பவர்சிலர்பிரம்பப்
பெய்கவிழ்சொரியென்றன்பால் பெய்பவர்சிலரனைந்த
கைகமழ்தயிர்க்குடத்தாற் கவிழ்ப்பவர்சிலரங்கம்மா. (சஉ)

இட்டவர்மறியவன்ன மிடுதற்குவிரைந்துசெல்வார்
முட்டுவரெதிர்நடந்து மூரல்கைவாங்கிவாங்கிக்
கொட்டுவரடிசிறந்த கூடைகள்கவிழ்த்தெறிந்து
தட்டுவரனம்படைக்குந் தம்பிரானடியரன்றே. (சங)

இன்னணம்படைத்தவெல்லா மிமைப்பினிலயின்றுசைவ
மன்னவன்வயிற்றின்வெந்தீ வளர்த்தினிர்நீயிரெல்லா

† போனகமிடுதற் கெண்ணியெனப் பாடமுமுண்டு.

மென்னநல்வசவதேவ னிருந்தபல்பண்டங்கொண்டு
முன்னவன்பசியையாற்ற முன்னிமற்றிதனைசசெய்தான். (௬௪)

அவரையும்பயறுமெள்ளு மரிசியுமவலுங்கொள்ளுந்
துவரையுநகடலையுஞ்செஞ் சோளமுநெல்லும்புல்லுங்
குவரையுநகயிலையும்பொற் குன்றமும்போலஞாலத்
தெவரையுங்களிப்புசெய்ய வெங்கணுங்குவிப்பித்தானால். (௬௫)

குன்றெனக்குவித்தவெல்லாங் கொள்ளெனக்கொண்டுநம்பன்
மென்றரைக்கணத்துளின்னு மெல்லனகொணர்கென்ன
வன்றிறற்றண்டநாதன் மனத்திலைவையியற்றி
நின்றிடத்தம்பிரானு நினைவிலைவையயின்றான். (௬௬)

நோக்கினலரித்தவெல்லா நோக்கினற்றொலைத்தானந்தி
வாக்கினலளித்தவெல்லாம் வாக்கினல்வள்ளலுண்டு
போக்கினனிடுதலுண்ண லென்னுமிப்போரின்கண்ணே
ஆக்கினலிருவர்தாமுந் தோல்வியுற்றடைந்தாரில்லை. (௬௭)

படைத்திடுந்தொழின்முயன்ற பத்தனதியல்புமன்ன
துடைத்திடுந்தொழிலினின்ற தூயவனியலுநோக்கி
யடுத்தநற்பத்தரெல்லா மனையவரிருவர்சீரு
மெடுத்துரைத்துளம்வியப்புற் றிறைஞ்சினரொருங்குமாதோ. (௬௮)

இடுதற்குவல்லானந்தி யிடும்பொருளவற்றையுங்கை
தொடுதற்குவல்லானிந்தத் தூயவனென்பரிவரா
றிடுதற்குவல்லாரில்லை யென்பரியவாறுநாயகை
தொடுதற்குவல்லார்தம்மைச சொல்லவுங்கேளேமென்பார். (௬௯)

கண்ணப்பனன்பினனே கறியெனவமைத்தலூனை
யுண்ணப்பனானின்வேறு முயிருணின்றமையனென்று
வண்ணப்பொன்னனையசென்ன வசவதேசிகன்வணங்கி
விண்ணப்பஞ்செய்தான்றுங்க விடைமுகங்கரந்தானேடு. (௭0)

## வேறு.

சென்னவசவன்சொல்லியவச் செயலேசெய்யுஞ்செயலென்று
மன்னுமருளின்மடிவால மாசசிதேவன்வந்துரைப்ப
வென்னையுடையானும்மொழியே யெனதுமனதைத்தேற்றுமது
பின்னையுளதோ † கதகமலாற் பெருநீர்தெளித்தற்கென்றுரைத்து.()

---

† கதகம் - தேற்றான்கொட்டை.

பொறிகள்கரணம்பூதங்கள் புலன்கண்மற்றும்பல்வகைய
கறிகளாகவாருயிரே கலந்துண்பதமாநீயுண்ணப்
பெறுகதிலன்யானெனநின்று பிறவிப்பிணிதீர்மருத்துவன்ற
னறியமலர்மெல்லடிபணிந்தா னமையாளுடையவருணந்தி. (௫௨)

வசவனிலைகண்டருண்ஞான வள்ளலல்லமப்பெயரான்
பசியின்வந்தேனலன்பொருட்குப் படர்காமக்குவந்திலன்யான்
கசியுநினதுமனத்தன்பு காணவந்தேனென்றேத்தி
யிசையின்மலியுமரனடியார் யாருமகிழவெடுத்தணைத்தான். (௫௩)

கண்போலுயிர்கள்கண்டறியக் கதிர்போற்காட்டும்பெருமானே
யுண்போன்யானூட்டுமுனக் கூட்டுவேனென்றெழுந்தமையா
லெண்போதென்போற்பேதைமையா ரில்லையில்லையென்றனன்பின்
பண்போடமலனெதிர்நின்றான் பத்திவடிவமாயினான். (௫௪)

செம்மைநெறியானருணந்தி தேவன்றன்னைப்புகழ்வமோ
பொய்ம்மைதீருமல்லமனைப் புகழ்வமோவிங்கன்றியிவர்
தம்மைவிழியாற்காண்பதற்குத் தவஞ்செய்துடலமிதுபெற்ற
வெம்மையாமேபுகழ்வமோ வெனநின்றனர்தம்பிரானடியார். (௫௫)

பரிந்தநந்திமுகநோக்கிப் பசித்தாரென்றுநீதளரப்
பிரிந்தவந்தவடியர்தமைப் பிறங்கலனையநின்மாடத்
தருந்தவணங்கிக்கொணர்தியென வறிவானந்தமயன்கூற
விரைந்துவிடைகொண்டெழுந்தன்புவெள்ளஞ்சென்றதவரிடத்தில்.

சென்றவசவனருட்குரவன் றிருமேனியிற்றானங்கணிந்த
மன்றன்மலருஞ்சந்தனமும் வடிவிற்றிகழமடிநிமிர்ந்து
தின்றன்முதலகறிமணக்கத் தேக்குவிடுத்துமுகமலர்ந்து
கொன்றைகமழ்வேணியனடியார் குழாங்களிருப்பக்கண்டனனால். ()

கண்டநந்தியடிபணிந்து கடையேன்செய்தபிழையெல்லா
முண்டுபொறுமின்வருகவென வுள்ளங்களிப்புற்றாங்கிருந்த
தொண்டர்வசவநின்பெருமை சொல்லவெளிதோவயிறாரப்
பண்டுபோலவாய்கைதொழிற் படாமலயின்றேமின்றென்று. (௫அ)

தேவருண்ணவவியுணவு செந்தீமுகத்திலிடுதல்போ
லோவில்யாங்களெல்லேமு முண்ணவடிசிலல்லமன்ற
னாவின்மருவவிடுநினையோர் நாவோபுகழுந்தரத்ததென
வாவியனையநந்திசீ ரமலனடியார்புகன்றேத்தி. (௫௯)

உலகிலொருவன்சிவயோகி யுண்டதம்மசராசரமா
மலகிலுயிர்களெலாமுண்ட தாகுமென்னமறைகூறு
மிலகுமுரையைக்காட்சியா னின்றிங்குணரவுணர்த்தினன்
கலகவினைகடீர்க்குமருட் கண்ணன்றிகழல்லமதேவன் (௬0)

ஆதலாலவ்வல்லமனை யருத்தலெம்மையெலாமருத்தல்
பாதமவனைப்பணிதலெமைப் பணிதலாகுமென்ஞான்றும்
பேதமில்லைநல்வசவப்பெயரோய்செல்கவென்னமலை
மாதுதழுவக்குழைந்ததோள் வள்ளலடியார்தமைவணங்கி. (௬௧)

மீண்டுநந்தியல்லமனார் மென்பூங்கமலவடியிறைஞ்சி
யாண்டபெருமானடியார்க ளன்னையுண்டவுணவுகரு
வீண்டுமெகவுமுண்ணல்போ லெந்தையுண்டவெலாமுண்டு
பூண்டமகிழ்வோடிருந்தனர்நீ புனைந்தமலரும்புனைந்தென்றன். ()

மாறனடித்தவடிபட்ட மன்னுமுயிரின்றிறமெல்லா
மீறில்புகழ்கங்கணவசவ னிட்டவடிசிலுண்டுபசி
யாறியிருந்தவாதலினு லல்லமன்பூரணனென்னக்
கூறுமொழிமெய்மெய்யென்று கூறியுலகங்களித்ததால் (௬௩)

இவ்வாறருந்தியமைதிபெறு மெங்கள்பரமயோகிதான்
றெவ்வாகியவைம்புலன்வென்ற திறல்கூர்வசவன்றனைமகிழ்ந்து
சைவாகமமுநான்மறையுஞ் சாற்றும்பொருளையுணர்த்துதற்குச
செவ்வாய்மலரத்திருவுள்ளஞ் செய்துதனியீற்றிருந்தனனல் (௬௪)

இருபத்துமூன்றாவது

ஆரோகணாகதி

முற்றிற்று.

---

கதி - உ௩ - இ திருவிருத்தங்கள ௧௩௧௧

## இருபத்துநான்காவது

# மனோலயகதி.

### வேறு.

மயங்குதலின்றி மனோலயமெய்திற்
சயந்தருமுத்தி தலைப்படுமென்று
நயந்தருமல்லம நாதன்விளங்க
வியம்பியவண்ணை மியம்புதுமன்றே. (க)

பத்தர்கடங்கள் பசிக்குணுமையன்
றத்துவநல்கு கருத்தொடுதங்க
வத்தலையன்பொ டகங்குழைகின்ற
வித்தகநந்தி விளம்புவனன்றே. (உ)

விருப்புவெறுப்புரு வாம்விடயத்தோ
டிருக்குமயற்சக மென்பதிலாமற்
பரப்பிரமத்தியல் பார்ப்பதெனக்குத்
தெரித்தருளென்றுரை செய்துதுதித்தான். (௩)

அண்ணலுமார்வ மடைந்தருணந்தி
மண்ணுலகோர்தளை மாறுபுஞானக்
கண்ணுறுமாறு கடாவினனென்று
புண்ணியனோடு புகன்றிடுகின்றான். (௪)

யானெனதென்ப திருந்திடுகாறு
ஞானமுறாதது நண்ணிலனாகிற்
றானிலையாத சகந்திகழ்கிற்குந்
தீனமிலாத சிவந்திகழாதே. (௫)

கறங்கெனுமாறுழல் கின்றகருத்துப்
பிறந்திறவாத பெரும்பிரமத்தி
லிறந்திடில்யானென தென்னுமகந்தை
மறைந்திடுமன்றி மறைந்திடுமோதான். (௬)

யானிதுசெய்வ லெனக்கிதுசெய்வ
ரேனையரென்ன விருந்தகருத்தான்

மேனிகழ்முத்தி விரும்பவிருட்டாற்
பானுவைமேவுறு பற்றைநிகர்க்கும். (௭)

இருவினைதாம்வரும் யானெனலாலவ்
விருவினையால்வரு மின்பொடுதுன்ப
மிருவினையானென வின்றெனிலில்லை
யிருவினையில்லெனி லில்லைபிறப்பே. (௮)

மனத்தையடக்க மனந்துணையாகும்
பினைத்துணையின்றது பெற்றனனாயிற்
றனிச்சிவமேயொரு தானெனவாழ்வ
னினைத்துமறந்து நிலத்துழலானே. (௯)

வாரணமாகு மனத்தையடக்கிற்
காரணமாயை களைந்தொழியாத
பூரணமாகிய போதமடைந்திட்
டாரணமோது மரும்பொருளாவான். (௧௦)

வேறு.

விரிந்தநெஞ்சங்கருவியாம் விடயமுணரவிரியாம
லொருங்குநெஞ்சங்கருவியாந் தன்னையுணரவொருங்காமல்
விரிந்தநெஞ்சமுடையவனை விடாதுபிறவியென்றுணர்க
வொருங்குநெஞ்சமுடையானை யுறாதுபிறப்பென்றுணர்கவே. (௧௧)

அந்தக்கரணசுத்தியே யறிவையறிதற்சாதனமவ்
வந்தக்கரணசுத்திதனக் கறையுங்கருமமாரணங்க
ளந்தக்கரணசுத்திதா னாவதவாவற்றிடுதலே
யந்தக்கரணசுத்தியினா லடைவன்பிண்டப்பெயரன்றே. (௧௨)

ஆசையறுதல்வீட்டின்ப நேரேயடையக்காரணமா
மாசையறுதலலதில்லைப் பலநூலினைத்துமாய்ந்திடினு
மாசையறுவோன்சிவனாத நிண்ணமெனநன்றறிந்திருந்து
மாசையுறுதலென்கொண்டோ வந்தோமனிதரறியேமே. (௧௩)

ஆசுதீர்ந்தமனத்தினிடை யன்றியுணர்வுதோன்றாது
மாசுதீர்ந்தவாடியிடை யன்றிவதனந்தோன்றுமோ
பாசநீங்குபரஞ்சுடரை நினைக்குநினைவாற்பற்றுமனங்
† காசநீங்குகண்போலத் தன்னைக்காணவிளங்குமால். (௧௪)

வானமல்லேன்வளியல்லே னழனீரல்லேன்மண்ணல்லேன்
ஞானமல்லேன்வினையல்லே னானேசிவமென்றெண்ணினோ

---

† காசம் - கண்ணை மறைக்கும் ஓர்வித நோய்.

ஞானமில்லாவொருசிவமே யாவனிவ்வாறுன்றொதா
னீனமெல்லாமுடையவுடம் பெடுத்துச்சுழலுமெஞ்ஞான்றும். (கறு)

தன்னைச்சிவமென்றறிந்தவனே யறிந்தான்றன்னையுண்மையாத்
தன்னைச்சிவமென்றறியாதா னெறியானென்றுந்தன்னுண்மை
‡ தன்னைச்சிவமென்றறிந்தவன்றே தாழ்வாம்பாசந்தனைநீப்பன்
றன்னைச்சிவமென்றறியாதான் றனக்குப்பிறப்பேதுணையாகும். ()

தன்னைப்பேதமாய்க்காண்கை சகத்திற்காணப்பட்டதாந்
தன்னைப்பேதமறச்சிவமென் றறிவோன்ஞானிதாவொருவ
னென்னக்கருதிமறையதுநீ யானேயென்னவத்துவிதந்
தன்னைப்புகலுங்கண்டதனைச் சாற்றன்மறையின்கருத்தன்றே. (கஎ)

தூய்தாகியநெஞ்சுடையார்க்குத் தாமேசிவமாத்தோன்றுமாற்
றீதாகியநெஞ்சுடையார்க்குத் தெரியவபேதமிகவின்றி
வேதாகமங்கள்விளம்பிடினும் விளங்காதென்றும்வேறென்னும்
வாதாலழிவரவர்மாயை மயக்கமயங்குமதியினர். (கஅ)

நெஞ்சஞ்சோகம்பாவனையி னிற்கநிறுத்திவிடயங்க
ளஞ்சுந்துறவாத்துறந்தசிவ யோகியொருவனடியிணையிற்
றுஞ்சுந்திருமான்முதலமர ருள்ளமவனைத்துதித்திறைஞ்சா
தெஞ்சுந்தவமாமுனிவரிலை யெனநான்மறையுமியம்புமால். (கசு)

என்றுகருணைபொழிவிழியெங் கோமானுண்மையினிதியம்ப
நின்றவசவராயனுள மழல்சேர்மெழுகினெக்குருகிச்
சென்றுகுரவனடிபணிந்தான் சென்னவசவன்முதலாகத்
துன்றுசரணருய்ந்தனமியா மென்றுதுதித்துத்தொழுதனரால். (உ0)

இவ்வாறருளாற்றனையுணர்த்தி யிருந்தஞானவியல்வீர
சைவாசிரியனல்லமனித் தரையிற்பருவந்தலைசிறப்ப
வுய்வானினைந்துதனைநோக்கி யுற்றவடியார்க்குபதேசஞ் [ன்.
செய்வானியன்றவடிவொடுசென்றருள்செய்செயல்செய்தலாயி

**இருபத்துநான்காவது**

**மஹேலையகதி**

**முற்றிற்று.**

---

கதி - உச - இ திருவிருத்தங்கள்-ககஙஉ.

---

‡ தன்னைச்சிவமென்றென் றறிவனன்றே பாசந்தனை நீப்பன் எனவும் பாடம்.

## இருபத்தைந்தாவது

# மான்மியகதி.



### வேறு.

வியனிலமேவிய விழுமியோர்க்கெலாஞ்
செயிரறுமல்லமன் செய்தநன்றியைக்
கயிலையினுதல்விழிக் கடவுடன்புடை
மயிலியலொடுசொலு மாறுகூறுவாம் (௧)

ஆயிடையருணந்தி யாதிமாதவர்
நேயமோடமர்வுற நிறுவியல்லமன்
மாயிருஞாலமேன் மானிடர்க்கெலாம்
போயருள்செயுந்தொழில் பூண்டுளானரோ. (௨)

இன்னணமல்லம னிருநிலத்துறத்
தன்னிகர்கயிலையிற் சிங்கந்தாங்கிய
பொன்னணையிசையமர் புராரிதன்னொடு
மின்னணிமுலையுமை விளம்பன்மேயினள். (௩)

அல்லமனருள்பெறக் கடைந்தநந்தியோ
டெல்லையினின்கண மெனதுநற்கலை
மெல்லியனிலமிசை மேவிசெய்ததென்
† சொல்லுதியெனவுமை யிறைவன்சொல்லினன். (௪)

நந்திநல்வசவனு நாமங்கொண்டமர்ந்
தந்தமிலெம்மடி யவரையாமெனப்
புந்திசெய்தவர்விழை பொருளளித்தமண்
சிந்தியநிலமிசைச் சிறப்புற்றனரோ. (௫)

அறஞ்செயுநின்கலை யாருமங்கைபோய்ச்
சிறந்துளவுலகின்மா தேவிப்பேர்பெறீஇ

---

† சொல்லுதியெனவுமை யென்பதற்கு சொல்லுவாயென்று உமையவள்கேட்கவென் றுரைகொள்வது சிறப்பு.

மறஞ்செயுமதன்வலி மாளமாய்த்தெலாந்
துறந்தனள்குரவனைத் துருவிப்போயினள். (சு)

நண்ணியாங்கண நாதர்தாமுமக்
கண்ணகன்ஞாலமுற் றெம்மைக்காணிய
வண்ணநல்வினைகள் பல்வகைபுரிந்தவ
ரெண்ணியபலாக ரிடத்துவைகினார். (எ)

அளக்கரும்விரதரா யவரிருந்திடத்
துளக்கமினிலையுடைத் தூயனல்லமன்
கொளக்குறைபடாதபே ரின்பங்கூட்டுணை
விளக்கினனுலகினில் வீரசைவமே. (அ)

வேறு.

எவ்வகைச்சமயத்திற்கு மிறைவனேயெனினுநேயஞ்
சைவநற்சமயத்தற்றான் சைவத்தும்வீரசைவத்
தவ்வவர்பிறவிநீக்கு மல்லமன்விருப்பமுள்ளான்
மைவரிக்கயனெடுங்கண் மடவராலென்றான்வள்ளல். (கூ)

சமயமெவ்வகையினுந்தான் சைவமேலாயதென்கொ
லமையுநல்வீரசைவ மதனினுஞ்சிறந்ததென்கொ
லிமையவர்பரவுமுக்க ணெம்பிரானருள்செய்யென்ன
வுமையவள்வினவவேழ முரித்தவன்விளம்புமன்றே. (க0)

உரைக்குமெச்சமயத்திற்கு முத்தரபாகஞ்சைவந்
தரிக்குமச்சைவத்திற்குத் தரமெனவீரசைவந்
தெரிக்குநற்காமிகாதி சிரத்தினிற்றிகழுங்கண்டா
யரிக்குரற்சிலம்பரற்று மடிமலர்த்தடங்கணல்லாய். (கக)

புறந்தருசமயம்புக்குப் புறமலாச்சமயத்தெய்தி
யறந்திகழ்சைவமுற்றுங் கதிற்சரிதாதியாற்றிச்
சிறந்துளவீரசைவஞ் சேர்ந்தபின்வீடெண்ணு
நறுந்தளிர்கவற்றுமேனி நனைமலர்வல்லியன்னாய். (கஉ)

அருமறைமுடியுஞ்சீர்சா லாகமமுடியுமொத்துப்
பொருமறமிலாமன்முற்றும் பொருளினைவிளங்கக்காட்டித்
தருமுறையதனால்வீர சைவமேதலைமைத்தாமிவ்
விருமறுவறுநன்னூலு மிதிற்பிரமாணமாகும். (கங)

ஒன்றொருவிடயந்தன்னி லுறுசுவைநிறைவென்றாக்கி
யென்றுமெம்முகத்தளித்திட் டெம்பிரசாதங்கொண்டு
துன்றுறுகருமமுன்னாத் தூய்மையிவ்வீரசைவத்
தன்றியேயொருமார்க்கத்தி னடுக்குமோவடுக்கண்மாதே.

ஆதலால்வீரசைவத் தறிவினையறியச்செய்தான்
மாதர்மார்தேவியாமுன் வண்கலைமாதினுக்கு
மேதையாம்வசவனாதி மெய்யடியவர்க்குஞான
போதகாசிரியனென்னும் பொருவிலல்லமன்வேற்கண்ணாய்.

பருவபேதத்தாற்பேதப் படும்பொருள்பருவங்கண்டு
திருவின்மாமுனிவர்யோகர் சித்தர்கண்முதலானோர்க்குப்
பொருவிலாவல்லமப்பேர் புண்ணியன்புகன்றாட்கொண்டான்
குரவவார்குழன்மடந்தா யென்றனன்குன்றவில்லி.

அம்மையுண்மகிழ்வுபொங்க வல்லமன்பெருமைகேளா
மம்மர்செய்துளங்கலக்கு மாயையைக்கடந்தானென்றன்
மெய்ம்மைநின்பவளவாயால் விளம்பநானறிந்தேனென்று
மும்மதில்வலிதொலைத்த முக்கணாயகனைத்தாழ்ந்தாள்.

அங்குமைமாதினோடு மல்லமன்பெருமைகூறித்
திங்கள்வெண்முகிழ்புனைந்த செஞ்சடைப்பரமன்மேவ
விங்கருண்மேகமென்னு மிணையிலெங்குருகுகேசன்
மங்கலமுத்தியின்பம் வழங்குமத்தொழிலினின்றான்.

மூத்தவரிளைஞர்நோயர் முகிழ்முலைமாதர்நல்ல
நீர்த்தொழிலாளர்பொல்லாத் தீத்தொழிலாளரென்றும்
பார்த்திலன்யாவர்மாட்டும் பரிந்தருண்மாரிபெய்து
காத்தனனமலஞான காரணன்குருகுகேசன்.

இன்னவாறருளினானே யிவருறவிவர்வேறென்னா
தன்னைபோலுயிர்கட்கெல்லா மாரருளொருங்குசெய்தே
யென்னையாளெனக்கொண்டாளு மிணையடிக்குருகுகேசன்
மன்னுமாதவர்கணெஞ்ச மலர்தொறும்வாழாநின்றான்.

எல்லொளியிரவிபோல விருண்மலமிரித்திலங்கு
மல்லமன்சரிதமோதி லறம்பொருளின்பம்வீடாம்
நல்லனபயனோர்நான்கு நண்ணுவனிதனைக்கேட்க
வல்லநல்வினையினானு மற்றவைமருவிவாழ்வன்.

மதியிலார்மதிஞராவர் மகவிலார்மகவுயிர்ப்பர்
நிதியிலார்நிதிபடைப்பர் நிலையிலார்நிலைத்துவாழ்வர்
பதியிலார்பதிகிடைப்பர் பழுதிலிவவிருபத்தைந்து
கதியிஞனிரம்புகாதை கற்றவர்கூறக்கேட்பின். (உஉ)

## நூல்செய்தகாலம்.

பார்கெழுசகாத்தமூவைஞ் ஞூற்றெழுபாஞன்காவ
தாகியகரநாமங்கொ ளாண்டுறுவிடைஞாயிற்றிற்
சீர்கெழுமல்லமன்றன் றிருவிளையாடற்காதை
தார்கெழுமிடற்றெங்கோமான் கருணைகொண்டியம்பிஞனே. (உங)

மாசறுமல்லமப்பேர் வள்ளறன்சரிதந்தன்னி
ஞசறுஞ்செய்யுளெல்லா மன்புடன்படிப்பார்தம்மை
யேசறுமனிதரென்ன விசைப்பதோகரித்தோல்போர்த்த
வீசனென்பதுவேயன்றி யேதுமற்றேதுவம்மா. (உச)

## வாழ்த்து.

புண்ணியருலகில்வாழ்க புலஞ்செறுநோன்புவாழ்க
பெண்ணொருபாகன்பூசை பேணிவாழடியர்வாழ்க
கண்ணுதலொருவன்சார்ந்த கற்புடைச்சைவம்வாழ்க
வண்ணலல்லமன்சீர்கேட்கு மாதரவாளர்வாழ்க. (உரு)

பொருவரும்பூதிவாழ்க பூதியையணிவோர்வாழ்க
திருவளர்கண்டிவாழ்க சிறந்தவஞ்செழுத்தும்வாழ்க
குருவருள்வாழ்கமெய்யைக் கூறுநாவோர்கள்வாழ்க
வெருவரும்பிறவிதீர்க்கும் வித்தகர்வாழ்கவாழ்க. (உசு)

அல்லமன்சரிதசசெய்யு ளதனிலோர்செய்யுள்கற்க
வல்லவாருத்தமோத வல்லவர்வரையவல்லோர்
செல்வமீதென்னவன்பாற் செவிப்புலனிறைக்கவல்லோ
ரெல்லவரும்பூமீதி லென்றும்வாழ்ந்திடுகவன்றே. (உஎ)

இருபந்தைந்தாவது
மான்மியகதி
முற்றிற்று.

---

ஆ கதி - உரு - இ திருவிருத்தங்கள் - ககருசு,

பிரபுலிங்கலீலை
முற்றிற்று.

---